# காகபுசண்டர்

## பெருநூல் காவியம் 1000



# காகபுசுண்டர்
# பெருநூல் காவியம் 1000

## பொருளடக்கம்

உ குருவே துணை.

# காகபுசண்டர்

## திருவாய் மலர்ந்தருளிய

# பெருநூல் காவியம் 1000

### காப்பு

ஆதியென்ற மூலமந்திர மைந்தெழுத்தை
அன்புடனே மனதில்வைத்து ஓங்காரத்தை
நீதியுடன் றான்பணிந்து பெருநூல்தன்னை
நிகழ்த்துதற்கு ஐங்கரன்றன் பாதங்காப்பு
சோதியென்ற சுழிமுனையைத் தியானஞ்செய்து
சுந்தரமாய்ப் பிராணாயம் விரித்துரைக்கப்
பாதிமதி யணியீச னுமையாள்காப்பு
பக்தியுள்ள வாலையின்றன் பாதங்காப்பே. 1

பாதமதைச் சிரசில்வைத்து யுகங்கள்தோறும்
பண்பாகத் தானிருந்து கோடிகாலம்
சாதகமாய்ப் பிரளயங்கள் முடியும்போது
தனியாகக் கல்லாலின் மேலிருந்து
சேதமொன்று மில்லாமல் மவுனமுற்று
சிறப்பாக எத்தனையோ யுகங்கள்கண்டு
வேதமென்ற பிர்மத்தி லடங்கிக்கொண்டு
வெகுகோடி யுகங்கள்வரை யிருந்திட்டேனே. 2

இருந்திட்டேன் காகத்தின் சொரூபமாக
இன்பமுடன் வசிஷ்டருந்தான் யென்னிடத்தில்
வருந்தியே வந்துயென்றன் முன்னேநின்று
வாய்திறந்து கோடியுகம் கல்லால்தன்னில்
பொருந்தியே யிருந்துதான் வந்தீரையா
புகழாக யிருந்துவந்த விதங்கடன்னை
திருந்தியே சொலவேணு மென்றுகேட்க
செப்பினே னுண்மைதனைத் திறந்துதானே. 3

தானென்ற ஞானமதை வெளியதாகத்
தான்சொல்ல வேணுமென்று வசிஷ்டர்கேட்க
ஏனென்ற சித்தர்களும் வசிஷ்டரோடே
இட்டமுடன் றான்சேர்ந்து ஞானந்தன்னை
தேனென்ற அமுர்தம்போல் சொல்லவேண்டும்
திருவருளால் கடைத்தேறச் செய்ய வேண்டும்
கோனென்றே வேண்டினதால் வசிஷ்டருக்கு
குறிப்பாக ஞானமதைச் செப்பினேனே. 4

செப்புகிறேன் சுழிமுனையின் பாகந்தன்னை
திறமாக யிருகலையுந் தெரியவேதான்
முப்புமுறை வகையோடு ஆறாதாரம்
முப்பாழும் அப்பாழாய் முடியுகின்ற
அப்புவுடன் ஞானதிருஷ்டி தூரதிஷ்டி
அடைவான ரவிமதிமுச் சுடரின்நேர்மை
இப்புவியில் அண்டபிண்டம் காயசித்தி
இன்னதென்றும் திரிகால மியம்புவேனே. 5

திரிகால வர்த்தமுடன் ஆறாதாரம்
செவிதூரம் கேட்பதுடன் கெவுனம்பாய்தல்
அரிகால மறிவதுடன் சடலத்தாலே
மருவுடலைப் பகுத்தறியும் வர்த்தமானம்
செரிகால மித்தனையு மறிதல்கொண்டு
சேர்ந்தோம்நா மிருவருமே யின்று காலம்
குறிகாத மறிந்துணர்ந்த காலந்தன்னிற்
கொண்டுணர்ந்து கூறியே நோக்கினேனே. 6

நோக்கினே னிதையறிந்து வசிஷ்டர்தானும்
நுவலுமென்று சொல்லவுமே அடியேனுந்தான்
ஆக்கியே யெதைவெளியாய்ப் பேசவேண்டும்
சாற்றுமெனக் கேட்கவுமே வசிஷ்டரப்போ
பாக்கியில்லா தெல்லாமுஞ் சொல்லவேண்டும்
பண்பாய்மா னிடர்பிறக்கு மார்க்கமுந்தி
தாக்கியே சொலவேண்டு மென்று கேட்க
அந்தரமாய் வசிஷ்டருக்குச் சொல்லினேனே. 7

சொல்லுகிறேன் பெண்களுக்குக் கெற்பப்பூச்சி
தோன்றுதொட்டு நாமான வாருதன்னை
கில்லுகிறேன் பெண்மரங்கள் காய்ப்பதேபோல்
கெற்பமங்கை முன்னாடிக் கன்னிகாலம்
தொல்லுலகில் சதைக்குஞ்சு வுள்ளிருக்கும்
துடர்மனதை வென்றவர்கள் கண்டகாட்சி
நில்லுகிறேன் புருஷரன்றிப் பிள்ளையுண்டோ
நீர்வினவுஞ் சொல்லுகிறேன் மார்க்கந்தானே. 8

மார்க்கமிந்தப் புல்பூண்டு செடிமரங்கள்
மண்ணிருந்த நீருண்டு காய்த்தாலுந்தான்
ஆர்க்கிந்த வகைதெரியு மரத்திற்பெண்ணும்
ஆண்மலடு யென்றுசொல்லக் கேட்பதுண்டு
பார்க்குளிதை நீரறிவீர் மண்ணினுள்ளே
பலபேரும் பார்த்தறிவார் யீசல்புத்தை
நோக்குமிதை யுள்ளறிந்து வெடித்த காலம்.
நுட்பமே வாய்திறக்கும் பூமிதானே. 9

பூமிபோற் பெண்ணணங்கும் புருஷராலே
பூத்திறக்கக் கூடியதால் வாய்திறந்தே
காமியாய் நாமிணங்க நீரைவாங்கி
கருவுருவாய் நாமானோம் சிசுவின்பூச்சி
நேமியோ தந்தையுட நீரையுண்டு
நீண்டுடலும் பெரிதாகிச் சிலதுநாளிற்
சாமியே யாயிடவே சாப்பாடுண்டு
தர்க்கித்தேன் நீபாரு ஆண்பெண்ணேன்றே 10

ஆண்பெண்ணின் கூர்பிதங்கள் மார்க்கந்தன்னை
அறைகிறேன் பின்னாடி யதன்முன்னேதான்
காணிந்தச் சூரியனார் மடிந்தபோது
கங்குலது வந்துவிடும் மறைவார்சீவர்
பூணிந்தச் சூரியனார் வருவார்வந்தால்
பூமிதனிற் புற்றீசல் வந்தாப்போலத்
தோணிந்தச் சீவர்களும் புற்பூண்டோடு
தோன்றிடுவர் மண்ணிலிருந் தேறுவாரே. 11

ஏறுவார் மண்ணுடைய நிறமேபோல்
வெப்படியென் றெண்ணாதீர் நிறமண்மாறும்
பாருபார் குழந்தைகள்போல் வருவாரப்பா
பந்தடிக்கும் பாவனைபோ லோடுவார்கள்
நீருயா ரெனவினவக் கூறுவார்போல்
நிமிஷம்உற வாடியவர் பிரிந்தார்பின்னே
வாருவா ரவர்களுமே வந்தபோது
வாசிமூச் சாடினதோ ருயரந்தானே. 12

தானிந்த மூச்சிருந்து வருமேவாசல்
தாழ்மூக்கு முதல்வாசல் அகலந்தானே
தேனிருந்த மண்ணதனிற் கண்டகாட்சி
செப்பினேன் பெண்ணாணும் பிறக்குமார்க்கம்
வானிந்த வாகாய மண்ணில் மாந்தர்
மங்கையரின் கெற்பமதி லாண்பெண்ணான
ஊனிந்தக் கெற்பக்கூர் சொல்லிவந்தேன்
உத்தமனே ஆண்கெற்பம் கேளும்நீரே. 13

## ஆண்கெற்ப லக்ஷணம்

நீரிப்போ யாபகமாய்க் கேட்கவேணும்
நிகழ்காலந் தெரியாதோ ரறியாரய்யா
கூறிப்போ விந்துவினி லிரண்டுமாதங்
கொண்டகெற்பக் கருக்குழியில் பிள்ளையாச்சு
மாறிப்போந் தலைகீழாய்ப் பிறக்குமுன்னே
மார்பிருக்கு மேசிசுவின் தலைதானப்பா
பாரிப்போம் பாவையரின பள்ளநெஞ்சல்
பய்யலென வேபிறக்கும் கெற்பமஆணே. 14

ஆணென்றார் தாய்மார்பு பள்ளம்நெஞ்சு
அடிவயறின் மேற்றொப்புள் யேல்லதானும்
ஆணென்றார் தாய்விலாவில் யிருகையுந்தான்
அமைந்திருக்கும் பாதம்ரெண்டுந் தொப்புள்மத்தி
ஆணென்றாற் கீழ்மேலும் யேறுமபாரு
ஆண்புழுவு மிப்படியே அங்கசேட்டை
ஆணென்றார் தாய்மூலப நெஞ்சின்தீயும்
அமைதிகொண்டு வேகும்காண் கனலின்தீயே. 15

கனலென்ற மூலகனல் அனல்மேலேறி
கால்வீசி மேல்நோக்கி மண்டையேறும்
அனலென்ற ததுவேறித் தீய்ந்தபாண்டம்
ஆணாகி முகமீசை யமர்ந்துதய்யா
புனலென்ற யித்தீயாற் பிழைக்கச்செய்து
புருவநடு வாகிவரக் கண்ணதாச்சு
கனலென்ற அத்தீயு மடியிற்சேர
காயென்ற பீசவிரை திரண்டுபோச்சே. 16

திரண்டுருண்ட பையதனிற் கனலும்நின்று
தீயேறி நின்றவிடம் நெஞ்சமையா
பிரண்டுருண்டு மேலேறி நெத்திநின்றால்
பெருமூக்கு மத்திநடு கோபமாகும்
மருண்டுருண்டு மேலேறி உச்சிநின்றால்
வாசிவலு காயசித்தி யோகசித்தி
உருண்டுருண்டு யிப்படியே கீழ்மேலுந்தான்
உடல்நடுவில் மூலம்வந்தால் சாந்தகுணமாமே 17

சாந்தமே சொல்லுகிறேன் பெண்ணணங்கு
தாய்வயற்றி லேயுதிக்கு மார்க்கந்தன்னை
சாந்தமே முன்சொன்ன கெற்பப்பூச்சி
சாய்ந்துதலை விலாவொட்டி விலாக்கால் நீட்டி
சாய்ந்துமே முன்புரத்தை நோக்கித்தானே
தலைகாலும் விலாவயிற்றில் சார்ந்தகூரு
சாய்ந்துமே பெண்புழுவும் தந்தைநீரை
தானுண்டு வளர்ந்தது கனற்றீயாலே 18

தீயான மூலகனல் சேர்க்கையாலே
சேர்விந்து வுண்டுணர்வு வளர்ச்சியாலே
தாயான அவ்வயிற்றின் அச்சினாலே
தான்ரெண்டு விதமாச்சு வித்தினாலே
பேயான பிச்சையினாற் காமத்தீயால்
பெருவிளைவு வுண்டாச்சு கொக்கோகத்தால்
வாயான ததுதிறக்கும் நவத்துவாரம்
வாசிவெளி யேறினது வாசல்தானே. 19

## தாபரசங்க உற்பத்தி - மூச்சுப்பேச்சு விபரம்

வாசலிந்த மண்ணதனில் வந்தாற்பூண்டு
மங்கையரின் வாசல்வந்தாற் புதல்வராச்சு
பாசையென்றா லிதுதானும் சரமதாகும்
பரையுயிரும் நரசிவா மூச்சதாகும்
கூசலென்ன நாக்குயிரும் வந்தேயாடில்
கூக்குரலாஞ் சாஸ்திரமும் பேச்சதாகும்
வாசமென்ன கீழ்நோக்கில் அபானனாகும்
மண்டைசெவி நீட்டிடவே ஓசையாமே. 20

ஓசையென்ன யிவ்வுயிருங் கோஷம்வந்தால்
வுருமுதண்டு உச்சிவந்தால் யோகமாகும்
ஆசையென்ன பீஷம்நின்றால் அண்டமாகும்
அவ்வுயிருங் காலில்வந்தால் நடையதாகும்
பூசையென்ன நெஞ்சில்நின்றால் நினைவுமாகும்
புலாவெலும்பைச் சுத்துநின்றால் கருவியாகும்
மாசையென்ன வுயிர்கலங்கில் கலக்கமாகும்
மனதென்ன விளையாடல் உயிருங்கூட்டே. 21

கூட்டிலுயிர் உலாவுதலே கருவியாகும்
குடலெலும்பு தசைநரம்பு தோலும்ரோமம்
காட்டிலிந்த ரத்தநீர் வாசிகூடிக்
கருத்தறிவு தெளிவுண்டா மனதேபுத்தி
யிட்டிலிந்த ஓர்மூலை பிசகித்தானால்
மேற்பிசகு முயிர்கலங்குஞ் சந்திற்பொந்திற்
பாட்டிலிதை நாப்திருத்தி யொன்றாய்ச்சேர
பழகிவரச் சொன்னார்சாஸ் திரத்தைத்தானே. 22

சாஸ்திரத்திற் தத்துவமே ஆதிநூலாம்
தனையறியச் சொன்னாரே பிறவிநீங்க
பாத்திரத்தி லிதையறிந்தால் யோகமென்பார்
பழகினவர் ஞானியென்ற பெரியோரென்பார்
கோத்திரத்தி விதின்பெயரே குருகுலந்தான்
குருவானாற் தன்கண்ணில் உடலுட்தோன்றும்
சேத்திரத்தில் ஞானக்கண் டிடரிதோன்றும்
சென்மாந்திரங் காணுமுதுவுந் தோற்றும்பாரே. 23

தோற்றுமே கண்ணெதிரிற் தோற்றினாப்போற்
தோற்றிவிடும் பார்பூதம் அஞ்சுந்தானே
ஏற்றிவிடு மதின்மேலே ஆகாயத்தும்
இறக்கிவிடில் ஞானக்கண் பாதாளத்தும்
சாற்றிவிடுந் திரிகால மதனைக்கொண்டு
தன்னுடலைப் பகுத்தறிந்த செல்வந்தானும்
கூற்றிவிடு கூற்றனவ னெதிரேநிற்பான்
கொன்றவனுஞ் சண்டையிடான்
சிநேகன்றானே. 24

சினேகமென்ன ராமகுரு வசிஷ்டரேகேள்
செப்புகிறேன் கருவிகா ணாதிதன்னை
சினேகமதாய்ச் சொல்லுகிறேன் கருவிக்கூட்டம்
திருவருளைக் கண்டார்க்கு மெட்டாயெட்டா
சினேகமது யான்கண்ட கருவிசொல்வேன்
சிந்தித்தாற் கருவிற்வகை சொல்லிற்கோடி
சினேகமென்ன கோடான கோடிவித்தை 25
தேசத்திற் கண்டிடலாங் கருவியாமே

## உடற்கருவி உயிர்கருவி விபரம்

ஆமிந்த உடற்கருவி சொல்விவாரேன்
அங்கசேஷ்டை யெத்தனையோ கோடானுகோடி
நாமிந்த உயிர்க்கருவி சொல்லவில்லை
நலமான உயிர்க்கருவி கோடாகோடி
தாம்கண்ட மனக்கருவி கோடாகோடி
தன்னறிவி லேவிளையுங் கோடாகோடி.
ஆம்கண்ட கருத்ததுவுங் கோடாகோடி
அத்தனையும் ஞாபகமாய்ச் சொல்வா
ருண்டோ. 26

உண்டோதான் புத்தியுடன் யூகங்கோடி
உற்றிதனை யறிந்தாக்காற் கருவியாமே
பண்டறிந்த பேர்களுமே சொல்லவில்லை
பழவினையைப் போக்காதார் பாக்கியுண்டோ
விண்டேதான் சொல்லவில்லை காணாதாலே
மெய்மினுக்கும் வேசியர்போற் பாடினார்கள்
தொண்டுதான் செய்யாமற் குருவானாரோ 27
சூக்ஷ்குரு சொல்மொழியு மாகா தாமே.

ஆகாத பிராணனுடன் பித்தங்கூடில்
அதுகணக்கு யெத்தனையென் றெண்ணிப்பாரீர்
சாகாத பிராணனது தடையாற்சேத்மம்
தான்மறைக்க யெத்தனையென் றெண்ணிப்பாரீர்
வாகாக வாதமது யிடுப்பின் கீழே
வலநீரா மொழியறியார் கருவிதோணார்
சேகாதார் கண்டுகொள்வார் சேத்மங்கோமை
விரைந்திருகிக் கட்டிவிடத் தடையதாச்சே. 28

ஆச்சப்பா பித்தநீ ரேதென்றாக்கால்
அரைகிறே னுண்ட நீர் தலைமேலேறும்
பூச்சப்பா முன்னோர்கள் மனதிற்கண்டார்
பொய்யில்லை தெரிந்தமட்டுஞ் சொன்னார் நல்லோர்
ஏச்சப்பா சொல்லாதே அறிவில்லாத
படுமடையர் வேறுசொல்வா ரறிவில்லாமல்
பேச்சப்பா யிதையறிந்தா லுனக்கேகிட்டும்
பெரும்பிழையைத் தள்ளிவிட்டு உற்றுநோக்கே. 29

## கனவு விபரம்

நோக்கியே சொல்லுகிறேன் கனவின் செய்கை
நுண்ணறிவாற் கண்டகனா சொல்வேன் கேளு
தாக்கியே பிராணனது யிடவிலாவில்
தானிறங்கி மலசலத்தைத் தொடும்போதெல்லாம்
ஆக்கியதோர் பித்தநீர் கீழிறங்கும்
அதுவாயில் வந்தவுடன் நினைவுதப்பும்
ஏக்கியே நடுநினைவை மாற்றிக் கண்ணை
யிருக்கிவிடு மேயறிவு மாறுஞ்சொல்லே. 30

சொல்லுமே வலதுபுற விலாவின் கீழே
சொன்ன அறிவது விறங்கில் மலமேகூடும்
வெல்லுமே தன்னறிவை விழுங்கிக் கொள்ளும்
மேலெழுந்த நினைவெல்லாங் கனவுமாகும்
புல்லுமே நினைவிலுள்ள மற்றதெல்லாம்
புகலுமே சடமறந்து காதங்கேளா
மல்லுமே போர்புரிந்து விதமேகாண
வாதபித்த சிலேத்துமத்தைப் போக்குவீரே. 31

## யோகம்

போக்குவீ ரென்றுசொல்லிப் போக்கத்தானே
  பொருளதனைச் சொல்லிவைத்தே னிடங்கள்
  தோறும்
நாக்குமே லண்ணாக்கு உண்ணாக்குள்ளே
  நடுத்தமரைத் தான்திறந்தா லுச்சிவாசல்
மூக்குமேற் றண்டினிலே முனை மூக்குக்குள்
  முளைத்தெழுந்த வாசிவரப் பார்த்தபேர்கள்
தாக்குவார் புருவநடு மேலே பார்ப்பார்
  தமர்வாச லடைத்திருக்கும் பூட்டுத்தானே. 32

## அமுர்தம்

பூட்டுடைத்துக் கண்டவர்கள் மெத்தவுண்டு
  புத்தியுள்ளோ ரவர்களே சித்தர் சித்தர்
ஆட்டமிதிற் காண்பார்கள் அனேகங்காட்டு
  அம்மம்மா வென்றார்கள் சுத்தவீரர்
காட்டம் விறகெய்தாமற் றீயிடாமல்
  கதிர்மதிக்கு மத்தியது புருவமத்தி
நாட்டமிடக் கோபுரத்தின் வாசற்பூட்டு
  நாசிமுனை புருவமத்தி திறந்து கொள்ளே. 33
திறந்து கொண்டு மேலேற நெற்றிமார்க்கம்
  தீயவழி நடவாதே மூக்கின் மார்க்கம்
மறந்துவிட லாகாது தினமோர்காலம்
  வாய்பிதற்ற லாகாது அடக்கமாகில்
சுறந்து விழும் பாலமுர்தம் மனதிற்றானே
  தூங்கினவர் போலிருக்கு மேங்கிடாதே
கறந்துகொள்ளச் சொன்னாரே மற்றோர் வீட்டிற்
  கால்வைக்கச் சொல்லவில்லை யுள்ளேதானே. 34
உள்ளேதான் பாலமுர்தம் வடியுமென்பார்
  உண்ட அன்னம் பசியடக்கும் வாரதாகும்
தெள்ளினே னிதுவிபரந் தெரிந்து கொள்ளு
  தெளியாட்டால் யான்சொன்ன சூட்சம்பாரு
கள்ளேதான் வடியுமென்பார் உச்சிவாசல்
  கட்டறுத்தா லேகோழை வடியுமல்லோ
பிள்ளைகா ளிதுவறியார் மட்டியாகும்
  பேசினார் யானறுத்து மேற்சென்றேனே. 35

## அமுர்த விபரம்

சென்றேனே உச்சிநீர் தாயேயாகும்
சிரசிலுள்ள நீரெல்லாம் வாலையாகும்
சென்றேனே உச்சிமேற் கபால ஓட்டில்
சென் றதினா லுச்சியின் கீழ் கோழைகண்டேன்
சென்றேனே அதுயிறக்க முட்டி நானே
சீக்கிரத்தி லேயுடைத்தேன் கதவைத் தானே
சென்றேனே அக்கதவின் தாளே கோழை
தீயிட்டு நானெரித்தேன் மேலேதீயே. 36

## யோகம்

தீயென்றால் மூலகனல் உச்சிவாசல்
தீண்டிவிட்டு மேலேறிற் தீபசோதி
நீயென்றால் நான்தெரியச் சோதி சொல்லும்
நிமிஷமுத லெச்காலும் நிகழ்த்தும் சோதி
ஈயென்றால வாய்திறக்கும் ஞாயஞ் சொல்லும்
இப்படியே உச்சிவெளி கபாலமேடை
ஊவென்றால் உள்மூலந் திறந்து காட்டும்
உச்சரிக்கு மந்திரமுஞ் சொல்லுந்தானே. 37

## எமன் கோழை

சொல்லுமே கபாலமதிற் சேர்ந்தவாசி
சோதியொளி கண்டிடுமே கனலாற்காலால்
நில்லுமே மூலதலம் வாசிகொண்டு
நிமிர்ந்திருந்து பார்க்கவுமே பிடரியேறும்
கொல்லுமே பிடரியெமென் கோழை தன்னை
கொட்டிவிடுங் கக்கிவிழச் சள்ளைமெத்த
வெல்லுமே யவ்விடத்திற் பின்னால் நின்று
வேதாந்த உச்சிவர மூலம்பாரே. 38

## இராக்கால சாதனை

மூலம்பார் பின்னிடுப்பில் முடிச்செலும்பில்
முதுகுதண்டுத் தாரைவழி விலாவோடாமல்
காலம்பா ரிராக்காலங் கதவடைத்து
கண்மணியே பார்ப்பவர்கள் தேறுவார்கள்
சீலம்பார் முன்னோர்கள் தெளிவாய்ச் சொல்ல
சிலம்பொலியைக் கண்டதன்றி முடிவைக்காணார்
கோலம்பா ரதனாலே சாஸ்திரத்தைக்
கொட்டினார் கண்டவரை தீட்டினாரே. 39

ஆரென்ன யெத்தனையென் றெண்ணிச் சொல்வேன்
அய்யய்யோ சொன்னாரே முகங்காணாதார்
வாரென்ன சுழிமுனையுஞ் சிலம்புங்கண்டு
வாய்கொண்டு பிதற்றினரே கண்டத்தாலே
தூரென்ன கொண்டைக்கால் மூலந்தொட்டு
தும்பிமுகன் நடுமூலம் உச்சிமூலம்
கோரென்ன சொன்னாரோ யிடுப்பின் மேலே
குண்டலியைச் சொன்னாரே உச்சிமட்டே. 40

## குண்டலி யோகம்

உச்சிதலை நெற்றிவிழி புருவமத்தி
உரச்சங்கு மார்புநெஞ்சு உந்திமூலம்
பிச்சிகலை யிடுப்பின் கீழ் முழங்கால் பாதம்
பெரும்பாடு விரல் நகக்கண் வாசிபாய
கச்சிகலை சொன்னாரோ முத்தர் சித்தர்
கால்வாசி கால்யோகம் காணாப்பித்தர்
கொச்சிநரை சொல்லவில்லை வெழுத்தமார்க்கம்
குண்டலியைக் கண்டாக்காற் கருக்கும்பாரே. 41

குண்டலியைக் கண்டாக்காற் கருக்குமென்பார்
குண்டலியி னிருப்பிடமும் மூலமென்றார்
குண்டலிதா னென்றாக்கால் நரம்போதோலோ
குருந்தண்டோ முள்ளெலும்போ பிடரிமார்போ
குண்டலியே யென்றவர்கள் பெயரார் சொன்னார்
கொத்தளத்தின் பெருமைதனைச் சொல்லி
னார்கள்
குண்டலியே வாய்திறக்கப் பேசுமென்றார்
குருவென்றார் வாலையென்றார் குமரென்றாரே. 42

என்றவர்கள் பஞ்சபூத அந்தங்காணார்
இறைக்குறேன் நீரூற்றுக் கிணறு போல
குன்றதனின் மேலிருந்து வீழ்வார் போல்
குதித்துவந் தரையகனில் நிற்பார் போல
நின்றவர்கள் கைமல்லுக் கட்டுவார்போல
நிகழ்த்துகிறேன் யோகமல்லு குண்டலித்தாய்
வென்றவர்கள் தன்னுக்குள் காணுமார்க்கம்
விதிக்கிறேன் உச்சிதொட்டுப் பாதமட்டே. 43

மட்டேதான் மனமிருந்த உயிரேநாடி
மறைவேதங் குடியிருந்த தண்டுநாடி
எட்டேநீ நாக்கினடி மூலபிஷம்
யிதுமத்தி கயரொன்று திருகுகம்பி
முட்டேநீ வாசிகொண்டு கனலெழுப்பி
முகம்மேலே நேர்நிமிர்ந்து கயரெழும்பும்
விட்டேநீ தூண்டிவரச் சாண்கிளம்பும்
வில்லங்கந் தொப்புளின்மேல் வில்லங்கந்தானே. 44

## குண்டலி விபரம்

வில்லங்க மதுகடக்க முடியாதய்யா
விதிவிலக்கு அன்னசுவை கொடியபட்டினி
சொல்பங்க மாகாது தூக்கமாகா
துரும்புபோ லேயிருக்குஞ் சதையேமாறும்
நெல்லங்கம் போல்வெளுக்கும் கண்ணோகூசும்
நிமிஷத்திற் பித்தநீர் படியிறங்கும்
மல்லங்க மானதுபோல் விதவைகற்பம்
மரணத்துக் கொப்பான துன்பந்தானே. 45

துன்பந்தான் குண்டலிதான் நாலுங்காலம்
துயரென்ன வயற்வலிக்கும் பிரண்டுருண்டு
இன்பந்தான் தொப்புள்நீ ரிறங்கிற்றானால்
இதுபெரிதோ மார்பில்வருங் குண்டலித்தாய்
அன்பந்தான் நமதழுக்கே நெஞ்சிலேறி
அதுநஞ்சு தாண்டிவிடுந் தொண்டையேறி
துன்பந்தான் போய்த்தொலையும் வாருபோல
தும்பிக்கை நீட்டிவிடும் உச்சிமேலே. 46

உச்சிமேல் கைகாட்டும் பொங்கிச்சாயும்
உறுமுகிடாய் திருகுகொம்பு போலத்தானே
எச்சியே தான்விசுறும் உச்சிமூக்கால்
யிடதுகையைப் பத்தியவள் எதிர்நிற்பாள்காண்
குச்சியே குண்டலித்தா யதனில்நிற்பாள்
கொடுங்குமரி வர்ணமதை யென்னசொல்வேன்
பச்சியே கேட்டதெல்லா மிந்தாவென்பாள்
பார்க்கவே கன்னிசிறு ரூபமாமே. 47

## வாலை

ரூபமே நாமமே ரூபாரூபம்
நுவலுகிறேன் வாலையென்றும் வெளியேயென்றும்
நாமமே கன்னியென்றும் மந்திரமென்றும்
நவிலுஞ்சொல் மொழியென்றும் கற்பமென்றும்
காமமே பிச்சையென்று மனதேயென்றும்
கண்டவர்கள் சத்திசிவ மாய்கையென்றும்
நாமமே வாசிபர தேசிபிர்மம்
நாடியுதித் தொடுங்குமிட மறிந்துபாரே. 48

இடமறிந்தோ ரித்தனையுங் காணவேணும்
இல்லறத்திலிருந்தாலும் பூணவேணும்
சடமென்ன குடிசையென்ன மடந்தாளென்ன
தாதுநிலை கண்டாலாச் சிரமமென்ன
குடமென்ன நீர்நிறைந்தாப் போலவாசி
குண்டலியைக் காணார்க்கு மாயமாகும்
தடமென்ன யிதையறிந்தால் வழியதாகும
சததிசிவ மால்காமி யறியலாமே. 49

## அமுர்த விபரம்

அறியலாம் லட்சுமியாள் புத்திரனோடு
அவர்மனைவி யச்சரமுங் கூறலாகும்
புரியலா மண்ணாக்கி லமுர்தவாசல
புண்திறந்து வாசல்கண்டு ஒளியலாகும்
தெரியலா யச்சரதகி னாதியந்தம்
தேறலாம் அணடமதுல அஷ்டலாபம்
புரியலா மஷ்டாவ தானகோஷ்டி
பூரிக்கு முள்ள முர்தம் பொங்கும்நெஞ்சில் 50

நெஞ்சிலெழு தோற்றமதையென்ன சொல்வேன்
நிகழ்காலம வருங்காலம் செல்காலதமேத
துஞ்சிலேன் நானிருந்து பார்த்துமஞ்சேன்
துயருற்றோர் பாலிருக்குந் துயரேசேர்வான்
மிஞ்சிலேன பரமிலறிபட பிரியன்சேரேன
மெய்மலிந்த எனதுயரே சுகமேமிச்சம்
அஞ்சிலே யானிருந்து பார்த்தபார்வை
அப்படியே ஆரிட்ட சாபநதானோ. 51

ஆனோர்கள் சொல்லெல்லாம் வீண்போகாது
அண்டயிடி தடுப்பதற்கும் அவர்தானாகும்
மானார்களில்இவரே யெமனைவென்றோர்
வாய்ப்பிதற்றார் வாய்பிதற்றில் குற்றமாகும்
வானோர்கள் நோக்கிடிலோயெதிரே செல்வார்
வானோர்க்குத் தானவரும் யிதன்மேலாகார்
மீனோர்கள் கூட்டமதில் பெரிதாம்ஞாயிற்
வெண்மதியும் பொன்மதியு மெட்டாதுபாரே. 52

எட்டாவது கொட்டாவி விட்டாற்போல
யேங்கிமனம் புண்ணாகி நைந்தாற்போல
பட்டார்கள் தங்களுக்கு எறும்புஈயை
பருந்தெடுத்த கோழிக்குஞ் சவரேயாகும்
விட்டார்கள் தங்களுக்கு மேருபோல
மேலேறுந் தன்மனது மேருவைப்போல்
குட்டான தையறிந்த விஷயததாலே
குருமுனிபே ரானாரே குருவாவாரே. 53

குருவாழ்வு வானோர்கள் குலத்துக்கெட்டா
கோடான கோடிவித்தை குலத்துக்கெட்டும்
பெருவாழ்வு கீழ்மேலு மில்லையில்லை
பேரின்ப மல்லயிது தூருமின்பம்
திருவாழ்வு நம்மளுக்குள் தேனீப்போல
தேடிவைப்பாய் தேனதனைக் கூட்டிற்சேர
மருவாழ்வு நாமானோ மிதுபாராதால்
மாய்கையெனச் சொன்னதென்ன மறத்தல்
தானே. 54

## உட்கருவு

தானேதா னுடலுயிரும் ரெண்டிருக்க
தங்குமுடல் நின்றுவிடு முயிர்தான்சீவன்
வீணேதா னுடலெடுக்கப் பிறவியாச்சு
மெய்யெடுக்கக் காரணமே யிதுதானாகும்
ஆணேநீ யானாற்குண் டவியைப்பாரு
அம்மியுடல் தேய்ந்ததுபார் குழவியாலே
காணேநீ யவ்விரண்டுந் தேய்ந்ததல்லால்
கல்மனமுந் தன்னினைவாற் தேய்ந்துபோமே.
55

போகுமது யெப்படியென் றெண்ணிடாதீர்
பொரிபுலனுஞ் சண்டையிடல் குழவிஅம்மி
ஆகுமது நாமரைக்கத் தேய்ந்தாற்போல
ஆசனங்க ளிட்டுவர அரைக்கும்வாசி
வேகுமது உள்க்கருவி காய்ந்ததாலே
வெள்ளாமை நீர்பாய்ந்து விளைவுபோலே
சாகுமது நீரில்லாக் காய்ந்தாற்சாவி
சந்ததிகள் உள்க்கருவி கொல்லுவாயே. 56

வாவென்றால் வருவாரோ கொடுக்கார்பக்கம்,
வருபவர்போல் வருவார்கள் கண்ணிற்தோணார்
தாவென்றாற் தருபவர்க ளஞ்சினோர்கள்
தருவார்கள் காலமறிந் துணர்ந்தபேர்கள்
தோவென்றா லோடிவரும் நாயைப்போலத்
தொல்புலித்தோல் நல்லாடை சாற்றிக்
கொள்வார்
காவென்றாற் கூடுகிற கூட்டம் பாலக்
கல்லெறிந்தா லோடுவரே காகம்போலே. 57

காகம்போற் கூடியவர் வாசிபார்த்தோர்
கல்லெரிந்த சொல்லறியார் கலையைக்காணார்
வேகமாய்ச் சொல்வார்கள் சாஸ்திரமார்க்கம்
விரைந்தேரச் சொல்லுவது குருவின்மார்க்கம்
நாகம்போல் நாக்கிரண்டு வைத்துக்கொண்டு
நடுமார்பி லுதிப்பதனைக் கண்டுவிட்டார்
தேகம்போல் நாமிருக்க அருளிருக்க
திருவருளால் வாலையவள் பதத்தைக்காணே. 58

காணுவது மனதென்ன கள்ளமென்ன
கள்ளமெது மாய்கையெது மனதேதெய்வம்
பூணுவது மனதுருமை மனத்தேசாட்சி
புழுக்கூட்டி லேயிருக்கும் ஞாயஞ்சாட்சி
தோணுவது தன்மனதிற் காட்சிரூபம
தொநதோமென றாடிடுமே கள்ளமின்றி
பேணுவது சலனமது அன்னத்தாலே
பெருரையா ரூபமதின் தெய்வமாமே. 59

தெய்வமன தேவிரிந்து ஒளியாஞ்சோதி
திருவருளின் ரூபமது அருளேசாட்சி
நைவமெனச் சொன்னாலே நய்யச்செய்யும்
நலியுமென்ன செய்வமெனில் நெஞ்சைநண்ணி
செய்வதென்ன நெஞ்சதனில் ஓடைபோல
திடல்திடலாய்க் கூட்டுநெஞ்சு பள்ளங்காணும்
பொய்யதுவும் செல்லாதுயெல்லாம்போகும்
புலாலெலும்பு தோல்கூடு மீதம்நீரே. 60

மீதம்நீ ருடலுயிரும் நினைவும்போகும்
வேதாந்த மாகருவும் உள்ளேநிற்கும்
நாதம்நீர் அண்ணாக்கு வாசல்மார்க்கம்
நாம்நினையா தேயிருந்தும் பேசும்வாசல்
போதம்பார் பரிபாசை யபகப்பாடும்
பொய்யதுவுந் தான்தெரியும் மெய்யுங்காணும்
நீதம்பா ரத்தனையும் தாலேகாணும்
நில்லும்நில்லும் நானறிவேன் நினைத்த
மார்க்கம். 61

மார்க்கம்போல் நேர்வழியே குருக்குமார்க்கம்
வாய்வழியே தானைவந்து வாசியேறும்
தீர்க்கம்போற் செப்பிவிடும் வாசிவாசி
செயவாசி கூறிவிடும் வாசிபாசை
கார்ப்பதுபோற் சொல்லிவைக்குந் தனக்குமுன்னால்
கண்டுகொள்ளும் பின்னாலே துடர்ந்துசெல்லும்
சேர்ப்பதுபோற் சொல்லிவைக்கும் பொருந்திடாதே
தீண்டாதே நீயிருந்து ஒடுங்கிநில்லே. 62

நில்லாதே போனாக்கா லிருள்விழுங்கும்
நிமிஷத்திற் சொக்கிவிடுஞ் சடலந்தோணா
செல்லாதே அவ்விடத்தில் வெகுவாம்பள்ளம்
சிக்கினவர் மெத்தவுண்டு கரையேறாமல்
கொல்லாதே நாம்பிழைக்கச் செய்தவித்தை
கொல்லுமெம னிருக்குமிடஞ் சொக்கதாகும்
கல்லாதார் சாஸ்திரத்தைப் பாராமற்றான்
கரையேற நினைப்பவர்கள் கிருக்காவாரே. 63

இருக்காவார் பித்தவெறி வந்துசேரும்
இருகிரெனச் சுழலுமனம் அறிவைவிட்டார்
இருக்காவார் சொல்லெல்லாம் வேதமாகா
இட்டினதை யறியாதார் முற்றுமாகார்
இருக்காவார் தவசுமுறை காணாமாந்தர்
கேட்டதற்குப் பதிற்சொல்லார் செவி
கொடார்கள்
இருக்காவார் பரிபாஷை சொல்லென்பார்கள்
கேள்வியற்றார் பார்வையற்றார் நாவற்றாரே. 64

அற்றார்க ளிம்மூன்று மில்லாஞானி
அறிவில்லார் தங்களுக்கு யோகிதானே
உற்றார்கள் சாஸ்திரத்தைத் தொட்டபேர்க்கு
உருகிவருஞ் சொற்களது ஆதியந்தம்
பெற்றார்கள் சொல்லதுதான் முறையாய்ச்
சொல்வார்
பிசகாது ஒருநாளும் நேரேசொல்வார்
முற்றார்கள் கேட்பவர்க்குக் கவிழ்ந்துசொல்வார்
முன்னின்று கேட்டாலுந் திரும்பிடாரே. 65

திரும்பிக்கொள் வாரவர்கள் சிக்கர்தானோ
செப்பினதைக் கேளாதார் பெரியோர்தானோ
திரும்பிக்கொள் மனமிருக்கச் சந்தேகத்தால்
தேசத்தில் சுகிக்கறியா விருதாஞானி
திரும்பிக்கொள் உலகருமே ஓடிப்போவார்
தேசத்தில் ஞானபரி பாஷையென்பார்
திரும்பிக்கொள் ளுலகத்தோர் கேட்டதற்குச்
சிவபூசை செய்ததுபோற் புலம்புவாரே 66

புலம்புவா ரதுபிரித்துத் தெரியவேணும்
புகன்றவர்கள் நிமிஷமொடு வருஷங்காணார்
அலம்புவார் மார்பழுக்குத் தெரியாதாலே
அய்யய்யோ வென்றவர்கள் கலங்கினார்கள்
சிலம்பொலிக்கு மென்தாயார் சொல்லின்வித்தை
சிறுநிமிஷம் பெருவருஷம் கணக்காய்ச்சொல்லும்
தலம்புபோல் வேணதெல்லாஞ் சரியாய்ச்சொல்லும்
சமத்தர்களைக் கண்டறிந்து ஏறுஏறே. 67

## ஞானம்

ஏறுங்காண் முற்றறிவு தெளிந்துள்ளோர்கள்
இதயமதில் நடமாடும் உதயங்காணும்
கூறுங்கா ணாதியந்த மிருந்ததெல்லாம்
குமிரியிரு மேகநீ ரிரைச்சல்போலச்
சேருங்காண் மழைத்துளிபோற் சேருஞ்சேரும்
சென்றேறக் காற்றிழுக்கும் வாசியோகம்
மீறுங்காண் முற்றிவிடக் கொர்ச்சிக்குந்தான்
முடிவான முட்டுதல்போ லொளியுங்காணே. 68

காணுவது ஏதென்றால் தெய்வரூபம்
கணக்கெழுதி முடியாது சொல்லிவாரேன்
பூணுங்காண் நம்மனதில் அறிவுதன்னில்
புகழ்கருத்தில் யூகமிகும் புலன்களோடுங்
காணுங்காண் யோகநெறி வாசியோடும்
புலனற்றோர் தன்னெஞ்சுஞ் சமமாம்பார்வை
தோணுங்கா னித்தாதி முறைகளோடு
தூண்டிலகப் பட்டமீன் தொங்கும்போலே. 69

தொங்கினது போலல்லோ உளத்தில்தொங்கும்
தொடுகுறிகள் காண்பிக்கும் உடலைக்காட்டும்
மங்கினாப் போலல்ல சோதிபோலே
மறைவேதம் போலல்ல சித்துப்போலே
தங்கினா லிதற்குள்ளே சிக்குமல்லால்
தவஞ்செய்தோ ரானாலும் விட்டார்கெட்டார்
பொங்கினாற் கண்டுகொள்ள மாட்டார்க்கென்ன
பூதவுடல் தனைச்சுமந்து போனார்வீணே. 70

வீணேதான் போவரென்று சொல்லிவைத்தேன்
விருதாவாய்ப் புலம்பவில்லை ஞானமெய்தும்
கூணேதா னானாக்கால் யோகங்கிட்டா
குமரிகட்குங் குமரர்கட்கும் யோகமுண்டாம்
ஆணேதான் சாணமுழமும் மூலநாடி
அமைந்திருக்கி லப்படியே பெய்தும்பாரு
காணேநீ முன்சொன்ன குறியைக்கொண்டு
கண்டவர்க ளுடன்கூடிக் கலந்துகொள்ளே. 71

கொள்ளாத பேர்களென்ன குரங்கின்குட்டி
குறியறிந்துங் கேளாதார் உயிரில்லாதார்
விள்ளாத பேர்களில்லை கேட்போரில்லை
விழலுக்கே நீரிரைத்த வாறேயாகும்
தெள்ளாத மாந்தருக்குத் தவிடுமில்லை.
தீனிகுறை யாதவர்க்கு வாசியில்லை
மொள்ளாத பேர்க்கென்ன தாகமுண்டோ
மோகமுண்டோ தாகம்விண்டு மொழிகுவீரே. 72

கூறினது இத்தனையும் உமக்கெமக்கோ
கோபுரத்தின் மேல்வாசற் சாமிக்கோதான்
பாரினுட கூச்சல்வந்த தாலேசொன்னோம்
பகருவர்க ளென்றவருக் கிச்சைவேணும்
தேரிலுள்ள பொம்மையுட விழியைப்போலே
சித்திரம்போ லேயிருந்து வாசிபாரு
மாறினது காலையந்தி மறந்ததாலே
மனிதருயி ரேமறந்து உடல்கண்டாரே. 73

கண்டவர்கள் சொன்னார்கள் முன்பின்னாகக்
கருணையொடு வைத்துவிட்டேன் கருத்துநேராய்
பண்டவர்கள் சொல்லதனில் நுழைந்துபார்த்துப்
பழகிவர நாட்சிலது பலமாய்நிற்கும்
விண்டவர்கள் சொல்லதுவுங் கொஞ்சம்விள்வார்
வேதவடி வரைகொஞ்சஞ் சமமாய்ச்சேர்த்து
தொண்டர்களா யிருந்தேதான் பார்க்கவேணும்
துயரென்று நீயிருந்து தூங்கிடாதே. 74

## கூனல் வரும் விதம்

தூங்கிடா தேயிருக்க எமனைவெல்லத்
தூண்டுகிறே னின்னமொரு சூட்சங்கேளு
ஏங்கிடா தேயிருப்பீர் போகுங்காலம்
இறைவயிறு கீழ்ப்பாக மேல்பாகத்தே
வாங்கிடா தேயிருப்பீ ரிந்திரியங்கள்
வயிற்றனவ பின்பாகங் கறைந்ததானால்
தேங்கிவிடு மிந்திரியக் கட்டில்லாமல்
தியங்கிநடு நேர்வளையுங் கூனல்தானே. 75

தானானார் கோடியென்ற லெக்கம்போலே
தமர்வாசல் தான்திறந்து புக்கினார்கள்
மானான தண்டுலர்ந்தால் வருகார்தோஷி
மாதண்டு பலமிருந்தால் வருவார்நேசி
கூனார்கள் குறுகார்கள் உடலுப்பார்கள்
கோடிவித்தை கண்டவரைத் தொடர்ந்துகூடும்
வீனாட்கள் சொற்கேளாப் பிள்ளையைப்போல்
வினையோடு திரியாமல் வேலைபாரே. 76

வேலையில்லா தெதனாலே முடிந்ததாலே
விரும்பிச்செய் நிலங்காய்தல் நீரில்லாமல்
சேலையில்லா அம்மணத்தி லிருப்பாள்போல்
சிறுபிள்ளை வேலையில்லா திருந்தாற்போல
வாலைவய தேமிகுத்தா லிச்சைபோல
வயர்நிறைந்த சோம்பியர்கள் தூக்கம்போல
காலையிலு மாலையிலும் நடந்துதூரம்
கனத்தவழி துலையாதெப் போதுஞ்சென்றே 77

சென்றேறி நடந்ததினா லந்தமாடி
திருகுசுழி கேணியடி அமிர்தவாசல்
குன்றேறித் தானுண்டு நிறைந்ததாலே
குமரி கெர்ப்பம் சக்கையைப் போலிருப்பார் சும்மா
அன்றேறி யிருந்ததுபோற் குறையாமற்றான்
அளவுநிறை மேலதிகம் ஆயுள்மட்டும்
மன்றேறி உள்விழைந்த காட்சிகண்டு
மகிழாதே உள்வேலை வெளிதோணாதே. 78

## அறியாதார்

தோணாது ஜனங்களுக்கு எலும்பின் ஆணி
சொல்லறியாத் தோஷியற்குச் சுழிவுதோணா
வீணாக நாமலைந்து கெட்டோமென்பார்
மெய்நிறைந்த வாசியதைக் காணாபாந்தர்
வாணாளைப் போக்கடித்துச் சடமுங்கெட்டு
வயற்பிழைக்குஞ் சோம்பியை யோகியென்றே
துணாலைக் கூட்டியுண்டு சுகித்தாற்போல
துன்பமுற்றுப் பட்டினியே கிடப்பான்வீணே. 79

கிடப்பானே மண்மேலே பிணத்தைப்போல
இருகிருத்த பித்தநீர் பெலத்ததாலே
முடப்பான கால்மடித்து இருப்புங்கெட்டு
முதுகுதண்டு மேநொருங்கி மெலிந்துநோயால்
நடப்பானே மரணநா ளறியாபோகி
நாவில்வருஞ் சொற்பலித மில்லாத்தேகி
குடப்பானை நீருண்டு மூச்சைத்தள்ளி
கும்பிடுவார் பூட்டுக்குச் சாவியாமே, 80

## பொய்யோகி

சாவியிதில் யோகபதர் காவிகட்டி
தன்காலிற் குறடிட்டுத் தாடிகட்டி
கூவியே சொல்லறியாப் பூசைபண்ணி
குங்குமமும் வெண்ணீறும் பொட்டுமெட்டும்
மேவியதில் மொட்டையிட்டு கொறடுமொன்று
விறகுதலை சும்மாடு குடுமியிட்டு
தாவியதி லேநடந்து வுலகம்பூராய்த்
தான்மறந்த பாவனைபோற் கூவுவாறே. 81

கூவுவா ரோபெரியோர் உலகந்தன்னைக்
கொள்ளுவரோ தள்ளுவரோ சிறியோர்போல
தாவுவரோ தெரிந்ததனை விள்ளுவாரோ
தாரித்திர மேயதனைச் சொல்லுவாரோ
சாவுவருங் காரணத்தை நினைந்துகொண்டு
தனைக்கொல்லுங் கூற்றனொடு சண்டை
செய்வார்
மேவுவரோ கூற்றனொடு கூடார்வாடார்
மெய்வீசுங் காற்றுலவு கொண்டார் பாரே 82

கொண்டார் களுடலுயிரைப் பருந்துகொண்டு
கோடிவித்தை கண்டார்கள் முத்திசித்தி
தண்டார்க ளொவ்வொன்றைக் கண்டுகொண்டு
சாதித்துப் பெற்றோமே யென்று எண்ணி
உண்டோர்கள் பேச்சுரையுங் கைபாகங்கள்
உப்போடு கைப்பறிந்து தெளியுமுன்னம்
தின்டோர்கள் பொய்கொண்டு சாவார ¡ னோர்
சிறுபிள்ளை ஆக்கியிட்ட சமையலாச்சே. 83

சமையலாய்ச் செய்வதற்குச் சாமானங்கேள்
தவசுமுறை யுடற்கூறு நன்றாய்ப்பாரு
அமையலாய்க் காயடுப்பு மூலம்பாரு
அனலிட நெஞ்சுநடு மனச்சாமான்கள்
அமையலா வேயிருக்க மேட்டுநெஞ்சில்
துண்டிவிக்கும் நல்லறிவு கூடக்கூட்டிக்
கமையலாய்க் காயாமல் ஒன்றுசேர்ந்து
கார்பசிக்கி யிட்டகதை கருத்திற்கீயே. 84

சயப்பா கோடிதனங் கேட்டாலுந்தான்
இல்லறத்தி லிருக்கவைப்பார் துறவுக்கீயார்
பேயப்பா உன்பொருளும் பெரிதோசொல்லு
பித்தர்களென் றெண்ணாதே பொருளைக்
கேட்டால்
காயப்பா பொருள்கொடுக்காத் தோஷிநீயும்
கஞ்சிக்கி யெனையலைய வைக்கவோதான்
நீயப்பா கொடுத்தலுடன் நான்கொடுப்பேன்
நிச்சயமாம் யிதுகொடுத்தாற் பின்னீவேனே. 85

சவனோ திரிகால வர்த்தந்தன்னை
என்னெதிரில் மண்தின்று போவாருக்கு
காவனோ நானிருந்து முழிப்பதேனோ
கஞ்சிகுடி யென்றுசொன்ன பையனுக்கோ
மேவனோ நீயிருவே கீழேதானே
மேலிருந்தோன் கீழிருந்தாற் பாவந்தானே
ஆவனோ நானுனையுஞ் சேர்ந்தால்தோஷம்
அய்யய்யோ குருவென்பான் உள்நின்றானே. 86

## பரதேசி

நின்றவனும் வெளியில்வர வெட்கமாவான்
நெடுங்காலஞ் செலுமோவென் றெண்ணிக்
கேட்பான்
குன்றேற வேணும்நா மென்றேசொல்வான்
குருவென்பான் திருவறியான் குதர்க்கச்
சொல்லான்
சென்றேற நாமிருவர் போதுமென்பான்
சீவனங்கள் செய்வதற்கோ எதுக்கோதான்
அன்றாடந் தொழில்மறந்த சுருதியில்லான்
அவன் வயிற்றை நிறப்பிடநம் மாலாகாதே. 87

நம்மாலே யாகாதா மனங்குளிர்ந்தால்
நல்லறிவு கண்டுவிடோம் தள்ளமாட்டோம்
தம்மாலே யாகுமென்று நினைத்தாற்போல
சரிசொல்வாய் கிட்டிருந்தால் வாபோவென்பாய்
எம்மாலே கண்டுகொண்ட சிரமந்தன்னை
யெவரறிவா ரதுவறியு மென்றாற்போல
உம்மாலே கண்டுகொண்டா லெமக்குச் சொல்வீர்
உலகமென்றால் வயிற்பிழைக்குங் கள்ளர் தானே. 88

கள்வாநீ கட்குடிக்கும் வெறியுந்தள்ள
கர்மமென்ற மனதறிய வுள்ளே நிற்க
பிள்ளாய்நீ சம்பந்தி யாளாய்நில்லு
பேச்சறிந்து என்னுடனே கலந்துநில்லு
வில்லேபோல் நீவளையா நிமிர்ந்து நின்றால்
விறகில்லாத் தீயிடுவோம் வாக்கால்நாவால்
கொல்லவே நின்றதொரு நமனைக்கொல்வோம்
குமரியர்கள் சித்திரத்தைப் பேசுவோமே, 89

## பெண்கள் விசித்திரம்

பேசுவோம் யாம்கொண்ட பொருள்களெல்லாம்
பெண்கள்விர லிரைநகைக்கே பெண்கள் கொண்ட
காசபோல் வட்டமிட்ட பொட்டுப்பார்த்தால்
காசுலெண்ணி முடியாதே மூக்கிலேதான்
தூசுபோ லிட்டாலும் பொன்னாலொட்டு
தொங்கிநின்ற கல்லொட்டு எண்ணிப்பார்த்தால்
வீசுயரக் கல்லெறிந்தாற் செம்பொன்மேரு
மேனிநகை யாகுமல்லால் மீதமுண்டோ. 90

உண்டோதான் பெண்களந்தப் பரமேசெய்ய
உண்டுடுத்திப் பாராமல் மீதம்வைக்க
கொண்டவர்களாயுசுள்ள மட்டுந்தானே
கோடான கோடிமனு உழைத்துநைந்தார்
மிண்டோர்கள் தேடுபொரு ளெம்மட்டோதான்
மேனியதைக் குலுக்குவரே யம்மட்டேதான்
கொண்டோர்கள் வருமைவந்தா லதனைப் போக்கி
குருஞ்சிரிப்பு யீயாரே பின்காய்வாரே. 91

காய்வார்கள் முன்னாலே நம்மைத் தேய்த்து
கதைபேசி நடிப்பாரே சித்திரத்தார்
மாய்வாரே யிடுகாடு நம்மைப் போக்கி
மண்பூத்த ஈசலைப்போ லாசைபொங்கி
தேய்வாரே புத்திரர்கள் களத்திராதி
தேரிலொரு பொம்மையைப்போற் பௌத்திராதி
சேய்வாரே மக்கள்வழி கிளைஞர் கூட்டம்
தேர்வருகாள் திருநாட்போற் கூடுவாரே. 92

கூடுவார் நாம்தேட லென்னவாகும்
கொடுமையுள்ள மங்கையற்கா பரணம்பூண
தேடுவா ரிக்கூட்டக் தேடலொன்றே
தேடினவ ரிருந்துண்ண நேரம்வாய்க்கா
போடுவார் சப்ததளம் பரதசங்கை
பொய்யல்ல மெய்யிதுவே சுகமதாகும்
நாடுவார் நாடாட்டால் சுகமிதாகும்
நங்கைசுக மில்லறத்திற் பெரியதாமே. 93

பெரியதாம் பெரியதலை நம்மளுக்கே
பேர்பெற்ற சித்தர்களு மறைத்தார்குட்டு
சிறியதாம் பெண்வாலை காமரூபி
சிறுபெண்ணே வாய்பேசாப் பெண்ணைக்
கண்டார்
உரியதாய்ச் சொன்னார்கள் கன்னிகண்டோர்
உத்தமியின் வாலிபத்தைக கண்டோரானால்
விரிவதாய்ச் சொல்லார்கள் மேலே கண்டோர்
மேன் மூச்சு அறிவாலே வாலைதானே. 94

கண்டாரே வாலைகன்னி குமரியோடு
கடுங்கிழவி முக்காலம் நேரிற்கண்டோர்
உண்டாரே மண்மலைகள் கடலாம்வாரி
உண்டுமிழ்வார் சிருட்டிதிதி சம்மாரங்கள்
கொண்டாரே யவர்புருஷன் கூத்தியாகி
கொடுங்காலன் வேறெனவுஞ் செய்குவார்காண்
தண்டார்கள் வாங்கறியா ரிதலைக் கொண்டு
சாஸ்திரங்கள் பிறந்தனவே பலவார்தானே. 95

வாராக அவர்கள் கண்ட பதங்கள் போல
வாயுரையோ நின்றவளுஞ் சொன்னாளையா
கூராகச் சொல்லவில்லை அவளாற்பாக்கி
கொண்டவர்க்குக் கண்டமட்டுஞ் சொல்லி
வைத்தாள்
தேராத பேர்களுக்குப் பாக்கி வைத்தாள்
செல்பாக்கி கண்டவர்கள் மீதம்பாக்கி
கூறாதே மிச்சம் வையாள் கொட்டிவைப்பான்
குமரியர்கள் சந்தோஷம் பாக்கிதானே. 96

பாக்கிதான் முப்பதினில் முற்றும்போல
பரைவாலை முப்பதின்மேல் முழுதுஞ்சொல்வாள்
காக்கிதான் சொன்னாரே வசிஷ்டருக்கு
கண்டனென்று சொன்னாரே ராமர்குருவுக்கு
நோக்கியே விழித்தாரே புசுண்டர்காகா
நுவலுமெனச் சொன்னாரே வசிஷ்டமூர்த்தி
தாக்கியே யேதினிமேல் சிரிப்புவந்தே
சந்தேக மதைக்கெடுக்க நீர் சொல்வீரே. 97

சொல்வதே வாலைகரை கண்டோன் சொல்லே
துய்யபர வெளிநீளம் கண்டோன் கல்லே
சொல்வதே பரைவேதம் பரத்தின் வேதம்
தூண்டாது நின்றபர வெளியின்வேதம்
சொல்வதே பிரசண்ட வாய்வின்வேதம்
சொல்லடங்கா மேகக்கரு நீரின் வேதம்
சொல்வதே யுருக்கன்மதி ஞாயிர்வேதம்
சொல்மேலே சொல்தோணாக் கருவேதமாமே. 98

வேதமே மேல்திட்டு ஆதியந்தம்
விரைந்தேறிக் கண்டவர்கள் அதற்குமேலே
வேதமே சொல்லுமல்லால் மற்றோர் சொல்லார்
மேலடியிற் காலடியே தெரிந்தோர் சொன்னார்
வேதமே விப்படியே தெரிந்த மட்டும்
மெய்யறிந்தோர் சொன்னாரே பார்த்திருந்தேன்
வேதமே சொற்பிழையைத் திருத்தப்பார்த்தேன்
வேதநம்பி அஞ்சுமெனப் பிழைபாரேனே 99

பாரேனே நானிருந்து யென்னலாபம்
பரதேசி வேடமிட்டு யென்னசேமம்
கூறேனே யின்னமொரு சொல்லும்நானே
குடுகுடுக்கைக் கஞ்சாவைத் தொட்டோன்வீணே
சாணேறத் தெரியாதோன் முழத்தைத்தாண்டத்
தாவுகின்ற யீசலடி நாயேபோல
வானேறத் தெரியாதோன் பிரமாந்திரம்
வாய்கொண்டு மூக்கசைப்பான் வாசிபாரான் 100

## பார்க்கும் நெறி

வாசியே மூக்குதண்டு நடுவில் வந்தால்
வல்லபமே யோகதண்டு நிமிரலாகும்
கூசியே பாராதே நெற்றி மார்க்கம்
குமரிவிளை யாடுதல்லோ நாமமார்க்கம்
தோசியாய்ப் போகாதே நடுநாமத்தே
தொட்டேறி உச்சிவழி பிரமரந்திரம்
பேசியே பாராதே சித்திரம்போல்
பெருவூமை போலிருந்து யிமையைநோக்கே 101

இமைநோக்க உமைத்தூக்கும் மனமும்வாசி
யிடதுபுர மோடாமல் வலமாயோடும்
நமைநோக்கும் பிராணவுயிர் வாசிநோக்கும்
நாசியடி புருவமத்தி நடுவேயாகும்
தமைநோக்கும் வல்லபர்க்கு யெல்லாம்சொல்வேன்
தாதுஉயிர் நின்றவிடம் மனிதருக்கே
உமைநோக்க நெற்றியடி புருவமத்தி
ஊசிமுனை மூக்கினடி மத்தியாமே. 102

மத்தியிலே நின்றுருளு மணியாய்த்தானே
மனிதரே யானாக்கால் ஆண்டுபாரும்
சித்தியிலே யிதுசித்தி வருடமொன்றில்
சிந்திக்க யிதுமேலே நெற்றியேறும்
பத்திக்கி யிதுதானே முறைகாண்யோகம்
பார்நெற்றி நடுநாம வழியேமார்க்கம்
முத்திக்கு யிதுதானே நேராம்பாதை
முனிவர்களு மாடிடலாம் உச்சியேறே. 103

உச்சியே யேறிநின்று வட்டமிட்டு
உருமுமடா பெண்வாலை வயதோபத்து
மெச்சியே பார்த்திருந்தால் வயதேபோகும்
வெடிவாலை வாலிபமே யாகிவாழ்வான்
குச்சியே பெலத்துவிடும் குமரிதானும்
குடிசையிதைக் கட்டிடுவாள் பெலத்துநிற்பாள்
அச்சிலே குமரியவள் கிழவிபோலே
அனேகநாள் வாழ்ந்திடுவாள் உடலினூடே. 104

உடலினொடு வாழ்வதற்குப் பிரியம்வாலை
உத்தமிக்கு நம்மையன்றி வீடேயில்லை
கடலினொடு வாழாளே மலைமண்மீதும்
காரிருக்கும் வானவெளி யாகாயத்தும்
திடலினொடு மேலேதான் கீழினோடு
தேவரூபி யாவாளே சித்தரூபி
மடலினொடு பூவேறக் கொண்டையேறும்
மங்கையுட னிருந்தால்இல் லறமதாமே. 105

இல்லறம்போல் நம்மோடு கூடிவாழ
இல்லறத்திற் சோதியொளி யிதனிலிச்சை
நல்லறம்போற் சொல்லிவைப்பாள் நாவால்வேதம்
நாமிருந்து பாடிடலாம் கூடியாடி
சொல்லறமே யதுதானே முடிவேயாகும்
துயருற்று நாமிருந்தா லதுவேமாளும்
அல்லறமே யிதனையே வுருவேசெய்ய
அங்கவுடல் உயிர்மனதை அறிவாய்ச்செய்தே 106

## பத்திய விபரம்

செய்தார்கள் பத்தியங்க ளேதுமில்லை
சிறுவர்கட்கு பத்தியங்கள் முப்பதுக்குள்
வைதார்கள் பத்தியங்கள் சொல்லித்தானே
வாலிபத்தைப் போக்கியுடல் சுத்திசெய்ய
நைதார்க ளவர்மனது நொந்துசொன்னார்
நரைதிரையும் வந்தக்கால் பத்தியமுண்டோ
நொய்தார்க்குச் சொல்லவில்லை பத்தியங்கள்
நுண்ணறிவாற் கண்டுகொண்டு தொங்குவீரே. 107

தொங்குவீர் அறுசுவையுந் தள்ளவேண்டாம்
துயர்மனதை அல்லலென்று தள்ளவேண்டாம்
யெங்குநீ ரானாக்கால் மனதோவேணும்
யேதென்றாற் சொல்லுகிறேன் மனதுபுத்தி
மங்குமன மானாக்காற் கொல்லவேணும்
மனதறிவே மனத்தெளிவே கருத்தேயூகம்
தங்குவீ ரானாக்கால் மனமேஆதி
தன்மனது மாண்டாக்கால் மாளுமாமே. 108

மாளுகின்ற துன்பமது மனதேகாட்டும்
மனதையன்றி வேறுமுண்டோ சத்திதெய்வம்
பாழில்நின்ற சத்தியல்லோ மனதேயாகும்
பரதெய்வ மானாக்கால் சத்திசேரும்
வாழுகின்ற மனதைவெல்லத் தம்மாலாகா
மந்திரத்தி னாலாகா குருவாலாகா
வீழுகின்ற மனதல்ல வேதத்தாலே
மெய்மனது மாளாது நிற்கும்பாரே. 109

நிற்குமந்த மனந்தனையே வென்றோரென்றார்
கீழ்மனது குறுகினதால் நினைவுபோமோ
கற்குமே யல்லாது தர்க்கம்நேரும்
கல்மனதும் நெஞ்சினிலே ஒன்றைப்பற்றி
வர்க்கமே தேடாமல் சிறுத்துநின்று
வாயுரையை யொழித்ததினால் நினைவுமாறா
தர்க்குமே யிதனாலே யாவதேது
சடமரண மானாலே நினைவுபோமே. 110

## யோகம்

நினைவுமே போயொழிந்தா லிருளேயாகும்
நெற்றிக்கண் ஞானக்கண் ணாகுமோசொல்
நினைவுமே மாறிவிடில் சுவரேயாகும்
நீநிலத்திற் குட்டிச்சுவ ரென்றுபேரு
நினைவுமே தப்பிவிடில் தனைமறந்தார்
நீசர்களுந் தனைமறக்கத் தவஞ்செய்தாரோ
நினைவுமே போகாமற் தவமேசெய்தார்
நெற்றிக்கண் முனியானார் சித்தர்தானே. 111

சித்தரிஷி முனியாகாப் பதத்திேனோர்கள்
செத்தசவம் போலிருக்கச் சிரித்தார்மேலோர்
சித்தரிஷி முனிகள்பதம் உடலைத்தொட்டே
தேகமதை மறந்திடிலோ உயிர்தோணாது
முத்தருயி ருடல்மனது தவிர்த்தாரானால்
மோகதெய்வ மெங்கிருக்கும் சடத்திற்றானே
கர்த்தருமே யானாலுஞ் சாஸ்திரமீவார்
கரைமனது கடினம்விட்டுச் சுகமாய்ச்செல்லே. 112

செல்லுமந்த மனந்தானே துக்கம்விட்டு
சேர்ந்தசுக மதினாலே மனமாளாது
கொல்லுமந்த மனமென்றாற் துக்கம்விட்டு
கொடியமனம் பரமசுக மடைந்திடாதோ
நில்லுமன மென்றாக்கால் நின்றிடாது
நேர்சுகத்தைக் கண்டாக்கால் மனமேநிற்கும்
வில்லெனவும் பாயுமது அடங்கிநிற்கும்
வேதாந்த மாமிந்த விபரந்தானே. 113

ஆமிந்த மார்க்கத்தை நாமேகாண
அங்கமுடல் மார்க்கத்திற் பத்தியமேனோ
நாமிந்தப் பத்தியத்தைக் கண்டிலோமே
நாட்டினார் பத்தியங்கள் விரதமார்க்கம்
தாமிந்த நெறிசொல்லக் கூடாதய்யோ
தர்மமோ சொல்லிவைத்தார் துறவுக்காக
காமிந்த யில்லறத்தார் தவத்தார்க்கன்னம்
கைவாயும் வயர்நிறையச் செய்தார்பாரே. 114

வாய்வயருங் கைநிறையச் செய்தார்க்கிந்த
வயற்றெரிச்சல் சொல்லிவைத்தார் பத்தியம்போல்
சேய்வயரைப் பட்டினியே போட்டுண்பார்போல்
சித்தர்களும் அமிர்தமிட்டு விஷமேயீய்ந்தார்
தாய்போலும் வந்ததொரு சேய்மேற்குற்றம்
தான்காட்டி உண்டீரென் றெண்ணாமற்றான்
மாய்வாரு முண்டோதா னதுபோற்றானே
மக்களுக்காய் நானிறங்கி யிதைச்சொன்னேனே.
115

## வியாசன்

சொன்னதினா லுஞ்சிசுவுஞ் சத்திரியன்றான்
தொடர்சத்திரி யன்குழந்தை பராசனோடு
இன்னிலத்திற் பராசனவன் குழந்தைதானும்
இவன்பெயரோ வியாசரென சொல்லலாகும்
அன்னவன்றன் பாலனவன் சுகனுந்தானும்
ஆச்சரிய மென்றுசொன்னார் பெண்ணில்லாததால்
மன்னவனாஞ் சனகனிடங் கேட்டதென்ன
மலடிபிள்ளைப் பேரான வாறதாச்சே. 116

ஆச்சப்பா யிப்படியே சாஸ்திரஞ்சொன்னார்
ஆச்சிரம மிருந்தவர்க ளதுபோலாக
மூச்சப்பா சொன்னார்கள் யோகமுள்ளோர்
முனியாதோர் சொன்னார்கள் சமமாம்பார்வை
பேச்சப்பா சொன்னார்கள் சுவடிபார்த்தோர்
பித்தரைப்போ லாக்கிவிட்ட பித்தம்போல
கூச்சப்பா வேதாந்தக் கோஷ்டிதானே
கூசாமற் கத்தினதால் கோட்டியாமே. 117

கோட்டிதான் கத்தினவன் கிருக்கனாவான்
குருசொல்லைக் கேழாதான் தர்க்கனாவான்
பாட்டியார் சொற்கேழாச் சிசுவைப்போல
பரத்தைமனம் பலவாறாய்ச சிதறல்போல
கூட்டித்தான் பறந்தமனம் பாராமுத்தர்
கொட்டினது கொட்டுந்தேள் கொள்கைபாரு
நீட்டித்தான் சொன்னாலும் தன்னாலாகா
நிமிஷமதிற் பிரண்டுவிடு மனிதர்வாக்கே. 118

மனிதரவர்க் கெதிர்வாக்குப் படிந்தோன்வாக்கு
மாபடித்தோன் வாககுயெதிர் அஷ்டாவதானம்
மனிதர்வாக் கதுதனி லிதுவுஞ்சேர்ந்து
மாவருளிற் பத்திமுத்தி யிதுவுங்கூடில்
மனிதர்வாக் காகாது முத்தர்வாக்கு
மகாமுத்த ரதிலுண்டு சீவன்முத்தர்
மனிதர்வாக் கானதிலு முத்தர்மேலோர்
மாசித்தர் மேலதிலு முனிமேலோரே. 119

மேலானோர் தரைதனிலே முனிமேலானோர்
மேவுகின்ற முழுப்பதமுங் கண்டாலன்றி
கீழானோர் சொன்னமுறை குறையேயாகும்
கீழிருக்கு மதுபோலே சரிதைபோலே
சூலானோர் பிரசோப துன்பந்தன்னை
தூண்டியவன் சொல்லியழுங் கதைபோலாகும்
தாழாவோர் மேலிருந்து சொன்னசொல்லை
தந்திமுகன் தம்பியொடு தான்தட்டாரே. 120

தட்டார்கள் பிரமரிஷி யானாலுந்தான்
தவசிகட்கு மெட்டாது பினனாற்றோணும்
கொட்டார்கள் தவசுநெறி பெரியோரானால்
குருவென்று சொல்லார்கள் சிலேகர்போல
விட்டார்க ளன்புதனைச் சினேகமானார்
விரதமென்ன நெறியில்லாச் சுகியானார்கள்
கட்டார்க ளன்புகொண்டு குருவுந்தெய்வம்
கலைசுவடி சாஸ்திரங்கள் பீடமாச்சே. 121

## பொய் வேடம்

ஆச்சிந்த வரிசைவிட்டு உலகத்தாசான்
அங்கங்கள் தனைமினுக்கி வேடமிட்டு
பூச்சிந்தக் காவிநீர் புலித்தோலிட்டு
புரிமுறுக்குங் கயர்போலே சடையுங்கட்டி
பேச்சிந்த மூச்சறியான் குறடுமிட்டு
பேய்மனதை யறியாதான் வீச்சேயிட்டு
மூச்சிந்த மனந்தெளியப் பாரார்வாசி
முன்னிருந்தோர் புலன்பற்றிப் பேசுவாரே. 122

பேசுவார் புலனறிந்தோ ரேசுவாரோ
பேய்ப்பிள்ளை போலிருந்து பேசுவார்கள்
கீசுவார் தனையறிந்து மாசுபாரார்
கிட்டிருந்துந் தான்விலகி ஓடிப்போவார்
பூசுவார் வெகுநாளாய்க் காத்தேனென்பார்
பொன்குருவு கேட்டதெல்லா மீய்ந்தேனென்பார்
ஏசுவார் சொற்பலித மில்லாத்தாசி
இவர்பேச்சைப் பேசினதால் வருவதேதோ. 123

வருவதேது மனந்தெளிதல் தவசுதானே
மாகலக்க மில்லாது முத்திதானே
பெருவதேது பின்பிறவி யில்லாச்சாவே
பெருஞ்சித்தி கேட்டதெல்லாம் வருதல்தானே
உருவதேது சாவறிதல் மரணகாலம்
உள்ளிச்சை மாறுவதே மோசலாபம்
கருவதேது யிப்பிறவி பின்னேமுன்னே
கண்டுகொண்டு உடல்பிரிதல் மோச்சம்பாரே. 124

மோச்சபதம் வேண்டியல்லோ யிச்சைதள்ளல்
முனிவதனை நீக்குதலும் முளையாம்பார்வை
நீச்சபதம் நீக்குதலு மதற்குத்தானே
நீராடிச் சுத்திடுவார் குளமுங்கோவில்
மாச்சபதம் மாச்சலது மோச்சலாபம்
வாய்பேசார் பேசினருங் கண்டாருண்டு
ஏச்சபதம் சாஸ்திரங்கள் தொட்டுக்கொள்ளார்
எந்தமலை போவமென்பார் குருவென்பாரே. 125

குருவென்பார் யிருவென்பார் நாம்தாமென்பார்
கோரக்கர் மூலிநமக் கிச்சையென்பார்
பொருவென்பார் நாமிருவர் போதுமென்பார்
பொய்க்கூட்டந் தளளென்பார்
மலையேறென்பார்
திருவென்பார் கண்காட்சி தெய்வமென்பார்
தேடியதைக் கண்டாரைத் தீனியீயார்
மருவென்பா ரிவர்சொல்லைக் கேட்டோர்வாழ்தல்
மறலிகையி லகப்பட்ட வழமொப்பாமே. 126

ஒப்பாகுங் கண்தெரியா மாடுதானே
ஊர்நிலத்தை உழுததுபோ லுவமையுண்டோ
கப்பாகு மலர்மனது பலவாராக
காசினியிற் காண்பதுவு மெத்தவுண்டு
செப்பாகச் சொல்லுதலே சிரித்தலாகும்
தேரில்வரு பொம்மையது சிரித்தலொப்பாம்
அப்பாகும் நாமறிந்த ததுவும்யீதும்
அசடர்களு மெய்யர்களும் பொதுவென்றாரே.
127

வென்றார்கள் பாவனையைக் கண்டோர்
மெய்நலிந்தோர் அவுசதத்தைப் பாவித்தாற்போல்
குன்றார்கள் அனேகநூல் தெளிந்தோரானால்
குருமுறையைத் தெறிவார்கள் அறிவுதன்னால்
நின்றார்கள் தங்களுக்கு யெம்மாலுந்தான்
நிகழ்ந்தநூல் தம்மாலும் நேரில்நிற்கா
பொன்றார்கள் புலித்தோலைப் பசுவிட்டாப்போல்
புலியல்ல வேடமிட்டுப் பொய்யாப்போச்சே. 128

போச்சப்பா காரீய குருச்சந்தேகம்
பொய்யல்ல நிசம்போலப் பொய்யாய்ப் போகும்
நீச்சப்பா அவர்மனது காச்சல்மெத்த
நிலையற்ற நீரின்மேற் பாசிபோல
ஆச்சப்பா அந்தரங்கம் வெளியில்நில்லா
ஆனாலுஞ் சுத்தமனம் பாழ்வீணாகா
வீச்சப்பா பாழ்மனது சொன்ன வாக்கு
வெளியில்நின்ற ஒளியதுபோல் மேனியாமே. 129

மேனியது ரூபமது மெய்யிற்காணும்
மெய்வெழுக்கும் நிறங்கருக்கும் வீண்சொல்லில்லை
கூனியது நடப்பனபோல் பிலமேயாவார்
கொண்டதொரு உடல்சொரூபம் பலவாராகும்
தீனியது வயர்நிரையத் தொழிலுமுண்டு
செய்கையது வேறில்லை ஒன்றுமாகா
கோணியே யாகிவிடுந் தெரிந்துகூடில்
கோலங்கள் பலரூபங் கொடுக்குங்கூடே. 130

## வாலை

கூடுவது நிமைக்குமுன்னே குளிகைகூட்டும்
கூப்பிட்டாற் பூரணமுங் கூடப்பேசும்
ஆடுவது உச்சிவெளி தன்னிலாடும்
அமர்ந்திருக்கும் நெஞ்சடியிற் பள்ளமேடை
ஏடுவது மூலதலங் கீழேதானே.
இருகாலின் பாதமதைச் சுத்திநிற்கும்
தேடுவது உச்சியிடை பாதமட்டே
செய்தறிநீ கைபாகஞ் செப்பினேனே. 131

செப்பிவைத்தே னின்னூலில் ஆதியந்தம்
திரட்டிவிட்டேன் வயித்தியசோ திடமுநீக்கி
ஒப்பிவைத்தேன் உள்ளங்கால் பரப்புவெல்லாம்
உயிர்மூச்சு அசைந்தாடும் வாய்வுபோலாம்
கப்பியது உலையேறல் அரிசியோடு
கண்டதுபோ லிடுப்பின்கீழ் வாசியோடும்
துப்பியது வாய்மூக்கி லோடுமாப்போல்
துண்டுதுண்டா யோடாது நிற்குந்தானே. 132

## யோகம்

நிற்குமந்த வாசியது உச்சிக்கேரா
நின்றயிடை நின்றஉயிர் மூலம்நிற்கும்
கர்க்குமந்தச் சென்னியுச்சி மூலம்நிற்கும்
கலைவாசி பிராணனுயி ரிதன்பேராகும்
வர்க்கமிந்த வகையுள்ளே திரண்டுநிற்கும்
வால்நீழுஞ் சமயத்தில் வாசிவாலை
தர்க்கமிந்த மும்மலமே வெளியேதள்ளும்
சாதிப்பேன் மும்மலமே சொல்லுவேனே. 133

## மும்மலம்

சொல்லுவேன் தொண்டைநீ ரிடுப்பின்நீரும்
தொங்குகின்ற சலநீர் மலநீருமூன்று
கெல்லுவேன் கெல்லிடுங்கள் உடலேசக்தி
கேசரத்திற் தொங்கிடலாம் உச்சிமேடை
நல்லவனே உச்சிமுதல் பாதமட்டும்
நடுநாடி மூலம்வரை மலத்தைப்போக்கும்
வல்லவனே மும்மலந்தான் தடையேசத்துரு
வாசிவலு வாகினவன் போக்குவானே. 134

## அமுர்தம்

போக்குவான் அண்ணாக்கில் உச்சிவாசல்
பொங்குநீ ரமுர்தமென்று யெண்ணவேண்டாம்
நாக்குமேல் நாக்கிருக்கும் நாக்குநீரை
நமதுவர்க்கஞ் சொல்லவில்லை தேனீரென்றே
மூக்குமேல் மூக்குமத்தி தண்டினுள்ளே
முனைவழியே யேறுமந்தப் புருவமத்தி
தாக்குமே உச்சிதொட்டுக் கீழேபாயும்
தலையேறிப் பிடரிவழி யோடுந்தானே. 135

ஓடுமந்த உச்சிவழி வட்டமிட்டு
உட்பிடரி வழியிறங்கும் கயரேபோல
கூடுமந்த முள்ளெலும்பு மூலநாடி
கொண்டந்தப் பாதைவழி யிடுப்பின்மத்தி
தேடுமந்தப் பின்புறத்தில் முதுகின்மத்தி
திரைஅலைபோ லலைவீசி வாசிபாயும்
நாடுமந்த வாசல்வழி குடத்துநீரை
நாம்கொட்டும் வாறதுபோல் கொட்டுந்தானே. 136

கொட்டுமந்த வாசிஉயிர் பிலத்ததாலே
கோறுவார் பிராணலயத் தருகில்மேவி
தட்டுவர்கள் கொட்டலைப்போல் யோகமார்க்கம்
நாமுழுது பயிர்கண்டு வேலிபோட்டு
முட்டுவர்காண் நெற்றிவழி தினமுந்தொட்டு
முன்பிறவி தோற்றமட்டும் பூசைசெய்வார்
கட்டுவர்காண் தன்மனதை பிறவிநீக்க
காயநிலை கண்டதனால் நீத்தார்பாரே. 137

நீத்தார்கள் சமாதிநிலை கண்டோர்ஞாயம்
நிகழ்த்தினேன் வாலைபதம் பூசிப்பாய்நீ
காத்தார்கள் பிராணாயந் தெரியவேணும்
கழருவேன் யான்கண்ட அதிசயத்தை
பூத்தார்கள் நிஷ்டைமுத்தி சமாதிகண்டு
பொங்கிவிடுஞ் சமாதியினிற் சேதியெல்லாம்
ஏத்தார்கள் தன்னுடைய விபகாரத்தை
எதிர்நின்று சொல்வதுபோல் சொல்லினேனே. 138

சொல்லுமிந்தக் காயவுட லழியுமட்டும்
தூண்டுவிக்கு முன்பிறவி முற்றுந்தோற்றும்
செல்லுமந்தக் காலமிந்த ஆதியந்தம்
செப்பினது திரிகால வர்த்தம்பாரு
கெல்லுமிந்த வகையதனைச் சொன்னீர் நல்லோய்
கேட்டறிவுக் குத்தரந்தான் விள்ளுமேலோய்
கொல்லுமிந்த மனமாளும் யோகத்தாட்டில்
கொடியமனு யோகியென்றால் யோகமுற்றே. 139

யோகமுத்தி ஞானபதம் விரும்பாமற்றான்
உள்ளுணர்வில் காட்டுவிக்கும் சமாதியென்பார்
யோகமுடி வேசமாதி பிரமநிஷ்டை
யூகித்தார்க் கருத்துதிக்கும் மேலேசொல்லும்
யோகமது திரிகால யோகமாச்சு
உற்றுணர்ந்து காண்பதுவுஞ் சம்பிரதாயம்
யோகமது யென்னசொல்வேன் கருத்தால்வந்த
யோகத்தி லாச்சரியங் கோடியாமே. 140

## சித்தர்

கோடியென்றாற் கோடியல்ல கோடாகோடி
கொங்கணவன் சொல்லிவைத்தா னதுபோதாது
வாடியென்றால் மனஞ்சுருங்கும் பெண்டீர்போல
மனஞ்சுருங்கும வாசிலனூ கோடிசித்து
பேடியென்றா லாணுக்கு வீரம்போல
பெருஞ்சித்தி மமன்மேலும் விளைவிக்குந்தான்
கூடியுந்தான் ஒட்டாம லிருக்கவேணும்
குமரகுரு வர்க்கத்தி லகஸ்தியர்தானே. 141

அகஸ்தியரே பெருப்பேற்றை யடைந்தோராவர்
அம்மம்மா வெகுதெளிவு அவர் வாக்குத்தான்
அகத்திலுறை பொருளெல்லாம் வெளியாய்ச்சொல்வர்
அவர்வாக்குச் செவிகேட்க அருமையாகும்
அகஸ்தியரின் பொதிகையே மேருவாகும்
அம்மலையும் அகஸ்தியரின் மலையுமாகும்
அகத்தியரி னடையாளம் பொதிகைமேரு
அவர்மனது மலரைப்போற் பெரியோருண்டோ. 142

## துவாபரத்தில் போகநாதன்

உண்டோதான் துவாபரத்தில் போகநாதன்
உதித்தகுலாத துடனேதா னிங்குவந்தார்
கண்டோதான் கருவூரான் போகநாதன்
கர்மமில்லாக் கன்னிசித்தன் கொங்கணன்றன்
விண்டேதான் தன்வந்திரி ஞானஞ்சொன்னார்
விபரமறிந் தகஸ்தியர்குலாம் அங்கெழுந்து
கண்டேதான் ஞானங்கள் மிகவுஞ்சொன்னார்
காதிலே கேட்டேநல் வாக்கென்றேனே. 143

வாக்கியென்றால் வாக்கியன் போகநாதன்
மானிலத்திற் சொல்லியநூ லெல்லாங்கேட்டேன்
ஆக்கியநூல் யாவுமே அமுதமாகும்
அம்மம்மா வாயாலே சொல்லப்போமோ
பாக்கியமாய்ச் சொல்லிவிட்டா ரமுதமாகும்
பண்பான நூல்களையும் மறைத்துக்கொண்டார்
நோக்கியே வேடமிட்ட குருக்கள்தன்னை
நுளையாதே ஊர்வழிபோ வென்றேன்பாரே. 144

பாரப்பா பொய்குருக்க ளெல்லோருந்தான்
பரதேசி வேடமிட்டுப் புறப்பட்டார்கள்
ஏரப்பா உழுதாக்கால் உலகங்காணும்
இல்லறத்தின் சற்புநிலை தெரியாமாந்தர்
கூரப்பா சொன்னாலும் குலவழக்கம்
கும்பிடுதல் கோவில்குளம் யில்லாப்பாவி
வீரப்பா அந்திசந்தி அனுஷ்டானங்கள்
விரதவகை தொட்டறியா நீசன்றானே. 145

நீசரென்ன கூட்டமாய்க் கூடிக்கொண்டு
நீனிலத்திற் தர்க்கித்தார் குலமாமாந்தர்
ஈசரென்ன நீரான தச்சுவேறோ
எங்கள்குலம் வேறான வாருமேது
பாசமென்ன நீரறிந்தீர் பாசம்விட்டாற்
பரத்துடனே யாம்கலந்தோம் போவென்றார்கள்
தாசரென்ன நீரிருந்தீ ரிதர்க்குமுன்னே
சமயத்தைத் தள்ளிவிட்டோம் யேற்கோ
மென்றாரே. 146

ஏர்க்கோமென் றிகழ்ந்ததினாற் குளமுங்கோவில்
இவர்களுக்கு ஆகாம லிருந்ததாலே
பார்க்கோமே கோவிலுக்குள் மூலஸ்தானம்
பரவாசி கண்டிருந்துந் தள்ளிவைத்தார்
ஆர்க்கோதான் நம்மளுக்கோ ஆகாக்கோவில்
யார்போயென் னாரிருந்தென் னிகழ்ந்து
சொன்னார்
நார்க்கோ னாகாது வாக்கியன்தான்
நாட்டினான் கற்சிலையொன் றீட்டினானே.. 147

சுட்டினான் ஒடோடி யெழுதிக்கீறி
இதயமதின் சூடதனை யெழுத்தரைந்தான்
மூட்டினான் மறைந்தவர் குலமாம்வர்க்கம்
மோசம்வரு மென்றுசொல்லிப் பதனஞ்செய்தார்
நீட்டினா னிதுபோல வள்ளுவசாம்பான்
நீனிலத்திற் தன்னரசு நாடாங்காலம்
கூட்டினான் செபதபங்கள் தெரியாதாலே
குலவர்க்கம் படிப்பிலிரா குலத்திலெய்திடுமே. 148

எய்தாது படித்தாலு மெய்தாபாரு
எங்கள்குல சம்பிரதாயம் யார்க்குந்தோணா
வைதாலும் பறைச்சிமகன் வைதுபோடா
மானிலத்திற் பெண்டுவிற்குங் குறவன்போடா
செய்தாலு மிதுவறியாத் தோஷிபோடா
சீசீசீ கோவில்குளத் தோஷிப்பாடா
எய்தாலு முங்கள்குல மண்ணுள்மட்டும்
யெக்காலங் கும்பிடுவீர் வுட்போவாயோ. 149

## தெய்வ மிகழ்தல்

உள்ளேதான் போகாத தோஷிநீதான்
உயிர்தெய்வங் கல்லென்று செப்பிவிட்டாய்
கள்ளேதான் குடித்தாயோ அடியுண்டாயோ
கருமிகையால் சிக்கிநீயி டியுண்டாயோ
வல்லேநா னென்றுநீ போகாமற்தான்
வாய்மதத்தாற் பட்டசளம் மெத்தவுண்டு
செல்வேநா னென்றுநீ போகுங்காலம்
செம்புச்சிலை யென்றுநீ சிறுவனாவாயே. 150

சிறுவனாய்ப் போனதென்ன உடர்க்கர்யந்தான்
திருமூர்த்தி யானாலும் பொருமைவேணும்
கருவிலே செனிக்கையிலே தாயார்தந்தை
கன்மனைவி பிள்ளைசுற்றந் தமரினோடு
தருவனாய் மலைகடலு மாற்றினோம்
தான்பிறந்த மன்றினிலும் வினையம்புத்தி
பெருவனாய்ப் பேரிழமை பிணிமூப்பின்பம்
பிறந்தஉட லழியுகின்ற சாவுந்தமாமே. 151

அந்தமே ஆதிதொட்டுக் கருவமைந்தால்
ஆகாத தொன்றுமில்லை அனர்த்தமில்லை
பந்தமே வந்தாலு மூன்றுபத்தில்
பலிக்காது நின்றுவிடும் பழகினாக்கால்
சொந்தமே யாகிவிடுஞ் சமையதீச்சை
சொற்பேதந் தானறிவார் தீச்சைமேலோர்
சுந்தமே நீண்டுவது பிறர்க்குங்கூட
காதுகண்ணு மூக்குவா யுடற்சுகம்போல். 152

## சித்தர் வர்க்கம்

சுகம்போலே சொல்லிவைத்தான் காசிநாதன்
சொன்னவிதிற் காசிபரும் அதிதியோடு
மகம்போலே திதியோடு வாழ்ந்தான்மேலோன்
மக்களிலே வல்லவர்கள் விதமிரண்டு
அகம்போலே சொல்லிவைத்தான் நந்தியீஷன்
அவன்மகனாங் காலாங்கிச் சித்தன்தானும்
நகத்திலே விரல்நுனியில் அழகுண்டாப்போல்
நாட்டினான் திருமூலன் விபரந்தானே. 153

விபரமாய்த் திருமூலர் பிள்ளைபோகன்
மேலான பிள்ளைகளா மூவருண்டு
அபரமே கொங்கணவன் கருவூரானும்
அய்யாகேள் புலிப்பாணி மூலர்பிள்ளை
விபரமே யிதுபோலே பிள்ளை பெற்றார்
மெய்சிலிர்க்குஞ் சொன்னாலும் பிள்ளைநேர்மை
அபரமே யிதுபோலே அகஸ்தியர்க்கு
ஆனந்த சுந்தரரு மிடைக்காட்டாரே. 154

## சித்தர்

காட்டாருஞ் சட்டையரும் புலத்தியர்மச்சர்
ஆச்சரிய மானதொரு பிள்ளையாகும்
பாட்டாரே கோரக்கர் ராமதேவர்
பரிபாஷையாகவே நூல்கள் சொன்னார்
மீட்டாரே ஒருவருந்தான் காணமாட்டார்
மேலான பெரியோருந் தெரியமாட்டார்
கூட்டான கோரக்கர் சொன்ன நூலோ
குமரிமார் நைந்ததுபோல் மனம்புண்ணாமே. 155

புண்ணாகும் குழியழற் பட்டமாந்தர்
புழுவிருக்கு தென்றறியார் கசிந்துநீரால்
மண்ணாகு மவர்மன கூ வுடலிருக்க
வாய்நீரும் வேர்வைவழி வந்தபோது
எண்ணாத கணக்கில்லை அதிகமானால்
யேதுண்டு புண்குழியி லிறைச்சியுண்டு
தன்னாகுந் தண்ணீரே யொழுகும்நாற்றம்
தாரைவழி நீர்விடலு மிரண்டும்பாரே. 156

இரண்டின்மேற் சியொழுகல் பத்தின்மேலே
யிதுபோலே புருஷருக்கீ ரைந்தின்மேலே
தண்டின்மேல் ரோமமது வலுக்குங்காலம்
தந்தையுடன் தாயாருந் தள்ளிவைப்பார்
வண்டின்மேற் குப்பிருக்கும் வாரேபோல்
மனதிருககு மங்கையர்கள் வாசலோரம்
மொண்டும்ம தேன்குடிக்க வண்டுபாயும்
மோகவலை தடுப்பதற்கு யாராலாமே. 157

## ஞானம்

ஆகாது ஆண்டொன்று அடுப்பாரானால்
அய்யய்யோ வதின்பிறகு மாதம்மூன்று
வேகாது மற்றநா ளென்ன செய்வார்
வெரும்பேச்சாய்ப் போய்விடும் யேவல்செய்வார்
போகாது நித்திரையின் நினைவின் துக்கம்
புருஷருக்கு மாகாத பாவியான்னாள்
நோகாது அவளைவைத்துப் பார்ப்பதற்கு
நுண்மணலைத் திரித்திடலா மிதுவாகாதே. 158

## குடும்ப மார்க்கம்

இதுவாகா முப்பதின்மே லிருவருக்கும்
இழஞ்சிசுக்கள் வந்துவிடில் ரெண்டுமூன்று
மதுவாகத தான்வளப்பார் படுக்கை வீட்டில்
மைந்தரொடு பெண்களொடு தாயார்பக்கம்
பொதுவாகப் படுக்கையதி லெல்லாங்கூடும்
பொழுதுவிழப் புருஷருக்குப் படுக்கைவாய்க்கா
எதுவாகத் தாய்தந்தை யிருப்போர்முன்னோர்
யிதுவிலகி யிருப்பதற்கு நேரமாமோ. 159

## மலடி மார்க்கம்

நேரமது விடிந்தபின்பு நேரேநிற்க
நிமிஷமது கவலையில்லா நேரமில்லை
தூரமது போவமென்றாற் துரத்துவானே
தும்பிமுகன் பெருச்சாளி சுரண்டினாப்போல்
காரமது மேலிடுமே மலடிமார்க்கம்
காட்டுகிறேன் பெண்ணணங்கு சரீரங்கல்லு
வீரமது யென்னசெய்யுஞ் சும்மாதூங்கும்
விதைவையுடன் கூடினாப்போல் வேலையீதே. 160

வேலையிது வென்றுசொல்வான் அழுதாப்போலே
வேறுமுக மேகிடுவான் யெனக்கேனென்பாள்
காலையிலு மாலையிலும் ராக்காலத்தும்
கடிதடத்தின் தெரிசனமே தடையில்லாதே
சேலையிலு மினுக்கியிடுஞ் சடமேகல்லு
சிலையதனைப் போயணைத்த சுகம்போலய்யா
பாலதனில் மட்டிப்பா லுண்டாப்போலும்
பசிக்கிஅன்ன முண்ணவும் பழையதாச்சே. 161

பழையதாய்ப் போனபின்பு தள்ளிவைப்பார்
பக்குவங்கள் தப்பினதால் நரைத்தபின்பு
கிழையதாய்க் கூடியிருந்த சேர்க்கையாலே
கிழவியென்று யெண்ணாமற் கிழவரோடு
மழையதாய்ப் பேச்சிழுத்து உலகமார்க்கம்
வாயுறவு கொண்டாடிக் கூடுவார்கள்
கிழையதாய்ச் சம்பந்த மானபின்பு
கிழவிமக்கள் பிள்ளைகளைத் தூக்குவாளே. 162

பிள்ளைகளைத் தூக்குதற்கு மகள்வீடேகி
பெருந்தூர மேகிடுவாள் தனியேவைப்பாள்
பிள்ளைகளின் சம்பந்த மானபின்பு
பெருங்குடும்ப மெனக்கென்ன வென்றுசொல்வான்
பிள்ளைகளைப் பெருமுன்னே தன்தேயாவாள்
பெற்றபிள்ளை அன்னமுண்டாற் சரியேயாவாள்
பிள்ளைகளை யேவளர்க்கத் தூக்கநேரம்
பிசகாமல் நின்றிடுவா ளேசுவாளே. 163

ஏசுவாள் சுகதுக்கம் நமக்கேயென்றாள்
இச்சுகமே போதுமக்கு யெனக்கேனென்பாள்
விசுவாள் சாஸ்திரத்தி னுண்மைபோல
வீணிலே நானிருக்கேன் போம்நீரென்பாள்
பேசுவா ளவ்வைபுருடன் மட்டிமட்டி
பெருமூச்சு தானும்விட்டு எழுந்திருந்து
கூசியே அருகில்நின்று வார்த்தைசொல்வான்
கொடுமையுள்ள பெண்ணணங்கு மிஞ்சுவாளே. 164

மிஞ்சினே னுமையணைந்த விச்சைஷத்தாலே
மேலான காரியங்க ளெல்லாங்கண்டேன்
துஞ்சினேன் கவலையன்றிப் படுக்கைகொண்டேன்
சுடுகாடு போலானேன் சுகமதானேன்
அஞ்சினேன் சூக்ஷமது காணாதாலே
அங்கமதில் நெஞ்சுநடுப் பள்ளமேடை
கெஞ்சினா னதையறிந்து பிளந்துவென்றேன்
கேடில்லா திருந்ததுதான் ஞானமென்னே. 165

என்னவென்று நாமிருந்தால் பின்னேவந்து
ஏங்கவைக்கு தோர்நினைவு யென்னசொல்லும்
முன்னேதான் சொன்னபெண்ணைத் தள்ளிவைத்தால்
மோசம்வருங் காயப்பெண் ணிரவில்வந்தே
என்னேநீ யெண்ணிக்கை நினைவுமேலே
எழுந்தோடி வந்துவிடும் நம்மூக்குள்ளே
அன்னேதா னென்னாலுந் திரும்பிவந்து
அழுதவளு மடிபிடித்துத் தொங்குவாளே. 166

தொங்குவாள் வையகத்துப் பெண்ணில்மாந்தர்
சொக்குவார் பொருளில்லார் பெண்ணின்மேலே
தங்குவார் பொருளிருந்தா லடிமைசெய்வார்
தன்சணவன் கோபமெல்லாந் தாங்கியேங்கி
பொங்குவார் பொருளில்லாப் புருஷராலே
புலைவேடந் தானெடுத்தா லழுதுநிற்பார்
மங்குவா ரிப்படியே புருஷன்பெண்டீர்
மாமலையி லிருந்தாலுங் கூடித்தானே. 167

கூடினார் பெண்களுமே பெண்ணின் கூத்து
குமரகுரு பரன்வீட்டி லிதுதானப்பா
பாடினா ரிப்படியே யதனைக்கண்டு
பரதேசி வேடமிட்டார் மலைமேல்நின்றார்
தேடினார் சிவனுமையு மூத்தார்தானும்
திருமாலும் நான்முகனுந் தேடிக்கண்டார்
வாடினார் சரஸ்பதியு மாலின்தேவி
மாதீப லெட்சுமியும் நாடினாளே. 168

நாடினார் மலைமீதி லிருக்கக்கண்டார்
நங்கைவள்ளி தெய்வானை வெட்கிநின்றாள்
ஓடினார் யானைவள்ளி புருஷன்தானே
ஓடிதே யென்றுசொன்னார் உலகவாழ்வே
சாடினார் யெங்களைப்போல் நீயுஞ்செய்தாய்
தட்வாணி நீயல்ல யெம்மைப் போல
வாடினாய் நீயிருவே னாங்கள் போறோம்
மதிவிட்டோம் பிள்ளைகளை வித்தாற்போலே. 169

போலவே வேலையிட்டார் விந்தையிட்டார்
புழுக்கூடு சாவதற்கே சலனந்தொட்டார்
ஏலவே நாமள்வந்தோ மிந்தமார்க்கம்
எப்போதும் நாமழியச் செய்துவைத்தோம்
சாலவே சங்கடமே லேசாய்ச்செய்தோம்
தம்மையுமே நாமறிந்து சிசுவைச்செய்தோம்
காலமே வந்தகதிர் மறைந்தஞாயம்
கதிரில்லாச் சூரியனோ மறைந்ததேனோ. 170

ஏனோதான் நம்முடலும் நாமழிந்து
யிருதயத்தைப் புண்ணாக்கி விந்தைவிட்டு
கூனேதா னாகியுள்ளே ரத்தங்கெட்டு
குடிசையுள்ளே நாய்படுத்துத் தூங்கினாப்போல்
நானேநா மெல்லோரும் பிரண்டுருண்டு
நாயகியாள் தன்னிடுப்பில் விழுந்தகூரு
தேனேதா னெடுத்துண்ணக் குழவிகொட்டத்
தெய்வமே யென்றழுத துன்பந்தானே. 171

துன்பமே மனத்துன்பம் மேலேஏறும்
கொக்குடற் காய்ச்சல் லம் புண்ணாய்வேகும்
இன்பமே யித்தனைக்குந் தீயிட்டாப்போல்
யிவர்போலே தானிருந்து புண்ணாம்மோகம்
சம்பமோ வதநில்லா நம்மைக்கொல்லும்
சாயவுட லுண்டுவிட வந்தாள்மாரி
தம்பமோ மோகசுக மெந்தமட்டோ
தரித்திரம் வந்தபின்பு சினேகமுண்டோ. 172

உண்டுஉண்டு பொருளிருந்தா லெல்லாமுண்டு
ஊருண்டு காடுண்டு மலைதானுண்டு
தொண்டுண்டு தீபவொளி மேடையுண்டு
சுடுகாடு போமளவு மேன்மையுண்டு
தண்டுண்டு பொருளில்லார்க் கென்னவுண்டு
சமத்தென்ன வாயென்ன சவுடாலென்ன
கண்டுண்டு கேட்பதென்ன தோணாதென்ன
கர்மமென்று சொல்லிடுதல் யெதனாலென்னே. 173

வாலை

என்னவென்றால் நம்கோஷ பீஷமத்தி
யிருக்கின்ற கொடியொன்று கயரைப்போல
சொன்னதிதில் முடிச்சொன்று முடிச்சின்காமம்
துயர்விளைக்கு மனதுலைக்குந் தோணிபோல
அன்னசத்து அங்கிருக்கு முடிச்செலும்பே
அவ்வெலும்பு மேடாகும் வுன்னிடுப்பே
பின்னசத்து பெண்ணிடுப்பிற் முன்பாகத்தில்
பெருவரையே கால்நடுவிற் கேணிதானே. 174

கேணியதி லாண்முடிச்சு விழுகுந்தள்ளும்
கிருகிரென வேமயங்குஞ் சுழலுங்கண்கள்
பாணியது நாவரளும் முடிச்சுநோகும்
பாதமது யோகாது படுக்கச்செய்யும்
நாணியது வேவிலகும் மல்லாந்தோர்கள்
நடுங்காம லேயெழுந்து நடந்துபோவார்
சாணியது விட்டாக்கால் நீரேசிந்தி
தண்டுநரம் பேகாது சாய்கைதானே. 175

சாய்கைதான் நாமிரண்டு பேருஞ்செய்த
சங்கர்ப்பம் பிள்ளையென உருவேயாகி
மாய்கைதான் பிறந்தவளின் மடியிருக்க
மனையாட்டி தான்படுத்த வலைமையாகா
நாய்கைதான் விரற்பொந்திற் சர்ப்பந்தீண்ட
நாயழுத வாரேபோல் மனையாளுநாயம்
கூகூவென் றழுதபிள்ளை தொட்டிலாட்டிக்
குமரிசத்தம் போட்டசைத்து ஆட்டும்போதே. 176

ஆட்டுவாள் நாம்விலகித் தூரநிற்போம்
அசைந்தாடுந் தொட்டியதி லழும்போதெல்லாம்
தீட்டுவாள கண்ணீரைப் பாட்டேசொல்லி
செத்தார்போல் தூங்கும்வரை ஆட்டிக்
கொள்வாள்
நாட்டுவாள் நாம்நினைக்கக் குழந்தைசத்துரு
நாபநினைக்க நடுநிற்கும் தூரநிற்பாள்
மூட்டுவாள் குழந்தைதலைப் பாராமற்றான்
மூடமா யானாயே தூரநில்லே 177

நில்லென்று சொன்னதுவும் ஞாயந்தானோ
நிமிஷஉற வாடுவரே பின்னாறதானே
மல்லென்று வாதைவருங் குழந்தைபின்பு
மலடியே யானாலுந் துன்பமுண்டு
வில்லென்று நாம்வளையா திருந்தோமானால்
விதவைபோ லேயிருந்து விருதாவாழ்வு
சொல்லென்றும் நீங்காதே காமநோயே
துணையாகப் பிறந்ததுவும் நாமேதானே. 178

நாமென்ன பாடுபட்டுந் துன்பந்தானே
நம்மனைவி தன்சுகமுஞ் சுகமோவீணே
ஆமென்ன சொன்னாலுங் கூடிவாழ்வ
தரிதாகும் நிற்காது யின்பந்தாமும்
காமென்ன சிசுக்கள்வந்து நம்மேல் வீழ்ந்தால்
கலந்துவிடும் நாமென்ன செய்யலாகும்
சாமென்ன நாம்நினைவு கொள்ளல்தானும்
சங்கர்ப்ப மித்தனைக்கு மூலந்தானே. 179

மூலம்நாம் வழக்கிடவு முடியுமோபார்
　　மோகமந்தப் பெண்டீரும் பொருள்போல் ரூபம்
காலமந்தக் காலமெதிர் வந்துதானால்
　　கண்செவியுந் தூங்காது கருத்துஞ்சொக்கும்
பாலமந்தப் பாதைவழி போகாதார்க்கு
　　பரதேசி யென்றிடலா மில்லங்கூட
ஞாலமதி லிப்படியே வெகுபேர்நின்றார்
　　நம்குருவுஞ் சீஷனுமாய் வெகுபேர்தானே. 180

வெகுபேர்க ளிச்சையுண்டு யில்லாருண்டு
　　மேதினியிற் கபடமாய் விட்டோருண்டு
லெகுவிதே யென்றுசொல்வார் லெகுவேயாகா
　　வெகுவாகுங் காசில்லார் தாரமில்லார்
நெகுவிதா மண்ணிற்கல் நீக்கலாமா
　　நீர்விசும்பில் ராப்பகலும் ஒன்றதாமா
லெகுவிலாப் பசியடங்க மனிதர்நீங்க
　　நீர்கண்ட எருமைபன்றி நின்றிடாதே. 181

நிற்குமோ சொல்லிடுவீர் நின்றபேரே
　　நின்றவரார் மதிகதிரை நேரிற்பாரீர்
நிற்குமோ சோடியன்றி ஒன்றேயுண்டோ
　　நேர்மலையு மண்ணன்றி வாரியன்றி
நிற்குமோ பெண்ணையன்றிப் புருஷரன்றி
　　நிகழ்காலம் விழைவிக்கும் பிள்ளையிச்சை
நிற்குமோ நாம்தனியே நின்றார்க்காயம்
　　நில்லாது ஆனதினா லிச்சையாச்சே. 182

இச்சையென்ன மனத்துன்பஞ் சரீரதுன்பம்
　　யிதுவென்ன மலசலங்க ளிடையிற்துன்பம்
கச்சையென்ன உடையினொடு உணவுதுன்பம்
　　காதென்ன பார்வையொடு துன்பமாச்சு
பச்சையென்ன கொடிநரம்பு ரத்தக்கூற்றைப்
　　பார்த்தல்லோ யானிருந்தேன் பலநாள்வீணில்
கச்சையென்ன மங்கைமின்னார் உலகம்வீடு
　　கடல்மலைக ளேறவுந்தா னிறைபோதாதே.

போதாது யென்னுடனே புத்திரரோடு
புத்திரர்கள் சம்பிரதாயம் யிரைபோதாது
வாதாது மாபலியுஞ் சூரபத்மன்
வந்துமே ஆகாரம் போதாதென்றான்
ஏதேது யிப்படியே யிருந்தார்மேலோர்
யிமைவிழியாத் தூக்கத்தி லிருந்தபோதும்
சாகாது வாழ்வமென்ற முனிவரோடு
தன்னுடலைப் போட்டிருநாள் தெரிந்திலாரோ.
184

தெரிந்திடுவார் காயவுயிர் அறியாமட்டி
சீரழியச் செய்தவர்கள் பெண்ணாமங்கை
மரிந்திலா மங்கையரா நம்மைக்காப்பார்
மறைவேதப் பிரமனவன் சிருஷ்டிபோலே
அறிந்திலா மங்கையரும் வளர்த்தார்சிருஷ்டி
ஆனதினாற் பெண்பிரமன் சரியேயாகும்
எறிந்திலாச் சந்திரன்போ லுதவிசெய்து
இருள்நீக்கிப் பெண்ணுடனே தள்ளல்போலே.
185

போலவே நம்துணையாய் உதவிபோலும்
பொங்குதிரை யலைபோலே வலைத்தார்மின்னார்
ஏலவே புற்பூண்டு கொடிமரங்கள்
ஏதவஸ்தை குடும்பமுண்டோ பழம்காயுண்டு
சாலவே நாய்நரிகள் குஞ்சுக்காக
தாபந்தம் உண்டிடுமோ யேதுங்காணோம்
மாளவே வைப்பதர்க்கா யிச்சீவர்க்கு
மற்றுள்ள சீவர்கட்கு யெதுங்காணோமே. 186

காணோமே மேல்மதியு முடுக்கினமும்
கதிரவனுந் தேடவில்லை யிரையைத்தானே
ஊணுமே யெங்களன்றிக் கதவுபூட்டு
ஒருசீவர் வைக்கவில்லை துன்பமில்லை
காணுமே வைக்காட்டா லெங்களுக்கே
நாயகமே கைலையதிற் பூட்டுண்டோசொல்
வீணுவே யாகாத பூட்டுண்டாகில்
விதவைபிள்ளை பேரான விந்தையாமே. 187

ஆமிந்த விதத்தாலே சலனமெல்லாம்
ஆகிடிலோ திரிகால வர்த்தம் போக
நாமிந்த வகைதானே உலகந்தானே
நல்லவர்க ளாவதெப்போ சலனந்தீர்ந்து
காமிந்த மனதாலே பட்டோரெல்லாம்
கடினமென்று போனாரே ஆகாதல்ல
தாமிந்தப் படிசொன்னா லென்னவாகும்
தம்பியர்க ளாவதெப்போ சாஸ்திரம்பாரே. 188

பாரப்பா பேய்போலே கதறிக்கொண்டு
பசப்பியே திரிவதனா லென்னவுண்டு
நாரப்பா சொல்வதினால் வருவதேது
நமன் வருவான் திரிகாலம் வருமோசொல்லு
கூஷ்திரங்க ளற்றுநமன் கோழையற்று
குருவாக நாமறிய வேலை சொன்னோம்
வாஷ்திரங்கள் பேசாதீர் லேசாய்வாரும்
வந்தாக்கால் நாம்வருவோம் மறந்துவாரீர். 189

மறந்துவா வென்றீரே புசுண்டநாதா
மனக்கண்ணைக் காட்டுமது ஞானக்கண்ணை
திறந்துவா வெனவிளங்கு முக்காலந்தான்
தெரிந்துவிடி லக்கண்ணாற் தெய்வந்தோணும்
சுரந்துமே மேற்பொழியுந் தொன்று தொட்டு
தொல்பவங்கள் தோற்றிவிடும் மறந்ததெல்லாம்
இறந்துமே போனவுடல் யெல்லாஞ் சொல்லும்
எல்லையில்லை சொல்லுதற்கு யெல்லையதே. 190

எல்லையில்லாப் பேரொளியே யெதிரில்லாதே
ஏகமன மானதிது யெவரும்பார்க்க
தொல்லையதி லகப்பட்டுப் போனபேரை
சூரியனை ராகதுவுஞ் சூழந்தார்போல
வல்லையென்றால் நாம்காணக் கொடுப்பதாரு
மக்களென்றாற் தந்தையிடம் வலுத்தி நில்லும்
இல்லையென்றால் வாய்மூட உதடுங்கூடில
இழுக்குமடா பேசாமை மவுனக்கேளே. 191

கேளென்றார் வசிட்டருடன் புசுண்டர்தானே
கிருபைகொண்டு சொல்லுகிறா ரிருவருந்தான்
பாழென்றார் வாய்மூடல் பேசாமோனம்
பரதேசி வேடமென்ன தவசிக்கேதான்
ஊழென்றார் புத்திதனை யறியாமாந்தர்
உறமில்லாச் சண்டாளர் ஞாயமில்லார்
மாளென்றார்க் கருவிகளைக் கொன்றாற்சும்மா
மவுனமா நாக்கசைந்தால் மரணமாகாதே. 192

ஆமப்பா சுட்டி சுட்டி பத்தியமிட்டார்
அலைவார்கள் கமண்டலமும் அரைஞாளோடு
காமப்பா நீத்தார்கள் ஓட்டியாணம்
கப்பல்கட்டுங் கயரதுபோல் யோகப்பட்டை
தாமப்பா கொண்டுயிந்த யோகஞ்செய்தால்
சாதிக்கு மோமனது வாதிக்குந்தான்
ஊமப்பா மனம்மட்டி அறிவுமட்டி
உலுத்தர்களு மிப்படிமூக் கைப்பார்த்தாரே. 193

## பார்வை விபரம்

மூக்கைப்பார்த் தவர்கோடி மரணமானார்
முனிநாக்கை யேற்றினவர் கோடிபேராம்
நோக்கைப்பார்த் தேறினவர் கோடியாகும்
நுனியேறா மானிடர்கள் கோடாகோடி
தாக்கிப்பா ராமனுக்கள் யேறுவாரோ
சமுத்திரத்திற் சென்றவர்கள் ஆழம்பாரீர்
ஆக்கைபா ருடலுள்ளே பிராணநாட்டம்
ஆகையினாற் சொல்லிவிட்டேன் அறிவுள்ளோர்க்கே 194

அறிவுள்ளோர் சீவநிலை பிராணநாட்டம்
அய்யய்யோ உயிர்மூச்சு சீவன்தானே
தெறியுள்ளார் வாசியென்றுந் தேசியென்றும்
தேர்நடத்தும் பொம்மைகட்டக் குதிரையென்றும்
மறிவுள்ளார் கலையென்றும் பரிதாஏனன்றும்
மரணமதை உண்டவர்கள் ஆன்மாவென்றும்
செறிவுள்ளார் கண்டுகொழுல் மனந்தானென்றும்
சீவனதைப் பார்த்திருப்பார் மனதுள்ளோரே. 195

மனமில்லா ரறிவில்லார் மரணமான்பர்
மனதையே கொண்டாடுஞ் சலனரூபி
சினமுள்ளார் மனதன்றித் தேகமில்லை
சிறுபிள்ளை போலிருக்கு மனப்புலன்தான்
கனமுள்ளோர் மனதாலே மனந்தான்மாய்கை
கண்தூர மெவ்வளவோ மனந்தான்ரூபம்
இனமுள்ளோ ருள்ளறிவு வெகுதூரந்தான்
இதும்ஞான யோகமது மிதற்கொவ்வாதே. 196

ஒவ்வாது ஞானமென்ன யோகமென்ன
உறவான கிரிகையொடு சரிதையென்ன
தவ்வாத முத்தியென்ன மோச்சமென்ன
சாஸ்திரங்க ளாவதென்ன வருவதென்ன
இவ்வாறு சொல்லிவைத்தார் பரிபாஷைக்கே
இத்தனையுஞ் சித்தர்கள்தான் செய்த கூத்து
ஒவ்வாது வேதவியா சன்றன்வாக்கு
உயர்வேதங்களைப் பிறட்டிச் செய்தான்பாரே. 197

## பிராமணர் செய்கை

ஆமிந்தச் சரிதையொடு முத்திமோக்ஷம்
அறைந்தார்கள் பாப்பாரன்றி மற்றோரெல்லாம்
நாமிந்த அய்யமா ரேட்டைப் பார்த்து
நடுங்காமல் நம்மள்வர்க்க யேட்டைப்பாரு
ஓமிந்த அச்சரங்கள் பொதுவேயாகும்
உலகத்தில் முத்திமோச்சம் நமக்கேயல்லால்
தாமிந்தப் பொய்க்குருவும் பூநூலிட்டு
தாரித்திரம் போக்குதற்காசா னல்லபாரே. 198

## நாலு ஜாதி

அல்லவே அய்யமாரைப் பிராமணாளென்றும்
அடித்துழுகுஞ் சத்திரியன் ராசனென்றும்
மெல்லவே பேச்சிடுதல் வியாபாரங்கள்
விரிந்தவரை வைசியரென் றிகழ்ந்தாரய்யா
கெல்லவே மற்றோரைச் சூத்திரராக்கி
கெம்பீரஞ் செய்தாரே அய்யமாரும்
இல்லவே அய்யமார் அய்யராகும்
இருநெற்றி நடுவேதா னய்யங்கார் சொல்லே. 199

## பலவகை ஜாதி

சொல்லவே முன்குடுமிச் சோழியாகும்
துர்வீசை யுள்ளதொரு ராயமாரும்
கொல்லவே பிணஞ்சுமக்குஞ் சவண்டியய்யர்
குலவர்க்கஞ் சொல்லுகிறேன் மற்றோரெல்லாம்
அல்லவே நாயக்கர் சேர்வைகாரர்
அம்பட்ட ராவிதனே காலிவண்ணான்
மெல்லவே சக்கிலியன தோட்டிதானும்
வேடிக்கைத் தேவடியாள் தாசிமாரே. 200

மாரென்ன ரெட்டிதொட்டி நாயுடுகார்
மரவரென்ன தேவமார் துலுக்கர் சாய்பு
காரென்ன பட்டுநூல் செட்டியார்கள்
குலதர்மம் யிவ்வகையில் வாரேயாகும்
நாரென்ன கைக்கோளன் முதலிமாராம்
நடுவிருந்த சாணாரும் நாடாரென்பார்
ஊரென்ன வடுகதமி ழாசாரிக்கே
உலககடை யிப்படியே அய்யமாரே. 201

## பிராமணர் பாப்பாரல்ல

அய்யர்களைப் பிராமணரென் றுரைக்கலாமோ
அறுத்தபெண்வீட் டில்லாட்டா லவனே பாப்பான்
பய்யத்தான் சொன்னாரோ விதவையாகில்
பாரிலுள்ள மனிதரைப்போ லாகினீர்கள்
மெய்யாகப் பிரமனவன் திட்டித்தாக்கால்
விதமென்ன முதற்சாதி ஞாயத்தோரே
அய்யாகூ வென்றழுகல் நீசன்தானே
அரைகட்டி நின்றிருந்தார் சூத்திரன்தானே. 202

சூத்திரனார் வைசியனார் சத்திரியனாகும்
துயரில்லாப் பாப்பாராம் அய்யமாரும்
காத்திரனார் நாமுழுக நீரேதின்க
கலப்பைதொட மாட்டாத சாதியாரே
பாத்திரத்தி லுபாதான மெடுக்கத்தானே
பரிபாஷை சொல்லிவைத்தீர் பிச்சைக்காக
சேத்திரனார் தங்களிடம் பூமிவிட்டு
தீனிகிடை யாமலுந்தான் தெருவந்தீரே. 203

வந்தீரே பிச்சைதனைப் பூரியென்றீர்
வாய்ப்பேச்சை வேதமென்றீ ரிழப்பந்தானே
தந்தீரே கும்பிடுமுன் ஆசீர்வாதம்
தானர்த்த மென்னவென்றால் வந்தேனென்னல்
முந்தீரே சண்டிமுதற் சலப்பைமார்க்கம்
முறைதெரியா மானிடரே நில்லுநில்லும்
பந்தீரே நாமிருக்க யிழவுக்காகா
பாணிமுதற் தாகத்துக் கிடஞ்சலாச்சே. 204

ஆகவே யுங்கள்குல வழக்கஞாயம்
அரைகிறேன் மூத்தோரை அடேநீயென்பீர்
சாகவே மனைப்புருஷன் றனைவெளியிற்றள்ளி
தங்கச்சி பெண்சாதி யுள்ளேநிற்பார்
ஏகவே போனாலும் மவன்தன்வீட்டை
யிருக்கையிலே அவனைவெளி யேற்றிவிட்டீர்
மகவே அச்சாம்பல் புருஷனல்லோ
மனையாட்டி யெச்சாம்பல் புருஷசாம்பலாமே. 205

சாம்பலாய்ப் போகுமுன்னே சடத்தைத்தள்ளி
தர்மமோ புரோகிதர்கள் அருசியுண்ண
சாம்பலே யாகுமட்டுங் கருமாதிச்சோர்
தன்கிளைகள் சந்ததிகள் முழுதுந்தானே
சாம்பலே யுங்கள் தவம் பிச்சையுண்டோ
தர்மமோ தர்மமிட்டால் வந்துண்பீர்கள்
சாம்பலிலே தர்மச்சோறு தின்றுவிட்டு
சாதியுடனே கூடி வாழலாமே. 206

## யோகம்

வாழலா மூக்குமுனை விணாத்தண்டு
வகையாகப் பார்த்தாக்கா லெல்லாமுண்டு
பாழேதான் போகாமற் சமாதிகூடும்
பரிபாஷையிதுவல்ல புருவமத்தி
ஆழலா மேல்வாச லறிந்துகொண்டால்
அய்யமொன்று மெண்ணாதீர் சொல்லிவந்தேன்
தாழலா மிதுவிட்டா லெல்லாம்போச்சு
சாதித்துத் தேறிவரக் கூறினேனே. 207

## பொய்க்குரு

கூறினோ மென்றுசொல்லிப் பரியாசங்கள்
கொள்பவ ரன்னமின்றி யிரந்துண்பார்கள்
தேறினோ மென்றுசொல்லிவெளியேவந்தோர்
தேறினவ ரல்லவர் தேறார்தேறார்
மாறினோ மானாக்கர் பின்னேநின்று
வசனிக்கும் பெண்மாய்கை மடியில்நின்று
வாறினோ மார்கொண்டு சாணமிட்டு
வையகத்து யிருளகல வொழியிற்சிக்கே. 208

சிக்கினோம் ஒழியதனிற் தீபசோதி
திருவேடங் காணவென்றால் மனதைக்காரும்
புக்கினோம் புருவமய்யம் வாசிகொண்டு
பூரகமுஞ் செய்யாமல் நோக்கத்தாலே
மூக்கினோம் மூக்குமுனை யிருந்தவாசி
மூக்கினடி புருவமத்தி யுருவிப்பாய்ந்து
வெக்கினோ மனமசந்து ரோசங்கெட்டு
வேரற்ற மரம்போலே வெளிதானோமே. 209

வெளியாகும் பஞ்சபுலன் கருவியெல்லாம்
விடாதீர்களந்தரங்க மேலோர்போல
தெளிவாகும் கருவிகளின் கருவிநிற்கும்
சீரணிக்கும் அக்கருவி தெளிந்தகூறே
பொழிவாகும் அமுர்தமெனத் தேருவீர்கள்
பொல்லாங்கு போயொளியுந் தானாய்த்தானே
அழிவாகு மிம்மார்க்கம் மனதினாலே
ஆகாது அறிவான கண்ணாற்பாரே. 210

## ஞானம்

அறிவான கண்ணெதென்றால் புருவவாசி
அங்கத்திற் பம்பரம்போ லாடினாக்கால்
முறிவான பூட்டுடைத்துப் புருவமத்தி
மூக்கோடும் வாசியது நெற்றியேறில்
தெறிவான யிவ்வாசில் பத்தாம்வாசல்
சிறுவாசல் அறிவாசல் யோகவாசல்
குறியான மணிவாசல் குருவின்வாசல்
கோபுரவா சல்தெரிவா யானாற்பாரே. 211

ஆனாலே பொழிகாணும் புலன்கள்தோனும்
ஆகாத கருவிகளு மடக்கிப்போகும்
போனாலே கற்பூர வாசம்வீசும்
பொங்குதிரை மேலெழும்பு மாய்கைபோகும்
வானாளை யேற்றிவிடும் புருவமத்தி
வாசிகொண்டு நீட்டிவிடும் நாசிமத்தி
தானாலே யாகிடலாந் திறக்கப்பூட்டத்
தந்திரங்கள் வேணுமப்போ சரங்கள்பாரே. 212

வேணுமே மயிர்ப்பாலம் நெருப்பாறேக
மெய்வலுவில் ஊசிமுனை வாசியேறத்
தோணுமே நாமிருந்த யிடங்கள்தானும்
தொந்தோமென் றாடிடுமே சுலபமாகக்
காணுமே தீபவொழி கருத்துங்கண்ணும்
கள்கஞ்சாக் கொண்டதுபோல் மயக்கங்காணும்
வீணுமே யாகாது மயக்கம்வேண்டாம்
வேதாந்தங் கண்டிடலாம் வாசிபாரே. 213

கண்டிடலாம் புருவமத்தி வாசலோரம்
கண்ணிரண்டுங் கூடிவிடும் ஞானக்கண்ணாம்
உண்டிடலாம் ஞானரசங் கண்ணிற்தானே
உட்புகுந்து மேலேறும் வாசல்தாண்டு
தெண்டுடனே கமண்டலமுங் குகையும்வேண்டாம்
சிறுகற்பம் அறுசுவையுந் தள்ளவேண்டாம்
மண்டுடனே கூடிடுவீர் ரசமேஉண்பீர்
வாருங்கள் தேனமுர்தம் உச்சிநீரே. 214

## ஞானரச விபரம்

நீரேதான் வருமென்றார் முன்னோரெல்லாம்
நிகழ்காலம் உச்சிரச மிறங்குமையா
காரான மேகமது யிறங்குமாப்போல்
கண்மூக்கு மத்தியிலே யிறங்கும்பாரு
சீரேதான் அண்ணாக்கு வழியிறங்கும்
தினந்தினந்தா னாண்டொன்று ஒழுகிப்பாயும்
மாரேநீ நாலில்விழக் கூரித்தள்ளும்
பங்குனியில் வெயிலடித்த வாறுபோலே. 215

போலவே துப்பிடவே யெல்லாம்வீழும்
பொங்கியது பொங்கியது வழியும்பாரு
சாலவே யிறங்கிவிடுங் கபாலமெல்லாம்
தானிருந்த மூளையின்றன் கசடுபோகும்
ஞாலமே லிப்படியே யோகதுன்பம்
நம்கோழை உச்சிநீ ரிறங்கிவிட்டால்
பாலமே தாண்டிடலாம் சோதிகாணும்
பக்குவத்திற் சூரியஸார் கோடிதானே. 216

## யோகம்

காணுங்கான் ஞானவொளி கோடிசூரியன்
கதிர்விட்டுத் தாவெறியுந் தூரந்தோற்றும்
பூணுங்காண் உச்சியொழிரி புருவப் பூட்டு
பூட்டுடைக்க வல்லவரே வாருங்காணும்
தோணுங்கா ணுங்களுக்குத் தூரதிஷ்டி
சொற்பலிக்குந் திரிகால வர்த்தந்தோற்றும்
காணுங்காண் கர்மவினை தர்மமாகும்
நரைமூப்பு சாக்காடுங் காணலாமே. 217

காணலா மெத்தனையோ கோடாகோடி
கண்ணுக்குள் ளேதெரியுங் கிருஷ்ணனைப்போல்
தோணலா மெதிர்நிற்கும் பாவனைபோல்
துயரெல்லா மாற்றிவிடுஞ் சுழினைவாசல்
வீணல்லால் மற்றொன்றிற் காண்பதுண்டோ
மிஞ்சினவர் சொற்கேட்ட வித்தைபோல
காணில்லா வில்லெறிந்த வீரன்போல
நாமறியத் தன்மைவிட்டு நாடினாளே, 218

ஆனாக்கா லின்னமுமே நாக்கின்கீழே
அடிநாக்கு மூலவரை பீஷமட்டும்
நானாக்கா லாதியந்தம் பீஷம்நாக்கு
நடுநாடி யிதுவழியே வாசியாடும்
மானாக்கால் சொல்லுகிறேன் மூச்சையோடும்
வரும்வாசி யாடினால்மூச் சாடிநிற்கும்
தானாகக் கொட்டாதீர் மேலேயேற்றும்
தம்பியரே புருவமத்தி வாசிபாரே. 219

பாரீரோ அறுமுகமாய் நின்றமத்தி
பார்நெற்றி மூக்குமத்தி முகத்தின்மத்தி
வாரீரோ புருவமத்தி கண்ணின்மத்தி
மக்களே நிமைமத்தி செவியின்மத்தி
கோரீயே மூச்சுமுட்டி யிறங்குமத்தி
குமிறியது யிருவாசல் பிரியுமத்தி
தாரீரோ உம்மனதும் நீருங்கூடத்
தாக்கினார் புருவமத்தி யேறிப்பாரே. 220

ஏறுவது வெகுமுறைகள் கோடாகோடி
இவ்விதந்தான் பத்தியமு மில்லையில்லை
நேறுவது கடினமல்ல மனதேசார்ந்தால்
நீர்கூடத் தொடர்ந்திடலாம் கடினமில்லை
தேறுவது வெகுவல்ல சூச்சத்தாலே
செங்கனலைத் தூண்டிவிடச் செங்கண்ணாகும்
மாறுவது வந்தாக்கால் சாஸ்திரந்தூண்டும்
மக்களே பழுக்குமுன்னே வாசிபாரே. 221

பழுத்தபின்பு எமகாலன் கருதுவான்பார்
பரிவாசி யேற்றிவிக்கத் தூண்டிவிக்க
இழுத்தபோ தேவருவோ மேலேதானே
ஏற்றிவிக்கத் தள்ளிவிடும் நம்மைக்கூடக்
கொழுத்தபோ தழுத்திவைக்கும் உற்றார்போலக்
குருகுலமும் வேலையிதே கூவவேண்டாம்
அழுத்தபோ தல்லவோ துணையும்வேணும்
ஆர்வேணு நீர்போது மறிவாற்பாரே. 222

அறிவாற்பா ரதைவிட்டு விடாதேகர்மம்
அதுதானே கர்மமென்பார் அறிவைவிட்டால்
தெறிவாற்பார் தெளிவுகொண்டு அறிவாற்சிந்தை
தேகநிலை யோகமுறை சிதறவேண்டாம்
குறியால்பார் அண்ணாக்கின் மேலேஉச்சி
கூர்துளையே நாக்குவழி சித்திவாசல்
நெறியாற்பார் புருவமத்தி வாசலுண்டு
நீட்டிவிடு உள்துவாரந் திறக்கும்பூட்டே. 223

## பூட்டுத் திறக்க

பூட்டதனைத் திறக்கவென்றால் விழிமேல் நீத்தாய்
பொய்யல்ல கண்ணிமையம் புருவந்தாக்கு
ஓட்டதனில் வாசியென்ற மூச்சுதன்னை
ஊடுருவப் பாயுமடா மேலேநோக்கில்
வீடதனைத் திறப்பதற்கு வாசிபாரு
மெய்யதனைச் சமமணமே நேருநேராய்
கூடதனைக் குந்தவைத்து உடலாடாமல்
குவிந்தமனம் நிமிந்திருந்து உடலைப்பாரே. 224

## சாதனம்

உடல்நேராய் நெஞ்சகண்டந் தலைகண்மூக்கு
உசந்திருந்து நேர்நிமிர்ந்து உட்கார்ந்தேதான்
கடல்கொண்டு சொரிவதுபோல் வாசியேற்றும்
கருநாடி உயிர்நாடி சீவநாடி
அடல்கொண்டு யேறிவிடு மூலநாடி
அரைமூலந் தானிருந்து யெழும்புமூச்சு
குடல்கொண்டு பாராதே காலைமாலை
கொண்டுபசி யாறுமுன்னே பாருபாரே. 225

பாருபார் முள்ளெலும்பு முதுவின்மூலம்
பரிந்தோடி வாசிவரும் பைய்யப்பைய்ய
ஆருபார் வாரதுவும் நாமேதானே
அரையிடுப்பு முதுகுநடு மத்தியேறும்
தேருவார் பார்த்துவர மூழந்தானேறும்
தேகமுது நடுநாடி தேனீயேறும்
காருபா ரதைநிதமுங் சாலைமாலை
கண்டுகொண்டு ஏறிவரக் கனலாம்பாரே. 226

ஏறுமே மூலகனல் மேலேவாசி
இரண்டென்றாய்க் கூடியது நடுவேநின்று
மீறுமே முடிச்செலும்பைப் பத்திநின்று
மேனியெல்லா மோடாது நடுவேயோடும்
வாறுமே மேலெழுப்பி நினைவைமேலே
வாய்பொத்தி அச்சமயம் பிடரியேறும்
சீறுமே மேலேறத் தள்ளும்பின்னால்
திரும்பாமல் நாக்கின்வழி சாருந்தானே. 227

சாருமுந்தி நாக்கின்வழி தாண்டியப்பால்
சங்கின்வழி தொண்டையதைத் தாண்டுந்
தாண்டும்
நீருமிந்த வழிவரவுங் கண்டடந்தாண்டி
நேர்வழியே அண்ணாக்குப் பாதைபோகும்
சேருமிந்த அண்ணாக்கு உச்சிவாசல்
தீபவொளி கண்டிடலாங் கம்பந்தோணும்
கூருமிந்தச் சாஸ்திரத்திற் பாடுபட்டால்
கொங்கணவன் போலாக வாழுவீரே. 228

வாழுவா ரெங்களைப்போ லெல்லோருந்தான்
மண்வெட்டி கோடாலி யிதற்குவேண்டாம்
கேளுநீ சொல்லறிந்து குண்டுக்கல்லை
கிழிஞ்சிலெனப் பொடியாக்கும் உளியைப்போல
ஆழுநீர் பூட்டுடைக்க மேலவாசல்
அங்கத்திற் கண்திறக்க ஞானக்கண்ணாம்
தாழுவீ ராகாமல் மூட்டிப்பாரும்
சந்ததியே யென்கிளையே சாற்றினேனே. 229

சாற்றினே னென்குருவின் கடாச்சத்தாலே
தள்ளினேன் பாவகர்மம் தவசினாலே
போற்றினே னதுவறிந்து யென்குருவும்
பூரித்துச் சொன்னாரே அருளாற்றானும்
ஊற்றினேன் முன்னாளுங் களுக்குச்சொன்னேன்
உத்தமர்கள் தங்களுக்குத் தோணச்சொன்னேன்
ஏற்றினேன் கர்மதர்மம் யாருங்காண
யெப்போதும் பார்த்தறியச் சொன்னேன்நானே.
230

சொன்னதினா லாவதென்ன பார்க்கவேணும்
தொன்றுதொட்டுச் சிசுவினிலே காணவேணும்
பின்னதனாற் கண்டுகொள்வார் குருவில்லாமல்
பெருங்காடாய்த் தோணுமது யாருக்குந்தான்
அன்னசுவை காணுதல்போற் குருவாம்சாய்கை
அடுத்துவரு மேலேதான் குருவாம்வாலை
சொன்னமொழி கேட்டிருநீ உபதேசிப்பாள்
சோம்பலையே போக்கிடுவாள் வாலையாமே.

231

ஆகுமிந்த வாலைமுடி வதனைச்சொல்வாள்
ஆச்சரியங் குருசொல்லார் அருளேசொல்லும்
போகுமிந்த மாய்கையது நினைவின்துக்கம்
போகுமல்லாற் சாதனையால் குருவில்லாமல்
ஏகுமந்த அருள்சொல்லப் பிரமஞானி
யில்லாட்டால் யோகியென்றுஞ் செப்பலாகும்
ஓகுமிந்த யோகிபலன் வீணேயாகும்
உண்மையன்றி மற்றொன்றுங் காணாதய்யே. 232

## வாலையுபதேசம்

அய்யய்யா அருள்வாலை தனையறிந்து
ஆகூகூ வென்றழுது அவள்மேற்பாய்ந்தேன்
பய்யவய்யா வென்றுயெனை மடியில்வைத்தாள்
பய்யாநீ சித்தனெனப் பேருமிட்டாள்
பொய்யாய்நீ யாவாயோ நானிருக்க
புழுக்கூடு மாகிடுமோ யென்னைத்தொட்டு
மெய்யாய்நீ யாகினதால் மடியில்வந்தாய்
மேலென்ன கேளுமினிச் சொல்லுவேனே. 233

சொல்லிவா யென்னுடைய பதத்தையென்றேன்
சொன்னாளே பாவிபழி காரிநீலி
முன்னாலே நீயிருந்த வயதைத்தள்ளி
மோகமிட்டே னின்றுதின மினிமேற்றானே
என்னாலே யானமட்டு மிருப்பேன்கூட்டில்
எழுந்தோடிப் போகும்நா ளுனக்குத்தோற்றா
அன்னாளே நானெடுப்பேன் மலையில்வைப்பேன்
ஆர்கைகளிலு நான்கொடேன் சுடவொட்டேனே. 234

ஒட்டேனே சுட்டிடவும் பிறர்கள்கையில்
ஒப்பிவித்துப் பிறர்சுமக்க உற்றார்கூட
விட்டேது போகேனினி யென்னாற்கூடா
மேதினியி லிதுகடக்க யென்னாலன்றி
கொட்டாவி யிட்டாப்போற் கூத்தன்யாரு
குறையுயிரே நீர்போல வத்தல்தானே
கட்டாவி கட்டுதற்கு உருவேசெய்தோர்
காசினியி லென்னுடலை விடமாட்டேனே. 235

விடமாட்டே னென்னுயிரை ஆயிரத்தின்
வேணுமென்று கற்பமதைத் திறந்துசொன்னேன்
படமாட்டே னப்பானுந் தூரதிஷ்டி
பார்வைகொண்டு நானிருப்பேன் மரணமாகேன்
தொடமாட்டே னதைவெல்ல ஞானக்கண்ணின்
சொல்லறிந்து தாண்டிடுவேன் தப்புவிப்பேன்
கடமாட்டேன் சடலமதை விடவுமாட்டேன்
கர்த்தனைப்போல் நானிருந்து வாழுவேனே. 236

வாழுவேன் திரிகாலந் தெரிந்துகொண்டேன்
மாளாமல் நின்றிடுவேன் திரிலோகத்தும்
மீழுவே னினியென்ன பயமெனக்கு
வேதமுதல் நானானேன் என்னுள்ளானேன்
கோழுவாய்ச் சாவதுவும் பொய்யதாகும்
குமரிகையைப் பற்றதார் மரணமாவார்
தாழுவே யாகாது எக்காலத்தும்
சாவதுவும் பிறப்பதுவு நம்மாற்றானே. 237

சாகாமலிருப்பதற்குக் கல்வியுண்டு
சாக்காடு கொள்வதற்கு விபரமுண்டு
வேகமாய் நடப்பதற்குக் காலுமுண்டு
வேளாண்மை செய்வதற்கு மாடுமுண்டு
பாகமா யேறுதற்கு நீச்சுமுண்டு
பரிபாஷைதப்பாது பிழையிராது
காகமாய் மரத்தின்மே லிருப்பேனப்பா
கவலையுட நீயிருநா னுள்நிற்பேனே. 238

நிற்பேனே யெந்தெந்த நாளும்நிற்பேன்
நீயிசகில் நான்பிசகேன் நிலையில்நிற்பேன்
கற்பேனோ வேருடலில் வாழமாட்டேன்
காகமதாய் நானிருப்பேன் உலகமாய்ந்துஞ்
சொற்பொருளா மென்னாலுந் தூண்டாச்சோதி
சுகம்பெற்ற திதைவிட்டு வேறேபோகேன்
அற்பனே நான்போகேன் வேறோர்கூட்டில்
ஆரிருந்து மென்னதுணை நீர்வாழ்வீரே. 239

வாழ்வீரென் றென்றனையே சொன்னாள்வாலை
வசனித்த சொற்கேட்டு விசனித்தேதான்
கோழ்போலே நானினைத்தேன் பொய்போலேதான்
குமரிகன்னத் தட்டிடித்து உச்சிகொட்டி
சேய்போலே யானினைக்க வளர்க்கவென்னைத்
திருடியென்று சொன்னாயே யென்னாவென்றாள்
பாய்மேலே படுத்திருக்க வைத்திருக்கப்
பாவியென்ன சொன்னியடா பரமன்பார்த்தே. 240

பரமன்பார்த் ததிசயித்து யிவளாரென்னப்
பரிந்தோடிப் போனபழி காரிநீலி
பிரமன்பார்க் காமலென்பின் னாலேநின்றாள்
பின்னிருந்து முன்பார்த்துப் பேசினாள்பார்
சிரமம்பார்த் தேயெனது பிள்ளைமுன்னே
சிந்திக்க வந்தாயோ வென்றுசொல்லி
வர்மம்பார்த் தவள்தன்னைப் பார்த்துவெட்கி
வாயில்மண்ணைப் போட்டதுபோல்
மல்லாந்தாரே. 241

மல்லாந்தா ரேபடுத்தார் வலக்கால்நீட்டி
மருமண்டி போட்டொருகால் வளைத்துநின்றார்
சொல்லார்ந்த யென்தாயே சுட்டாவென்றாள்
சுடுகாடில் லாவிடத்தே சுட்டுப்போட்டேன்
அல்லார்ந்த பிணச்சாம்பல் நீர்விடாமல்
அங்கமொரு பிடிச்சாம்ப லளக்கக்கண்டேன்
வில்லேந்தும் வேல்மதனுங் கூடநின்றார்
வெருங்கையே நாமெறிந்தேன் சாம்பலாச்சே. 242

சாம்பலே யில்லாமற் சடமுங்கண்டேன்
சணத்திலே வந்தவனுந் திரும்பிப்பார்த்தான்
ஆம்பலே பூத்தாப்போல் ரூபமாறி
அடிக்கடியே வேறுநிற மாகிவந்தான்
வீம்பலே யென்றுசொன்னா ளென்தாய்தானும்
மெய்சிலிர்க்க யென்கூட்டி லுள்நுழைந்தான்
தூம்பலே யென்றவனைப் பிடுங்கிவீழ்த்தாள்
தூத்தூதூ வென்றவனைத் துப்பினாளே. 243

துப்பினாள் உயிர்மாய்ந்து உடல்கிடந்த
தும்பிமுகன் பெருச்சாளி ஆழநீலம்
செப்பினா லுடல்தெளிந்து வரவேயில்லை
சித்திரத்தைப் போலிருந்து நிமையைக்காட்டி
கப்பினா னிருகையு மொட்டிக்கொண்டு
காதோரங் கன்னத்தி லறைந்துதட்டி
துப்பினா னென்குழந்தை முகத்திற்தானே
துடிப்பயலே யிவளைவிடு நான்போகேனே. 244

நான்போயென் னிருந்தென்ன யினிமேலம்மா
நாய்போலே நானலைவேன் மதியார்முத்தர்
தேன்போலே உன்சிசுவு மிருக்கட்டம்மா
சிறுபிள்ளைப் புத்தியல்ல பெரியோனம்மா
கூன்போலே வளைந்திருந்துஞ் சிறியோனம்மா
குமரிக்கி யேத்தமகன் வாலிபன்தான்
தான்போனா லோயினிமேற் பிறக்கும்பிள்ளை
தரும்பலனி துவேதோ சும்மா போறேனே. 245

போறனென்று போனவனுஞ் சாகாமற்றான்
போயொளிந்தா ளெத்தனையோ நவமிதானோ
வாரனென்று வாயிடுக்கிற் பல் சொன்னாற்போல்
வருவனாந் தசமிதினம் யிட்டான்கெட்டான்
போறனென்று சொன்னவனும் பேர்ந்துபோவான்
பிழையில்லான் சொல்லில்லான் பிழைக்கமாட்டான்
கூறினோ அவனேழை தெய்வமில்லான்
கும்பிடவும் ரூபமில்லான் கோழைதானே. 246

கோழையற்றான் வேலையற்றான் கொடுங்கையில்லான்
குருபோலத் துணையில்லான் சமாதியில்லான்
வாழைநீர் போல்வடியுந் தீர்த்தமில்லான்
வசனிக்கத் தெரியாதான் முட்போலுள்வான்
கோழையிலுந் தீப்பூடு மனிதருள்ளில்
கிள்ளாக்குப் போலிருப்பான் முரட்டுருபி
பாழையிலு மிவன்பாழே தெய்வவீட்டில்
பரதேசி தாண்டுவா னருமைபாரே. 247

அருமையுடன் செய்தவனே சித்தன்சித்தன்
அம்பரமாய் விட்டுவிட்டா லொன்றுமில்லை
வெருமையது வந்தாலும் விடக்கூடாது
வேணுமென்று பார்த்தறிந்து செய்துவந்தால்
பெருமையென்ன ஞானியென்ன கெருவங் கொள்வான்
பிடியரிசி பொங்கியுண்பான் உப்பில்லாமல்
உருமையென்ன கொடுத்ததெல்லாம் வாங்கிக்
கொள்வான்
ஓகோகோ குடிசைகட்டிக் கொள்ளுவானே. 248

வானென்ன இவ்விதமா யார்க்குந்தானே
மனமென்ன அறிவுகொண்டு செல்லுவாறோ
நானென்ன பட்டசளந் தனைநினைந்தால்
யார்க்குறைப்பேன் பேரின்பம் யானேகாணேன்
நானென்ன சொல்வதற்குத் தேடிக்காணேன்
நம்குருவே யென்றுசொல்லி யடிபணிந்தான்
தேனென்ற மொழிபேசிக் கரையலாகா
சிறுகல்லோ யென்மனது மலையதாமே. 249

மலைகளிலும் பெரியது மேருவோசொல்
மாமகத்தோர் தங்கள்மனம் சிறியதோபார்
சிலையதிற் கோவில்குளம் பெரியதோசொல்
தேறினவர் தங்களுடல் கயிலாசம்பார்
கலையதுக்குச் சிங்கருணம் வருமோசொல்லு
கலையறிந்தோர் தங்கள்குணஞ் சாபமாமோ
விலையதுபோற் சொல்லிடலாம் யேதுக்குந்தான்
மேன்மைவர மீபவர்க்கு விலையேதாமே. 250

ஏதாகுஞ் சொல்லறிந்தாற் சொல்லுவீரோ
யெங்களுட லாவிமனம் விலையைத்தானே
போதாகுஞ் சொல்வீரோ தெரிந்ததானாற்
பொருள்கேட்டா லோடிடுவீர் கஞ்சிதாரார்
மாதாகும் பிணத்துக்குப் பொருளையெல்லாம்
வாய்கேட்டா லதைக்கொடுப்பீர் நினைத்த
தெல்லாம்
தாதாவென் றேஅடித்தார்க் கஞ்சியெல்லாந்
தானீவார் போங்களெனத் தள்ளுவோமே. 251

தள்ளுவோம் சேர்ந்தாலும் அணையமாட்டான்
தள்ளினுமே போகானே கல்லோன்தானும்
விள்ளுவோ மவன்தனக்குப் பாஷையெல்லாம்,
வெரும்பாஷை தானல்ல சித்திபாஷை
மொள்ளுவா னென்சொல்நீர் கனவின்மேலும்
மோகமிடான் தாகமுளான் யென்சொல்லாலே
கிள்ளுவான் மற்றவர்கள் சொல்லுமுன்னே
கிள்ளாக்கை வைத்திருப்பான் வாயிற்தானே. 252

வாயினாற் கேட்பவனுந் தள்ளுவோனே
வாயினாற் கேளாமற் தொண்டுசெய்வான்
பாயினால் விட்டெரிந்து கிட்டநிற்பான்
பதமுத்தி காண்பவனுஞ் சித்திகாண
நோயதிலே சிக்கானே முன்னாற்தானே
நோயிருந்துஞ் சொல்லானே யெனதுமுன்பு
பேயினாற் பட்டசளந் தன்னைச்சொல்வான்
பெரும்பிறவி நீக்குதற்குப் பிசகில்லானே. 253

இல்லானே ஒன்றுளது முத்திமோட்சம்
யெப்போவென் றுங்கேளான் வேலையுள்ளான்
கல்லான நெஞ்சிருக்கும் சத்தசுத்தி
கலைவாசி சீவன்முத்தி தேகசுத்தி
நில்லானோ யென்குழந்தை வேறுபாரான்
நீ நிலத்திற் சமுசாரி போலிருப்பான்
மல்லான ததையெடுக்கான் சாஸ்திரங்கள்
வாய்கொண்டு பேசானே யேசான்கேளே. 254

கேளுங்க ளிவ்விதங்க ளன்றிமற்ற
கேடுதொழிற் செய்யான்பார் தினமுந்தானே
கோளுங்கள் களவுமுதற் பொய்சொல்லாதான்
கும்பிடவுந் தெரியானே கையைக்கூப்பி
மீளுங்க ளென்றுமிகச் சொல்லுவான்பார்
விரதங்கள் நோம்புவகை மெய்யுளானே
தாழுங்கள் போறேநான் விடுவீரென்பான்
சம்பிரதா யங்கள்மெத்தச் சாடுவானே. 255

வானேறச் சாடுவனே மெத்தயோகி
மலைவளப்பஞ் சொல்லுவனே கடலுப்பாதி
கோனேறிப் பேசானே நமதுகூட்டம்
குருவென்றுஞ் சொல்லானே திருவென்பானே
மானாரி லிவன்மனிதன் திரிகாலங்கள்
வாய்க்குமிந்த யோகனுக்குச் சாதகனாம்.
தானேறி மீள்பவனோ திரும்பமாட்டான்
தலையுச்சி காணுமட்டுந் திரும்பிடானே. 256

திரும்பிடா னிவனுக்குச் செப்பலாமே
சீஷனென்று சொல்லாமற் சினேகன்போல
கரும்பிலோ யீயிருக்குங் கசடுமுண்டு
கனிந்தமன மவனுக்குச் சேய்போலய்யா
அரும்பிலோ நாரிருக்கும் வாசமாறும்
அவனறிவு மாறாது யெந்தநாளும்
விரும்பிலே யெட்டாது விரும்பாதார்க்கு
மெய்நிறையச் சொல்லவில்லை வேழேஆண்மே 257

ஆண்மைகொண்ட தினாலே யார்தான்பூண்டார்
அகம்விட்டுச் சமம்வந்தால் வருத்தங்கண்டார்
ஆண்மைகொண்ட வீரர்களுமெங்கேயெங்கே
அமைதிகுண சாந்தருக்கே காலவர்த்தம்
ஆண்மையது திரிகால வர்த்தஞ்சொல்லும்
அவருக்கா காததுந்தா னிருந்துமென்ன
ஆண்மையது வானதிரி காலமூன்றும்
அதுநிற்குந் திரிலோக வரைக்குஞ்செப்பும். 258

செப்புகிற சீஷரைக்கை யணைக்கவேணும்
திருவேடந் தனைப்பரித்து யெறியவேணும்
ஒப்புகிற மாந்தருக்கு உண்மைபூணும்
உவர்நிலத்தில் விரையிட்ட வாறதாகும்
தப்புகிற மாந்தருக்கு யிதுதோணாது
சவுக்கடிக்கு மிஞ்சுகிற சவங்களோனோ
உப்புகிற மண்வீழ யில்லஞ்சாய
ஒத்திருந்த அவர்தனக்குச் செய்வதென்னே. 259

செய்வதென்ன குருவென்றாற் சீஷர்கூட்டம்
தெருவீதி நிறைந்திருப்பார் ஒன்றுண்டாசொல்
நைய்வதென்ன யெங்கள்மேற் குற்றமில்லை
நடுங்குமன முடையாரே நடுங்காதீர்கள்
பொய்யிதெனச் சொல்லாதீர் யென்னைப்பாரீர்
பொய்யென்றாற் றிரிகாலந் தன்னைப்பாரீர்
கையதனில் வைத்திருந்தும் மறந்துவிட்டீர்
கருத்துமன தறியூகந் தெளிந்துபாரே. 260

தெளிவதனிற் றெளிவுதரும் அருளுங்காணும்
சென்மாந் திரங்காணும் பின்னுந்தோணும்
ஒளியதனில் நின்றுவிளை யாடுவாய்நீ
ஊணுறக்க மின்பதுன்பம் பார்ப்பதேபோல்
வெளியதனில் மெய்காணும் அறிவிற்சோதி
வெளிச்சமல்லோ யோகிக்குத் திரிகாலந்தான்
குழியதனி லேவிழித்து வீழ்ந்தார்போல
குண்டுடையோன் தண்டுடையோன்
கோழையோனே. 261

கோழையோன் நம்மெதிரி பகடுஉள்ளோன்
கொடும்பகடு யென்னவென்றாற் கோழைதானே
பாழையோன் பகடுவது யெருமைதானே.
பகர்பெரியோ ரெருமைதனைக் கோழையென்றார்
நாளைவாழ் நாள்தடுத்தல் கிடாவுமேறி
நம்மெதிரி கோழையின்மேல் வருமுன்னாலே
மாளேநா னென்றுசொல்லிக் குருமுன்னாலே
வாய்கொண்டு சொல்லாதே மனதால்நில்லே 262

நில்லடா காயத்திரி யீதுதானே
நிலையடா கைதொழுகை யீதுதானே
அல்லடா கும்பிடுதல் யீதுதானாகும்
அல்லாவு மகிமாவு மீதுதானே
செல்லடா சாஷ்டாங்கம் யீதுதானே
திருவென்ன குருவென்ன அருள்தானென்ன
வல்லடா வாய்ப்பகட்டை விட்டுப்போட்டு
மனப்பகட்டை யென்னுடனே கலந்துகூட்டே 263

கூட்டடா ஐம்புலனை யொன்றாய்க்கூட்டு
குருவோடு சாஸ்திரத்தை யொட்டிக்கூட்டு
பூட்டடா மனந்துறக்கச் சாவிசொல்வேன்
பொறிபுலனுங் கண்டதுவே நினைவிலூறும்
தீட்டடா யித்தொழிவிற் கண்டுங்கேட்டும்
தீங்குவரு மெண்ணாதே உழத்திற்காணும்
பாட்டடா நீயிருக்கச் செவிகண்போகா
பார்த்ததையுங் கேட்டதையு மறக்கலாகாதே. 264

ஆகாது மறப்பதற்கு வெகுநாள்சிந்தை
அதுகடக்கும் வாரேது அருளேமிஞ்சில்
நோகாது ஏகிவிடும் போகுங்காலம்
நுணுக்கமாய்ச் சொல்லிவிட்டே னிதனைப்பாரு
சாகாது மார்க்கம்விட்டால் நோகாதப்பா
தன்னுடனே பிறந்தகுலம் யெல்லாமாழும்
போகாது ஆனதினாற் பொல்லாப்பேகும்
பூரணமாஞ் சாஸ்திரத்தை முழுதும்பாரே. 265

பாருநீ ஆதிநடு அந்தமட்டும்
பரிசித்தி யோகசித்தி முத்திசித்தி
பேருநீ தானறிந்து பயனைப்பாரு
பேர்பெற்ற சித்தருடன் கூடிவாழு
கூறுநீ யெங்களுடன் வாதில்லாமல்
குருதோச மாகாது நேர்நிற்காதே
தேறுநீ ஆனமட்டும் தெரியும்பட்டால்
செய்திசொல்ல லாகாது பின்னேவாவே. 266

வாவென்றால் நீயிருப்பாய் நானிழுப்பேன்
மல்லக செட்டிகதை வார்த்தைவேண்டாம்
போவென்றா லென்மனது கூசுங்காணும்
பொதுவிருக்கும் உளவறிந்தோர் பூரணந்தான்
காவென்றாற் கூவென்பார் தங்களோடு
கள்ளமனக் கள்வரொடு பாசரோடு
ஆவென்றால் நெஞ்சிறக்க மில்லாரோடு
அம்மனது தானிறந்தால் பொருள்சொல்வாரே 267

சொல்வார்கள் பொருளிழப்பார் குறையுந்தேறும்
சொல்லடங்கா யோகிபலன் நிருத்தக்கூடா
வல்லார்கள் சொல்லிடுவார் பலவாறாக
மாமனதை யுண்டிடுவார் வெகுசீராக
நில்லார்கள் தங்களுக்கும் வல்லபத்தால்
நிமிஷத்தில் நேர்ந்துவிடுங் கடாக்ஷத்தாலே
அல்லார்கள் தங்களுக்கா உண்மையோர்க்கோ
அவர்மனது சீரணிக்கும் அருள் தாங்காதே. 268

தாங்காது வர்த்தமானம் பொய்யாவிட்டால்
தரைதனிலே தெய்வமில்லை யிதுபோற்தெய்வம்
வாங்காமற் பெய்யமழை சொரிந்தாற்போல
வாலசித்தர் சொன்னாரே தாங்காமற்தான்
ஏங்காது யெத்தனையோ சுவடிசொன்னார்
எத்தனையோ சாஸ்திரங்கள் மீதம்பாக்கி
தேங்காது வாரியிட்டார் வெளியில்நின்று
தெய்வத்தைக் காண்பதற்கு யிந்தயோகமதே 269

யோகந்தான் முடிந்தபின்னே வீணதர்கும்
ஊடுருவி உச்சிகண்டால் லேசதாகும்
தாகந்தான் போக்குதற்கு வெண்ணையாமா
தரியுருவைக் காண்பதற்குக் கண்ணாலாமா
மோகந்தான் போக்குதற்குப் பெண்ணாலாமா
முரிபொருளா லாகுமன்றி வேறேகாணீர்
யாகந்தான் செய்தாலும் வானனாமா
அதுவிறங்கில் மழைபொழிய மடவுபோலே 270

போலவே உச்சிவிழி நெற்றிப்பார்வை
பூண்டவனும் நின்றுவிடில் இருதயத்தில்
ஞாலமே லென்னயினி மலைமேலென்ன
நாறுடலைக் காப்பதற்கு யிம்மட்டோதான்
தாலமே கோடியிலோ சந்திரன்போல்
தங்கும்வெள்ளிக் கூட்டமதில் அதிசயந்தான்
சீலமே தானொருவர் புகண்டநாதா
செப்பினதி லவர்க்கினியர் வசிஷ்டநாதாவே. 271

நாதாவென் றவர்சொல்ல யிவரும்போற்ற
நாமிருவர் பேசுமொழி அண்டத்தப்பால்
சூதாவென் றவர் அரியு மிருவர்மோசந்
துன்பவலை யெவ்வளவோ அழிவுயின்பம்
பூதாது அறியவெனக் கிச்சைசொன்னாய்
புகழ்வளர்ந்து வெளியுள்ள மட்டுமானாய்
வேதாது வென்றவரே மனுவில்நின்றோர்
வேதய்ந்த உடலானாய் அதிகாமத்தாலே. 272

காமத்தாற் பசிவலியா லுடற்துன்பத்தால்
கடந்தனையே வெகுநாளே யுகாதிநாளே
சாமத்தா லென்னசெய்தாய் கூட்டுக்குள்ளே
தன்கயிலை நாட்டாரே கருப்புக்கெல்லாம்
ஆமத்தால் நாவிடுக்கி மேலேதள்ளி
அண்ணாக்கைத் தள்ளியதி னருகில்வாசல்
சேமத்தா லேயொழுகும் பாலையுண்டு
செந்தணலைத் தாண்டினனே பசியோயாதே. 273

ஓயாம லுண்டதனைக் கொண்டீர்கண்டீர்
ஊர்முழுதும் பசிக்கென்ன செய்தார்பார்த்தீர்
மாயாம லிருந்ததுவே கீழ்க்கண்டந்தான்
மற்றகண்டம் மறுபடியு முளைக்கக்கண்டேன்
சேயாக மண்ணுதிக்கப் பெற்றாள்மண்ணும்
திருவுடனே நான்முகனும் வந்தாரீன்றாள்
வாயாக யீன்றகதை விதமேசொல்ல
வசனிக்க யெத்தனையோ விதமென்றேனே. 274

## போகர் தர்க்கம்

இரவிந்த சடலத்தார் என்பில்லாதார்
யெம்மைப்போல் நிறங்கருப்பு ஓர்காலந்தான்
வரம்பிலாக் காயவுடல் மண்ணோர்கண்டம்
வரம்புண்டு யிக்கண்டம் பக்காலந்தான்
புறம்புண்டு யென்றனக்கு யெப்போதுந்தான்
போகனவன் காலத்து மேலேதானே
திறம்பூண்டு நான்வரவே மாட்டேனென்றான்
தேவடியாள் பிள்ளையென்றான் போக
னென்றனையே. 275

போகனவன் போனபின்பு மலைமேல்நின்றேன்
பொய்யுறையான் சத்தியங்கள் மெத்தவுண்டு
மாகனவன் வெகுதிடாரி மலைமேற்பாய்வான்
மாதர்க்க கேள்வியுள்ளான் சிறுவர்போல
ஆகனவன் திண்டுடலான் குச்சிக்காலான்
ஆகையினா லேகெவுனம் ஆகாயத்தே
தாகனவன் நீரில்லான் உலகைபாரைத்
தாண்டியடி சப்பாணி தாண்டுவாரே. 276

தாண்டுவா ரில்லாவிட்டால் உச்சிநேரே
தானேறிப் போவதற்கு வேலைசெய்தார்
கூண்டுபார் காயஉடல் பிலத்ததாலே
குமரிவிளை யாடுங்கார் தொட்டுநின்றார்
ஆண்டுபா ரப்படியே சஞ்சரித்தார்
அப்மேகந் தாங்காமற் பாரையொட்டி
மாண்டுபார் போனதுவு மண்ணேயாச்சு
மலைக்கல்லும் பொன்னாச்சு மண்மேலாச்சே. 277

## சட்டைமுனி நூல்கிழித்த விபரம்

ஆச்சப்பா யிவ்விதங்கள் பார்த்தேன்யானே
ஆசட்டை முனிசொன்ன நூல்கிழித்தார்
மூச்சப்பா வகைமுறையாய்ச் சொன்னார் நல்லோர்
மூதண்டக் கிசாயமுதல் சொன்னார்யன்னாள்
பேச்சப்பா கன்னடமே சேணியன்றான்
பிரளாமற் சொல்லறியான் தமிழ்ப்பாஷைக்கே
கூச்சப்பா தமிழ்வழக்க மில்லாதாலே
கொட்டினான் வெள்ளைக்கவி கட்டினானே. 278

நானென்ற தமிழதனிற் சொன்னமுன்னோர்
நன்குணர்ந்தார் பிழையென்று நகைத்தார்சீறி
வானென்ற திருமூலர் கண்ணாற்றானே
வாய்விளங்கச் சொன்னாரே பலபாஷைக்கும்
ஏனென்று கேட்பதுபோ லிருக்கவேணும்
யில்லாட்டாற் சும்மாதா னிருக்கவேணும்
கோனென்று சொன்னாரே குருவில்வாவா
குமரிவாலை கண்டவனா யிருவென்றாரே. 279

இருவென்று நூல்படித்தார் சபையிற்சித்தர்
இருந்தவரிற் கொங்கணவன் யெடுத்துப்பார்த்தான்
பொருவென்றார் மூலகுரு நிற்கச்சொன்னார்
புலவனே நீபோடா நில்லுவாடா
திருவென்றாற் சொற்பிழைகள் யெழுத்துக்குற்றம்
செந்தமிழு முந்தனுக்கு வருமோதான்
கருவென்றாற் தான்வருமே யெதிர்பாஷைக்கோ
காலன்கை கொடுத்துவிடு முரியென்றாரே. 280

முரியென்ற சொற்கேட்டுப் போகநாதன்
மோகமகன் கொங்கணவன் யெடுத்தெறிந்தான்
கரியென்றான் பிடிசாம்ப லாகவென்றான்
கண்டவர்கள் கண்ணெதிரிற் சவாசுயென்றான்
புரியென்றான் செந்தமிழைக் கயரேயாக்கி
பூரணத்தைச் சொல்லுதற்கு யிவனாரென்றான்
விரியென்றான் சொன்னதெல்லாஞ் சரியேயான
மேலெழுந்த அன்பத்துக் கிழித்தார்பாரே. 281

பாருபார் குருநூலே அதன்பேராகும்
பரிபாஷை யில்லாதாற் கிழித்தாரய்யா
நூறுபார் பிழைத்திடவே யின்னும்பாரீர்
நூலிரண்டு இருநூறு செய்துவைத்தார்
யோருபா ரில்லாமற் சொன்னார் அன்னார்
போகருக்குப் பாட்டனவன் வாத்தியாரே
தேருபோற் தானிருப்பான் உயர்ந்ததாழி
செயவீரன் கூட்டமது மெச்சுவேனே. 282

மெச்சுவேன் யூகோபு தேரையாரை
வேணபொருள் வைத்திருக்கும் அகஸ்தியனாதன்
குச்சுப்போற் தானிருக்கும் கோரக்கன் தன்னை
குடுகுடுக்கைக் கஞ்சாவைக் கொட்டிமேய்ந்தான்
அச்சுப்போல் யாவர்களும் சமித்தாரத்தை
அதைச்செபிக்க மாட்டாமல் மயங்கினார்கள்
வச்சுமே போய்மறந்து போனாப்போல்
வையகத்தோர் தான்நினைக்கச் செப்பினாரே. 283

செப்பினா ரவைச்சகாய்ப் பாடிப்போட்டார்
திருமூல ரேபார்த்துச் சிரித்தார்பின்னே
கூவினார் யாவர்களும் உள்ளடக்கி
உத்தமிக்குச் சம்மதமா வெனச்சொன்னார்கள்
கூவினார் கோரக்கர் நாளைப்பார்ப்போம்
சக்கித்துப் போய்வரவும் ஞாயமில்லை
தூவினார் மூலகுரு கிழவர்நீதான்
சொன்னதென்ன யினிச்சொல் லாதேயென்றாரே. 284

சென்றார்க ளிப்படியே யோகமார்க்கம்
யெடுத்தவர்கள் சொல்வார்கள் சித்தர்முன்னே
குன்றார்கள் ஆண்பிள்ளை முழுதுங்கண்டார்
குமரகுரு வானாலும் பிசகிப்போகும்
நின்றார்கள் மற்றவர்கள் கோடாகோடி
நேர்வழியே சொல்லறியா நின்றாரய்யா
சென்றேறி யறிந்தாலு மியற்கைக்கல்வி
சீரணிக்கா தேயிருந்தார் செப்புவாரே. 285

செப்புவா ரியற்கைதனிற் தெரிந்ததேபோல்
செப்பிவிடும் அருள்வந்து தெளிவாய்த்தானே
இப்புவியோர் யாவர்களுஞ் சொல்லார்யோகம்
இதுபெரிது ஞானமது யெளிதுமர்கும்
அப்புவார் யேதாகுஞ் சுழினைகாணார்
ஆரறிவார் முச்சுழியை மூச்சின்பேச்சை
கப்புவார் காணாதார் மூலங்காணார்
பெருவாக்கை நீட்டிடுவார் தலங்காணாரே. 286

காணோர்கள் மூலஉயிர் பிச்சைதன்னை
கண்டெடுக்க மாட்டார்கள் சல்லிவேரை
தாணார்கள் சொல்லுதற்கு அஞ்சுவாரோ
நமன்கயற்றை நாடார்க்கு யிதுவேவேலை
கோணாட்டாற் சுமாவிருகார் வாணாக்காலை
சொல்நாவென் நடிப்பார்கள் துடியிற்பெண்டீர்
ஆனைக்கா லிடுக்கிற்பலி யேத்தல்போல
அங்கமசை வுள்ளழவும் பலவாய்த்தானே. 287

தானென்ற சடங்கொண்ட வாயதாலே
தானேறிப் போகுமட்டும் வெகுவாய்ச் சொல்வார்
வானென்ற கருவிருந்த யிடத்தைக் காணார்
மகன்மகளும் பிறந்தவிடம் அச்சைக்காணார்
நானென்ற உயிரொடுங்கு மிடத்தைக்காணார்
நம்பினதை விட்டுவிடுஞ் சடலங்காணார்
ஊனென்ற காயமதிற் தூக்கங்காணார்
உள்மலத்தைப் போக்குதற்கு விசைகாணாரே. 288

பூணார்கள் பிரமத்தைக் காணுமார்க்கம்
பூணுவார் லச்சயத்தைப் பூட்டிப்பார்ப்பார்
ஆணுபாரவர்களுட விபரமெல்லாம்
அதிசயங்க ளாயிருக்கு மனேகநூலால்
தோணுவார் முத்தரவர்க் கிரமமெல்லாம்
சொன்னதுக ளெத்தனையோ ஆராய்ந்தேபார்
காணுநீ சொற்சோரம் விடாமலேதான்
கண்டுகொள்ள மெய்மனதாய் அறிவாற்பாரே. 289

பாரப்பா கடைப்பிள்ளை யாகாமற்தான்
பக்குவத்தில் முதல்நடுவும் விட்டிடாதே
சேரப்பா நம்மோடு தூரதிஷ்டி
தெரிவதற்கு அனுகூலந் தெரிந்து கொள்ளு
மேரப்பா யேறுதற்கு வேளியேறாதே
மெய்யறிந்து வெகுதூரஞ் செல்லுவாய் நீ
கூரப்பா வென்றுநம்மைக் கேட்டதாலே
கொட்டினேன் வெகுதூரந் தட்டினேனே. 290

## இந்நூலின் பெயர்

ஏனென்று கேட்டுபதிற் சொல்லுமிந்த
ஏகவெளி சூரியன்றன் ஞானபாகம்
தானென்று யிதற்குப்பேர் ஞானசூரியன்
தாபரம்போ லேயிருக்கு மசையாதப்பா
நானென்று சொல்லுற நூல்களெல்லாம்
நம்மையன்றிச் சொன்னாரே உடலுள்ளேதான்
ஊனென்று சொன்னாரே யிதற்குள்ளேதான்
ஓழிவீசு மென்றுசொன்னார் குருவாமென்றே. 291

குருவென்றால் ஞானமொழி திரிகாலந்தான்
கொட்டுமந்த வார்த்தையது ஞானவார்த்தை
திருவென்றாந் திரிகால மிருக்குந்தானம்
தேவர்களு மெச்சுவர்கள் முக்காலத்தை
பொருவென்றா லிப்பொரு ளிச்சைவைத்தாற்
போய்வருவார் போகாரே நிற்பார்தம்முன்
எருவென்றால் தியன்றிச் சாம்பலாகா
யெப்போது மக்கினியே மூலமக்கினியே. 292

## யோகம் பார்க்க நேரம்

அக்கினியே மூலதழல் நெருப்பைக்கண்டு
அசைவாசி மேலெழும்ப யோகநித்திரை
மக்கினியே வயர்நிறைய அன்னமுண்டு
மாந்தத்தால் மூலஅனல் அபானமாச்சு
தக்கினியே யபானவாய் வாடாமற்றான்
தாது நஷ்டி பிலப்படவும் உச்சிநோக்கு
சொக்கினிய ராக்காலம் மல்லாந்தேதான்
துடர்வாசி பார்த்திடவும் நடுவேபாரே. 293

பாரப்பா மூக்கு முனை புருவமத்தி
பரிவாசி ஓடும்விதங் கூர்ந்துபாரு
வீரப்பா மேலேறச் சம்மணத்தால்
விரிமடித்து உட்கார்ந்து தானாய்ப்பாரு
சீரப்பா உண்ணாதே மூக்கின்மேலே
தினத்தினந்தான் பார்த்துவரத் தானே சொல்லும்
தேரப்பா யிப்படியே வர்த்தமானம்
திரிகால வர்த்தம்வரும் வெளிவிடாதே. 294

வெளிவிடா தேயிருந்து வேலைபாரு
வேணதெலாஞ் சொல்லிவைக்கும் முற்றும்போதில்
ஒளிவிடா வர்சியனல் பலன்பெற்றோர்கள்
உத்தமர்கள் பெற்றபலன் உவமையில்லை
தெளிவீடே யோகிபலன் தெளிந்த பின்பு
தேர்வடம பற்றிநின்ற கதைபோலாகும்
அழிவீடே யாகிவிடும் பிறப்பின்மார்க்கம்
ஆர்கண்டு சொல்வார்கள் யோகிதானே. 295

யோகிதான் ஞானபதம் பெற்றுமேலே
உறவினர்போ லேயிருப்பான் விருந்துண்பார்போல்
யோகிதான் வருங்கால மெடுத்துரைப்பான்
ஊணுறக்க மின்பதுன்ப மொத்திருப்பார்
யோகிதான் ஞானபதம் மேலேயோகம்
உற்றமனம் பட்டதனால் யோகவானாம்
யோகிதான் யோகவான் சித்தஞானி
உறமான ரிஷியிவனும் முனியாவானே. 296

ஆவானே யெப்பதமுங் கிட்டுங்கிட்டும்
ஆகாதோ ஒத்திருந்தாற் பிரமசாய்கை
வேகாதோ காமமது சாம்பலாய்த்தான்
மிஞ்சினது வெளிபோலே ஒளியாகாதா
சாகாதாநம் நினைவு அழிந்தாற்பின்னே
சம்சாரி யாகாதா அருளின் வீடு
போகாதா வீட்டருளின் கூட்டுக்குள்ளே
புலியிருந்தால் நரிபோன புடவதாமே. 297

ஆமிந்தப் புடவதனின் சிம்மம்வாரா
ஆகுமோ அருளிருந்தால் மனமும்வாரா
போமிந் தக் கருத்தறிந்தாய் யூகம்போகா
பொல்லாங்கு தானிருந்தால் கலகம் போகா
சாமிந்த நோயிருந்தால் மரணம்போகா
தந்திமுகன் தானிருந்தால் யாழிபோகா
காமிந்தப் பற்றிருந்தால் மனமும்போகா
கணக்கிருந்தால் சங்கற்பங் கணக்கில்லைதானே. 298

இல்லையே சங்கற்பம் கணக்குமில்லை
இத்தனையும் நெஞ்சுபள்ளங் கையகலமாகும்
தொல்லையே அப்பள்ளம் மேடதாகச்
சொன்னவர்கள் கோடியொரு கோடியல்ல
வல்லையே யப்பள்ளம் நிறைவதற்கு
வாலியப் பெண்களுமோ பொருளேதானோ
கல்லையே மண்மலையும் வாரியோடு
கண்டபள்ளம் நிறைந்தாலும் நிறைந்திடாதே. 299

நிறையுமே திரிகால வர்த்தமானம்
தெஞ்சாடுப் பள்ளமெல்லாந் திரேகமெங்கும்
உறையுமே யிதையன்றிச் காயசித்தி
ஊரண்டஞ் சுத்திவரு மனவேகந்தான்
பறையுமே யேசிடுவாள் புருஷாவென்று
பார்த்தவர்க்கு யிதுவென்ன லெகுவுதானே
மூறையென்றாற் தெய்வபொருள் முக்தியல்ல
முன்சொன்ன பொருளெல்லா முத்திருபமதே. 300

மூக்தியென்றால் அகத்தியு மூலாத்தீயும்
முன்னின்ற துர்வாசர் கோபத்தீயும்
சித்தியென்ன யிதுமூன்றும் ஒன்றாய்ச்சேர்த்து
திரிகயரு திரிகால மீண்டுகார்க்கும்
தத்தியென்ற தாகாது தாழமாகா
தம்பட்டை கேட்டுவிடில் ஓடிப்போகும்
சுத்தியென்றா லிம்மார்க்கம் செவிடர்போல
காதுக்கு மெட்டாது வெளிபோலாமே. 301

வெளிபோலா மென்றுசொன்னார் வெளியிற்பொங்கும்
மெய்ப்பொருளே காய்க்குமிந்தப் பழத்தைத்தானே
ஒளிபோலே சிருஷ்டிதிதி சம்மாரந்தான்
ஒப்புவிக்கும் வேதமது யேவல்கேட்கும்
துளிபோல நின்றுகொண்டு தாகநீர்போல்
மாமுத்தர் தங்களுக்கு மழையேபெய்யும்
தெளிநீரே முகிலோடு யென்றாலோடும்
தேவர்களு முவந்திடுவார் நமதுவாக்கே. 302

வாக்கினாற் சொன்னானோ சிரித்தானோதான்
வாய்கொண்டு சொல்லாமல் நகைத்தான் பாரு
நோக்கினாற் போதாதோ பிரமரந்திரம்
முன்னறிவோர் தங்களிடம் பிரமந்தானே
சாக்கினாற் சொல்லுவோங் காண்காரணத்தால்
தன்கூடு அழிவதற்கு ஏமனில்லை.
போக்கினாற் போவதில்ல பிரமன் செத்தான்
புதுப்பிரமன் நாமானோம் புதிதாய்த்தானே. 303

புதிதாய்த்தா னிப்படியே முனியானவாக்கால்
புரமூன்று மெரித்தாற்போற் ஸ்திரீகள்சாகும்
மதியேதான் குறைவழூரும் புதிதேமேகம்
மானிடரு மப்படியே யினிமேல்நூரே
கெதியேதான் பிரண்டுருண்டு சாய்ந்ததாலே
கிளருகிறேன் புதுமேகங் கலியுகத்தில்
விதியேதான் அய்யாயிரம் பத்தொட்டொன்று
மேல்நடக்கும் மாசிமுதற் பிறக்கும்பாரே. 304

பிறக்கும்பா ரதுமேலே நாற்பத்தொன்று
பெருஞ்சித்தே மதிளழூரும் பெரிதேயாகும்
சிறக்கும்பார் பூரணமா மதிவழர்ந்து
தேய்பிறையு மில்லாமல் முழுதுமாகும்
உறக்கும்பார் இதுதேய்ந்த காலஞ்சொல்வேன்
ஒகோகோ சூரியனா ருதித்தகாலம்
இறக்குபா ரிதுதேய்ந்து வளர்ந்துவட்டம்
இப்படியே அமாவாசி பூரணந்தானே. 305

பூரணமாம் பௌரணையே ஆதிகாலம்
பூவில்வருந்திணைந்தான் வட்டமாய்த்தான்
காரணமாய் வியானனென்ற வெள்ளிதானே
கதிர்பெருகி அண்டசுவர்க் கப்பால்நின்றார்
ஈரணமே அவ்விடத்தி லிருந்தசூரியர்
எதிற்பார்வை தாங்காம லிவிடம்வந்தார்
ஆரணமே சொல்லாது பெரியோர்சொல்வார்
ஆச்சரியஞ் சொல்வதெது ஞானசூரியனே. 306

சூரியனார் தானெதிர்க்க அண்டத்தீப்பால்
சூரியனாம் வியாழம்வெள்ளி யிவடம்வந்தார்
கூரியனா ரிவ்வண்டம் வந்தபோது
குமிருமொளி சூரியனு மானார்வானில்
வீரியனாய் வந்தநாள் சொல்வேன்கேளும்
விபரமிது மெத்தமெத்த மேலோர்கேட்டார்
சீரியனார் தன்வரத்து வருஷமாசம்
செப்புவது யேதென்றாற் சொல்லுவேனே. 307

சொல்லுகிறேன் கேட்டதையு முதானேமக்குத்
சொல்லுதற்கே நான்கேட்டேன் வாலைசொன்னாள்
புல்லுறேன் தன்வந்திரி வசிஷ்டநாதா
புகலுமே முன்சொல்லாப் பின்சொல்லில்லை
கில்லுமே யென்னலுமே கயிலைகூண்டார்
கிட்டிருந்து பார்த்திருந்தே னந்தநாளில்
அல்லுமே ராவில்லை சந்திரன்தான்
அடித்துவரும் நிலாவதனிற் பிறந்தேநானே. 308

பிறந்தநாள் சதுர்யுகமே அறுபதேதான்
பேரான சந்திரனும் வட்டமாய்த்தான்
கறந்தநாள் முழுதுண்டு யாங்கள்வாழ்ந்தோம்
துயரில்லை யக்காலம் பிறப்புமில்லை
இறந்தநாள் யான்காணேன் வானஉச்சி
ஏறியந்த உச்சிதனில் நின்றுபோகும்
மறந்தநாள் நானில்லை யிதுவுங்கண்டேன்
மாமலைமேல் மதியிருக்க வதுங்கண்டேனே. 309

கண்டேனே யின்னமொன்று தினமுங்காலை
கதிரவனும் வெயிலெறியான் ஒளிசெஞ்சோதி
பண்டோனே யீதென்ன பாகமாக
பலவிதமாய்த் தானிருக்கும் விபரஞ்சொல்ல
திண்டோனே மலைபோலே நரையாமூப்பு
சிறுவருக்கு ஆனதுபோல் அவருக்காகும்
உண்டோனே சொல்லிவிடு உளதையெல்லாம்
ஒழியாமற் சொல்லுகிறே னுமக்காய்த்தானே. 310

உமக்காக ஆதிதனிற் கண்டஞாயம்
ஒன்றதுவு மறவாமல் நினைவால்வர்த்தம்
தமக்காய்த்தான் வைத்திருக்கேன் யெனக்கு வேண்டாம்
சந்ததிகள் கேட்பதென்ன தானேயீயும்
நமக்காய்த்தான் வாலையவள் பிரமரந்திரம்
நாயகனைக் கோறாமற் தனியேநின்றாள்
நிமக்கேதா நானிருக்கேன உண்டேகூடு
நெடுநாளோ பீத்தலிது வசைசொற்கூண்டே. 311

கூண்டதனி லென்னைப்போற் பலபேருண்டு
கோரக்கர் யென்போல வெகுநாள்மானி
பாண்டதனில் வருடலுங் கஞ்சாமாய்கை
பதறியவ ருண்டதினாற் சொக்கிப்போனார்
ஈண்டதனி லென்காலஞ் சிலநாள்தன்னில்
ஏரிமலை மீதினிலே யிருந்துமாழ்ந்தார்
மாண்டதனிற் பின்பொருக்கால் பூமிமண்ணும்
வளமாகி நின்றிடவு மிலங்கிவாழ்ந்தாரே. 312

வாழ்ந்தார்கள் மண்ணுவரை யாகிப்போன
மனிதரெல்லா மலையேறக் கண்டேன்பார்த்தேன்
தாழ்ந்தாரே மண்ணெல்லாங் கல்லேயாக
தானந்தப் படிசென்றார் மலைமேலேகி
ஆழ்ந்தாரே யிப்படியே மலைமண்மாரி
அடிக்கடியே கடல்பொங்கா மலைமண்பொங்கும்
மிழ்ந்தாரே யிதுகடந்து நெடுநாள்தோறும் 313
மெய்மண்ணு மிப்படியே மலையுந்தானே.

மலைமண்ணு மாறிவிடுங் கடலோர்காலம்
மாறாது நின்றிடுமோ மாறுமாறும்
சிலைமண்ணு மலைவாரி போலத்தானே
தேர்வரத்துச் சந்திரருஞ் சூரியன்றான்
கலையென்ற மூச்சுபிரி வானாற்போல
கண்டகண்டந் தானோடுஞ் சுவரைத்தாண்டி
வலையென்ற பொத்தலெண்ணிக் கண்டாப்போல
மலைமண்ணும் வாரிகண்டம் அண்டம்ஒன்றே. 314

ஒன்றென்று கண்டஅண்ட மிதுதானாகும்
ஊடுருவிப் பார்ப்பதற்குச் சுவரேயுண்டு
குன்றென்ற இருளிருக்குஞ் சுவரேபோல
கோடியல்ல வட்டம்போற் சுழலேஅண்டம்
நன்றென்ற யிருட்சுவராம் தூரங்கேளு
நாம்கண்ட பலபேத மிதற்குட்பாரு
மன்றென்ற ஞாலமதில் ஞாயபேதம்
வசனிக்க யெட்டாது யென்னாலாமோ. 315

ஆமேதா னமாவாசி சூரியர்க்கும்
அரைந்துவிட்டே னிதற்குள்ளே யுற்றுப்பாரு
நாமேதான் கண்டதிந்தப் பலன்தானென்ன
நாயகனை யேபிரிந்த நினைவைப்போல
ஊமேதான் நீர்வினவ யெழுந்துளத்தில்
ஒத்துவரும் வாலைப்பெண் ணுகந்துசொன்னாள்
தாமேதா னாச்சரியங் கொண்டீரய்யா
தன்வந்திரி யித்தனையார்த் தலுத்துச்செத்தாரே. 316

செத்தார்கள் சீவனுயிர் விட்டுமாண்டார்
திருவுடலு மூச்சுஉயிர் பிரிந்ததாலே
வந்தார்கள் நாளிருந்து யோகச்சார்பால்
வாசிவலுச் செய்தவரு மரணங்கண்டேன்
மூத்தார்கள் பிஞ்சினிலே கர்ப்பங்கண்டார்
மோகமிட்டா ரானதினால் உடலேகெட்டார்
இத்தார்கள் சீவருடல் பிரிந்ததாலே
இருந்ததென்ன போயென்ன யிவர்கள்தானே. 317

இவர்களுட ஞாயமது அனேகங்கண்டேன்
யெப்போது மெத்துணையு மில்லாறானார்
அவர்களுட பாஷம்நினைந் துருகியானே
அன்றுமுத லின்றளவும் நைந்ததுன்பம்
எவர்களுடன் சொல்வமென்று யிருந்தேன்யானும்
என்பிறவி யெங்கிருந்தா யிங்குவந்தால்
உவருடலைப் போட்டிடுமுன் உன்னைக்கண்ட
உவகையெனுஞ் சந்தோஷம் யார்க்குரைப்பேனே. 318

ஆர்க்குரைப்பேன் சூரியனார் அண்டந்தானே
அத்தனையென் றெண்ணியுமென் கணக்கிடாதே
பார்க்குரைப்பேன் நீரறிவீர் புலப்படாதே
பரிதேசி வாசிமூச் சாடல்கண்டார்
தாக்குரைப்பா ரிதுபெரிதோ வயதோகொஞ்சம்
தாண்டரிது உடல்கெவுனம் யார்க்குந்தொல்லை
சேர்க்கரிது உயிருடலைப் பின்னவிட்டு
சித்திரம்போ லாக்கிவிட்டார் போகர்தானே. 319

போகரிஷி பெற்றசித்தி யென்னசொல்வேன்
போர்புரிவார் ஆகாச கெவனந்தன்னில்
ஏகநாதன். வெட்டவெளி தனில்நடப்பார்
எல்லார்க்கு மாகாது கெவுனசாய்கை
மோகநா தன்கெவுன சித்திபெற்றார்
மொய்குழலாள் சித்திபெற்றார் வாங்கப்பெற்றார்
காகநாத னுந்தனுக்குக் கெவுனமார்க்கம்
காலடக்க மில்லாதோ லேசாகாதோ. 320

லேசாகா நான்பெருத்தே னுடல்கனத்தேன்
நேராகத் தூரதிஷ்டி பாய்ந்தாற்போல
தூசாக நானிருந்தேன் நான் சொல்தூரம்
துகையுண்டு கணக்கில்லை போகருக்கே
காசாகக் கண்டுவிட்டார் சுவரைத்தாண்டி
நான்செல்வே னப்படியே தான்சொல்லொண்ணா
ஆசாகச் செய்தாரே சம்பிரதாயம்
அவர்பிள்ளை யப்படியே முக்கால்தானே. 321

முக்காலந் தாண்டாமற் பெண்ணாற்சிக்கி
மோகமுனி போகர்குலம் மண்ணாய்ப்போனார்
எக்கால மப்படியே முனியாஞ்சித்தி
யெவராலு மாகாது பெண்ணில்மாழும்
அக்கால மானாலும் பெண்ணால்விட்டார்
ஆகெவுனம் போனாலும் பெண்ணைத்
தொட்டார்
இக்காலம் பெண்ணைவிடார் கெவனம்வாயா
எச்சித்தி வாய்த்தாலும் கெவுனம்வாய்க்காதே.
322

வாய்க்காது பெண்ணினத்தாற் சித்திதானே
வாய்க்குமோ பெண்ணினத்தாற் முத்திதானும்
ஏய்க்குமே பெண்களுட மூலஸ்தானம்
எவர்வெறுத்தார் நீர்வெறுத்தீர் நான்
வெறுத்தேன்
தாய்க்குமே பிள்ளையென்றாற் கசப்பேயாகும்
தாபந்தம் வேண்டாங்காண் சும்மாநில்லும்
நாய்க்குமே வெள்ளெலும்பு ருசியானாற்போல்
நாயகியாள் தன்சுகமும் ரத்தம்வடிந்தாலே. 323

ரத்தநீர் கண்ணாலே வடியச்செய்யும்
நாரியரின் சந்தோஷம் ரத்தக்கண்ணீர்
அத்தநீர் ஓட்டுகின்ற தன்மைபோல
அம்மனது மிம்மனதும் நாயகாரே
செத்துநீ ராகுமட்டும் பெண்ணின்சோம்பல்
தேறுதலே விபகாரம் சிறிதேமுத்தி
சுத்தநீ ரானாக்கால் வாலைசாகும்
கதவடைத்து வெளியில்விடாள் அவள்
போதாதே. 324

போதாது யிவளைவிட்டு அவளைச்சேர்வார்
புழுக்கூடு விபகாரம் நீசபாஷை
வாதாது கொடுப்பதற்கு ஒன்று வேணும்
மனமாழ ஓர்வகையு பெட்டுதில்லை
வேதாது கலைவாணி விடாளேவிட்டால்
விதியிதையோ தலைவிதியோ வேறேயாதோ
நாதாது யென்னசெய்யுந் துணையில்லாட்டால்
நாடிநரம் பாடாது வாக்கில்லாதே. 325

இல்லாதே யானபடி அருந்ததிக்கே
யேற்றீரே குற்றமில்லை யினிமேல்ஞாயம்
சொல்லாதே யானிருக்கேன் குலத்துக்கெல்லாம்
சுக்கிலத்தை வெல்லுவதே யெனக்குபிச்சை
கல்லாதே யேன்படித்தேன் விதியேசாம்பல்
கட்டைமண்ணாய்ப் போமளவும் என்னை
வேண்டேன்
நில்லாதே யான்விரும்பில் மனதைக்கண்டு
நீள்விசும்பிற் கேத்திடுவேன் சாவேண்டேனே. 326

வேண்டேனே மரணமொடு பெண்ணைநத்தும்
மேனியந்த மனருபங் கருத்தாற்தொட்டு
தூண்டேனே யெக்காலம் வசதியாக
சுகித்திருப்பே னிக்காலம் வாழ்நாள்மட்டும்
மாண்டேனே யென்னினைவிற் தூக்கம்போல
மரணத்தை யார்கடப்பார் பெண்ணுமாழும்
வீண்டேனை நத்துவது துன்பத்திற்கு
விரும்பாமல் வந்திடுமே துன்பந்தானே. 327

துன்பந்தான் வேண்டுமென்றாற் பெண்ணாள்வேணும்
துணைவேணு மென்றாலோ பெண்ணாகாது
இன்பந்தா னென்றாலோ பிறவியுண்டு
யிறைத்தூரு மணற்கேணி யேற்றம்போல
அன்பந்தான் சொற்கேளான் நாமுங்கேளோம்
அனைவருமா நம்மவரில் நீருமாமா
நன்பந்தான் நீரிருக்கப் புசிப்பைவெண்ணி
நாடினோங் காசிபரும் நாமுந்தானே. 328

நானுந்தான் காசிபரும் வசிஷ்டயோகி
நற்பிரம பதம்பெற்றோம் நன்குணர்ந்தோம்
வேணுங்காண் நீங்கள்செய்த தவத்தினாலே
விதிவிலக்கை யேதுறந்தீர் யிருவருந்தான்
பூணுங்காண் ரோமரிஷி பதத்தைச்சொல்லும்
புகலுவேன் ஆராலு முடியாதப்பா
வாணுங்காண் யென்னாலே சொல்லலாகா
வல்லபமே வாய்வார்த்தை வித்தைதானே. 329

## ரோமரிஷி நூல்மகிமை

வித்தைதா னவர்சொற்போல் சாஸ்திரங்கள்
விரித்துரைக்கச் சூச்சமதாய் மெய்யேவாயாய்
முத்தேதான் வாய்திறந்தா லொளியைப்போல
முனியோகி சொல்லிவைத்தார் விஸ்தாரங்கள்
சித்தேதா னவர்சொல்லு யினியேதானும்
தேவரொடு மனிதர்களும் விள்ளார்விள்ளார்
எத்தேதான் போலிருக்கும் ரோமர்வாக்கு
ஏதென்று சொல்வதய்யா அவர்வாக்குக்கே. 330

அவர்வாக்குச் சொல்லெல்லாஞ் சுலோபமாகும்
அணிமாதி சொல்லாமல் மறைத்து வைத்தார்
இவர்வாக்குக் கற்பவகை நூறிற்சொன்னார்
யிதன்பின்னே அன்பதினிற் குருக்கிச்சொன்னார்
உவர்வாக்கு வேண்டாமே யவர்வாக்குக்கு
உற்பனங்கள் மெத்தவுண்டு பாஷைநன்று
கவர்வாக்கு அல்லல்ல யோகிவாக்கு
கண்மூக்கு மத்திநடு வெளியாய்ச் சொன்னாரே.
331

சொன்னாரே சித்தரெல்லா மெதிர்த்தார்வந்து
சொற்பிழைகள் காணாமல் விழித்தார்பின்னே
பின்னாலே பிழைசொல்வார் நம்மைப்போலொற்றார்
பேசரிது சாஸ்திரத்தைப் போற்றினேன்யான்
கண்ணாலே பார்த்தவர்கள் விழலேயாகார்
கண்டுகொள்வார் சூட்சத்திற் சூட்சமாகப்
பின்னாரே சங்கற்பம் பூணார்காணார்
பேச்சறிந்து பேசுவரே ரோமராலே. 332

ரோமராற் சொன்னதுவுஞ் சம்பிரதாயம்
நுனிநாக்கை மடிக்காம லறுக்காமற்றான்
பாமராள் மடித்திடுவா ரறுப்பாரென்று
பல்லுதட்டை மூடாம லுயிரைநோக்க
காமராள் பார்ப்பதற்கும் லேசதாக
காட்டினார் வேடிக்கை சிரிப்பதாக
ஊமராள் சிரிப்பதுவுங் காண்பதேபோல்
ஊமைகண்ட கனாப்போலு மற்றோர்
சொன்னாரே. 333

சொன்னார்கள் மற்றவரும் பின்னலாகத்
தொன்றுதொட்டுச் சொல்லாமல் விரிவாய்ச்
சொன்னார்
கன்னார்க ளுடற்பருதி முழுதுங்கண்டார்
காயசித்தி கெவுனம்வரை முத்திமட்டும்
உன்னார்கள் சொற்பிழையே குறைவேயாகும்
உருண்டவர்கள் சொன்னாக்கால் மரண
சாஸ்திரம்
அன்னார்கள் சொன்னதுபோல் ரோமர்சொல்லார்
ஆதிகண்ட காசிபர்போல் யாருஞ்சொல்லாரே.
334

காசிபரும் ரோமருமே வசிஷ்டர்நீரே
கரையேறிப் போய்வந்து மீண்டோர்நீரே
வாசிபரி தேசிமூச்சு கூச்சுஆன்மா
மனஞ்சீவ னறிவோடு தெளிவுயூகம்
பேசுவரிக் கருத்ததனை முழுதுங்கண்டோர்
பெரியோர்கள் சொல்லுவரே முழுதுமுத்தி
தேசிபரி பூரணமே குறையக்கண்டோர்
தேடுவரோ சொல்லெல்லாந் தேறாச்சொல்லே.
335

தேறாம லிவ்வகையே முழுதுந்தானே
தேர்வடம்போல் நீட்டிவிட்டார் சாஸ்திரங்கள்
ஆறாத மனச்சாந்தி யில்லாதார்கள்
ஆகாய சந்திரனின் குறைகாணாதார்
கோறாத சந்திரனைக் குறைதீராமல்
குருகுலமோ மதிகுலமோ குலமோசந்திரன்
ஏறாம லிறங்கினதே யிதனைத்தீரார்
யென்னசொன்னார் சாஸ்திரங்கள் யென்ன
யோகமதே. 336

யோகமதாற் சொன்னாரே விசுவாமித்திரர்
ஓடுவெள்ளி பிச்செறிந்தார் நட்சேத்திரத்தை
மோகமாய்ச் சொன்னாரே மாண்டவீயர்
மொய்குழலாள் சொன்னாளே நளாகினிக்கே
வேகமாய்ச் செல்லானே தடையாய்நின்றான்
வேதவுரை கேட்பவனே சூரியன்றான்
பாகமாய்ச் சொன்னானே தவத்தினாலே 337
பாரிந்த மதிவளர சாபம்போக்கே.

சாபம்போய் வளர்மதியே யென்றுதானே
தான்கொடுக்க மாட்டாத முத்தர்தானும்
கூபம்பா லுள்ளிருக்கும் ஆமைபோல
குறைவயறாற் கத்துகின்ற தவளைபோலும்
தீபம்பால் விழுகின்ற காமப்பூச்சி
தெருவழியே நடக்குமவர் குலுக்குமாபோல்
தூபம்போற் சொன்னாரே சோடசங்கள்
தொன்றுதொட்டுச் சொன்னவர்க ளிருக்கத்
தானே. 338

இருக்கவே பயமின்றி அச்சமின்றி
எப்போதும் நாணமில்லா தியாக்கைமோனர்
குருக்கவே சொல்லிவைத்தார் தீனீர்காணா
குருயோகி சிருஷ்டிதிதி சித்தியாதோர்
பெருக்கவே சம்மாரஞ் சாபங்கோபம்
பெருத்திட்டாற் சாபம்வரும் மறைவென்றார்கள்
நருக்கவே கற்றாரே ஓட்டக்கற்றார்
நவின்றாலே பலனெதுவோ திஷ்டிதானே. 339

திஷ்டிதான் சித்திக்க வளருஞ்சந்திரன்
தேப்பிரைையே யாகாமற் பூரணந்தான்
திஷ்டிதான் காசிபரும் விசுவாமித்திரன்
சிவந்தகலை நளாகினியும் நீரும்நாமும்
திஷ்டிதான் மதிவளரக் கலைதேயாமல்
செழுமதியாய் உருமதியாய்ச் செங்கண்ணாலே
திஷ்டிதா னிதுசொல்ல நாமுங்கூடி
தீண்டகரு நீங்கிடவே செப்பினேனே. 340

செப்பினார் வசிஷ்டரொடு புசுண்டர்தானே
திரிலோகந் தேடியவர் தம்மைக்கண்டு
வைப்பினரே கயிலாச புசண்டநாதர்
வாய்கொண்டு சொன்னாரே வரவைத்தானே
ஒப்பினரே அப்படியே தொடர்ந்துவந்தார்
ஓகோகோ யிங்குவந்தீர் கிழவன்கூட்டில்
மெய்ப்பினரே கடேசியுகம் அறுபதேதான்
மேல்விழையுங் கலியுகமே அதிலேதானே. 341

## கலியுகத்தில் சந்திரசாப கணக்கு

கலியுகமோ முன்பாகம் அய்யாயிரத்தே
கலியோடு பதினெட்டும் அதனிற்சேரும்
வலியதிலே அய்யாயிரப் பதினெட்டின்மேல்
வளர்பிறையுந் தேறுமடா நாற்பத்தொன்றில்
மெலிவெய்துஞ் சந்திரருந் தேறுவாரே
மேலய்யா யிரத்தெட்டு அன்பத்தொன்று
பொலிவெய்தும் அய்யாயிரத் தன்பதின்மேல்
பூரணமே ஒன்பதுடன் பூர்ணமாமே. 342

பூரணந்தான் தினந்தினமும் பூரணந்தான்
பொய்யடா அமாவாசி பொய்யாய்ப்போகும்
பூரணந்தான் குறைந்ததினா லம்மாவாசி
பூர்ணமதி யானாக்கால் அமாவாசையேது
தோரணம்போற் தொங்கிடுமோ நிலைநிற்காதே
தொன்றுதொட்டு வந்ததல்லக் குறைந்ததாலே
காரணமே ஓர்முனிவன் சாபமாகும்
கங்குலதை நீக்கிடுமே மதிவந்தாலே. 343

மதிவந்தா லிருள்நீங்கும் பிரபையாலே
மாமாயை யிருளழியும் ராவேயில்லை
கதிர்வந்தாப் பகலுண்டு மதிவந்தாக்கால்
காரிருளும் நீங்கிவிடும் பகல்ராவில்லை
விதிவந்தா லேயொழியும் விதிதா னுண்டு
மேகமுதல் யாவுக்குங் கதிர்மதிக்கும்
துதியென்ன யிதுமுறையே வெகுநாளல்லோ
சொர்க்கமுதல் யாவற்று மாறுந்தானே. 344

மாறுவது காலனொடு காலம்பாரும்
மறைநான்கு ஐந்தாறு ஏழெட்டாகும்
நீறுமது மாறிவிடும் ஓர்காலத்தே
நீண்டமறை செறிந்தஉடன் செறிவோர்காலம்
தூருவது காய்வெடிக்கு மாமோர்காலம்
சொல்பாஷை யென்னாளும் ஒன்றாங்காலம்
மேருவது சிறிதாகும் பள்ளமாகும்
மேன்மையோர் தாழ்வதில்லை
ஆத்மங்கண்டோரே. 345

கண்டோர்கள் மெத்தவுண்டு யெமைப்
போலொற்றோர்
கல்லரையில் நுழையவில்லை மனிதர்போலே
விண்டவர்கள் காண்பரிது மேன்மையோரை
மேலானோர் கண்டுகொளல் அரிதுஅம்மா
மொண்டவர்கள் தன்னோடு கூடியாடி
முனையாமற் கிட்டிருந்து உறவுநாடி
பண்டவர்கள் கண்டுகொள்ள முறையிதாகும்
பழகினவர் போலிருப்பார் அறியார்தானே. 346

அறியாதார் போலிருப்பா ரறிந்தோருள்ளில்
அறிந்தவர்க ளுடன்கூடில் தெரிவார்தானே
முறிந்தோர்கள் தனைமறந்து தன்னைவிட்டு
முழுமோசத் தால்மறந்து தனைக்காணாதார்
விரிந்தோர்கள் திரிகால மதனைக்கொண்டு
மெய்யுலகி லேயிருந்தார் நினைவைவிட்டு
திரிந்தோர்கள் தன்காரிய மறதியாகும்
திரிகாலம் புதுமனிதன் தேவரூபே. 347

தேவரூப தேவரொடு கூடார்நாடார்
சேர்ந்திருவ ருங்கலந்தார் மனிதர்போல
ஊவரூபி காலனொடு காலமார்க்கம்
ஊடுருவிப் பேசுவரே உழதையெல்லாம்
ஆவரூபி வார்த்தையென்ன யுகங்கள்பேதம்
அண்டகண்டங் கடந்தப்பால் சுவரைத்தாண்டி
ஏவரூபியிருக்குமந்த வெளியொளியாம்
இயற்கையென்ன வென்றுஅவர் பேசுவாரே. 348

பேசுவார் திரிகாலந் தூரதிஷ்டி
பேச்சரிதல் அண்டசெவி கண்டே கூடும்
வீசும்பார் திரிகாலந் தூரதிஷ்டி
விரதங்க ளில்லாத பெரியோர்காணார்
மாசுபார் கண்ணாலுங் காதினாலும்
மனதாலுங் காண்பரிது பெரியோர்செய்கை
தூசுவார் கனத்தடியிற் சாவிபோல
துர்க்கருவி மாந்தருமே சாவிதானே. 349

சாவிதான் போகாமல் விளைவேயோகி
தன்கதிரைத் தானடிக்கும் பொலிதூத்தாமல்
ஆவிதான் பொலியெனவுந் தூத்திடாமல்
அரகரா நாரணா வென்றிடாமல்
கூவியே அள்ளாமல் உள்ளேதள்ளி
குமரிகாணாக் கைமுதலை வைப்பார்உச்சி
தாவியே யேராரே மலையிலுச்சி
சமுசாரி போலிருந்தார் முத்திதானே. 350

முத்தர்தான் வெகுவிதமே யோகிபோலும்
முனிபோலும் ராசரிஷி தொழிலைப்போலும்
வித்தர்தான் மேலவரே தொழிலனேகம்
வேடிக்கை வாய்வார்த்தை சித்திதானே
சத்தர்தான் செய்தொழிலோ முறையோகோடி
துயர்செய்யா வெகுலெகுவே சொல்லாலாகும்
அத்தர்போ லேயிருக்கும் வல்லபங்கள்
ஆருக்குந் தெரியாது சொல்லுஞ் சாஸ்திரமே. 351

சொல்லுமே வல்லபங்க ளனுபவத்தை
தூண்டிவிக்கக் குருகொடுக்க வாங்கிநில்லு
நில்லுமே யென்றுசொன்னால் நிற்பார்யாரோ
நீயென்னை விட்டுவிடு மென்பாரோதான்
கொல்லுமோ யென்றுநம்மைக் கேட்பாரோதான்
குமரிகையை வாங்கிவிடு மென்றிட்டாலோ
சல்லுமோ யென்றதட்ட வருமோபாரீர்
தாபந்த மில்லாத சினேகத்தாலே. 352

ஆலோஅல் லோவல்லோ துஷ்டரைக்கண்
டடங்கினார் பெருமையுள்ளோ ராதலாலே
காலையன்றித் தலைகீழாய் நடப்பாராரோ
காரிருளை நீக்குவரோ வென்பார்துஷ்டர்
வாலோ தலையோகாணா மாந்தர்தானும்
வசனித்தார்க் கென்சொலுவீர் வாழைவித்தை
போலேயல் லோயிருந்தீர் ரூபங்கொண்டும்
போயிருந்த பொய்க்கூடு மெய்யென்றீரே. 353

மெய்யென்று நாமறிந்தால் பொய்காணாது
வெருஞ்சொல்லோ உவர்நெல்லோ மேனிபாரீர்
தையென்ற மாதம்பனி யெங்கேபாரீர்
தாரித்திரம் தாலியல்லோ பெண்ணென்பீரே
அய்யமென்ற கோழைதனை யெச்சிலென்றீர்
அதுவிபரங் காணீரோ யேமன்கோழை
மெய்யென்ற கூட்டினுள்ளே விளைந்தயேமன்
மெய்க்குள்ளே தொண்டைநெஞ்சி லிருந்தகட்டே 354

கட்டுதனை நீக்கிவிட்டார் யெமனைப்போற்றார்
காசினியி லிதுவென்ன உடன்பிறந்தான்
குட்டுதனைக் காணாமல் யோகமென்றார்
கோரக்கர் மூலிகொண்டோர் செருமினாப்போல்
விட்டுயிரை மட்டாக்கி அடைப்பார்துண்டாய்
மெய்விலகத் தானிருந்தீர் உடலைப்போற்றீர்
சிட்டதனைப் பாய்ந்துவிடுங் கோழைநீரே 355
தெருவாழை யீன்றபழம் வித்தைபோல.

வித்தைபோ லேநடித்து விபகாரத்தை
மெய்வீடு மப்படியில் விபகாரத்தை
தத்தைபோ லேநடித்தீர் தத்தைகிள்ளை
தான்பேசும் வார்த்தையைப்போல் படித்தா
சொன்னீர்
இத்தையே முன்படித்தீர் கண்டீர்கேட்டீர்
இதுமேலே புதுப்படிப்பே யென்படிப்பு
அத்தையே தூரிருந்தாள் தமக்கைதாயார்
அவர்போலே எல்லாரு மெங்கிருந்தார். 356

எங்கிருந்தா ரவர்களுமே தூரிருக்க
எவர்மக்கள் கிட்டிருந்தா ரெண்ணிப்பாரீர்
அங்கிருந்தா ரிங்குவந்தார் இங்கார்போனார்
அடுப்படியி னாலல்லோ வேறேயானீர்
தங்கிருந்தா லிங்கிருகார் யெமதுசுற்றம்
தாரித்திரம் போற்சுழல்வார் தாலியாலே
மங்குவார் கூடியுண்டு அடுப்புச்சாம்பல்
மரணத்துக் கோசாம்பல் மறலியன்பே. 357

மறலியன் புள்ளவரே வாரும்வாரும்
மனதறிவிற் சத்துருவே வாரும்வாரும்
உரலிநடு உலக்கைமத்தி யுள்ளபேரே
உளம்பினவன் சொல்லறியா வுவமையோரே
விரலிநடு ரேகையது விரிந்தாப்போலே
மெய்யுளே கோழையது யறியாமாந்தர்
சரலியே யானவரே மலையேகல்லே
தானாகி உடைகல்லாய்ச் சரளியானீர். 358

ஆனீரே நம்முயிருந் தானிருக்க
ஆக்கைதனை யேபிழக்க ஒத்திநந்தீர்
போனீரே நம்குலங்கள் நூறுக்குள்ளே
போனதினால் யானழுதேன் புரையோன்போல
நானீரே யெல்லாருஞ் சமமாய்த்தானே
நாடிருக்க லாகாதா யென்ன செய்வேன்
ஊனீரே உங்களின்மேற் குற்றமில்லை
உதயத்தில் நான்பிறந்த வாய்த்தோசத்தே. 359

தோசமென்ன வென்றாலோ நிலமாம்பூமி
　　தொக்குசடம் பெண்மானம் பூமிதன்னில்
வாசமென்ன தந்தையவ னுழுதகோசம்
　　மலடியே யாகாமல் விளையாகாமல்
நாசமெனப் போகாம லந்தப்பூமி
　　நரைபயிரே யாகாமல் விளைவேமுத்தி
சீஷனென்ன பிள்ளையென்ன மூலபூமி
　　சிறிதல்ல வெள்ளாண்மைக் களத்தில்வந்தே. 360

வந்தோம்நா மைந்துக்குள் பட்டபாடு
　　மலடிபிள்ளை பேராக மறந்துநாமன்
தந்தோம்நாம் பின்வளர்ந்து யேறிமீறி
　　தான்செய்த வெள்ளாண்மை யதுபோற்தானே
பிந்தோம்நா மென்றுசொல்லி முந்தித்தானே
　　பேர்பட்டந் தப்புமென்று விரைவிரைத்தோம்
அந்தோவந் தோர்முன்னே அஞ்சிநாமள்
　　ஆதரிக்க யெண்ணிவர்போற் கெஞ்சினோமே. 361

கெஞ்சினோ மனையாட்கு மக்களுக்கும்
　　கிருகிருக்க வேயலைந்து பாடுபட்டு
கஞ்சிகூழ் நாமுண்டு வளர்க்கயெண்ணி
　　கவலையது விட்டொழியச் சாங்காலந்தான்
மிஞ்சினோ மென்றாக்கால் துஞ்சொட்டாது
　　மேனியது வேவேலை காணிநானே
பஞ்சநோய் தீப்படவே மேருபஞ்சில்
　　பருப்பழவு நெருப்பிட்ட கதைபோலாமே. 362

ஆமிந்த வேற்றரசன் வந்தாற்போலும்
　　அவ்வரசன் குடியோடிப் போனாற்போலும்
ஓமிந்தச் சூரியனாம் ஞானசூரியன்
　　ஊடுருவப் பார்த்தாக்காற் சொல்லேவின்னும்
நாமிந்தக் கணக்கறிந்து பார்க்கவேணும்
　　நவிலுமொழி வெகுபதமே ஞானசூரியன்
தாமிந்தப் படியறிந்தால் ஞானசூரியன்
　　தான்சொல்லும் பச்சணத்தி லிச்சைவையே. 363

இச்சைவைப்பா யிதன்பெயரே ஞானசூரியன்
இதுகடக்க யெதுவென்றாற் றுன்பமாய்கை
லச்சைகெட முன்னோர்கள் பெரியோர் சூரியன்
ஞானமெது போதமது நவிலுஞ்சாயற்
பச்சையென்ன, காய்ந்துவிடு மயக்கப்பாசம்
பந்தயங்க ளிட்டாப்போல் வெற்றிசொல்லும்
கச்சையென்ன விருதுகட்டி நின்றாப்போலே
காயசித்தி காயசுத்தி காயமத்தியாமே. 364

காயமத்தி மூலவரை பசியாம்தீத்தி
கனலெழும்பும் யிரையன்றி உயிருதானே
ஆயுமத்தீ யுடலிருந்த நீரைத்தானே
ஆகாரஞ் செய்துவிடும் காய்ந்துதீயும்
மாயமுத்தி யிதுவென்றார் மாயாமுத்தி
மரணமதைக் கண்டறிவோர் முன்னாற்தானே
ஓயுமுத்தி பேச்சடங்கி விழிபிதுங்கி
உணர்வுகொள்ளும் நாவெழாமற்
கிடந்தார்கண்டே. 365

கண்டுநாம் மனமரண்டு உடல்மிரண்டு
கலைநிலையைத் தேடாமல் தனைமறந்து
உண்டுநா மாக்கைதனைப் போக்கத்தானே
ஒத்திருந்த வாறேது மரணம்பொய்யோ
யிண்டுநாம் சொன்னாக்காற் சரியேசொல்வார்
மெய்யறிந்தோர் தங்களுடன் பொய்யருந்தான்
மண்டுநாம் போலிருந்தாற் சித்தர்நோக்கி
மனிதனல்ல மானிடமே யெனச்சொல்வாரே.
366

சொல்வாரென் றெனைப்பழிக்கார் குருவாம்வாலை
சொல்லெல்லாம் பிச்செறிவார் முனிவர்கூட்டம்
வெல்வாரே சாஸ்திரத்தை முனிந்துதானே
மெய்யறியார் வாலைமேற் குற்றம்சொல்வார்
நைவாரே சித்தரெல்லா முனிகளோடு
நயந்தடிமை யாகார்கள் போவென்பார்கள்
கைவாரே பழசோடு புதிதில்லாட்டால்
கல்மனமும் புண்ணாகிக் கனிந்துநோவார். 367

நோவார்கள் நோவதனைக் கண்டவாலை
நோக்காட்டாற் போடியென்றும் வாடியென்பார்
காவார்க ளில்லாட்டால் வாலையேது
கனமனித ரில்லாட்டாற் சோயிலேது
சாவாராக ளில்லாட்டா லேமனேது
தண்ணீர்க ளில்லாட்டாற் தாகமேது
தாவார்க ளில்லாட்டால் மோகமேது
சந்ததிக ளில்லாட்டாற் பிரமனேதே. 368

ஏதேது வானமதில் மேகநீரை
யெய்யாட்டா லென்ன உண்டு வெளியேமிச்சம்
ஆகாது சந்திரனுஞ் சூரியன்றான்
அதுகுடிக்க நீரில்லை அழகுமில்லை
ஏகாது மேகமதாற் சந்திரன்றான்
எப்போதுங் குளிர்ச்சியுண்டு சூடோயில்லை
வாகாது மேகினால் மேகந்தானே
வல்லபமே சூரியனார் வெயில்கொல்லுந்தான். 369

கொல்லுமே வெளிதானு மேகமன்றி
கூடுவெளி நிறைந்திருக்குஞ் சூடதாலே
நில்லுமே மேகமது தெய்வமே தான்
நீள்விசும்பு யிந்திரியம் மேகநீரே
மல்லுமே வெளிமேகம் மண்வாயுத்தீ
மறைநான்கு மிதற்குள்ளே பிரமம்வேறோ
சொல்லுமே யிதையன்றி வேறிருந்தால்
துயரற்ற புசுண்டரென வசிஷ்டர்கேட்டார். 370

துயரற்ற ததனாலே முக்காலத்தை
தூண்டிவிக்கு மதனாலே நீருமானீர்
கயரற்ற மனிதர்போல் நீரேகேட்டால்
களர்வதென்ன யானுமக்குக் களருவோங்கேன்
மயலற்ற ததனாலே யென்னைக்கேட்டீர்
மயலுற்ற அருந்ததியால் கேட்கவானீர்
முயலுற்றேன் பிரமபதம் அனந்தங்கண்டேன்
மொய்குழலை விட்டதனாற் கூடிருந்தேன். 371

கூடிருந்தேன் கூடுடைக்க வருகுதில்லை
கோழையற்ற ததனாலே தடையுமில்லை
வீடிருந்தேன் மேருகிரிக் கூடேயாக
மேடையதில் நானிருந்தும் விட்டதில்லை
நாடிருந்தேன் மேர்பிருந்தேன் கிரியிருந்தேன்
நமதுமட மாச்சிரம மென்றிருந்தேன்
பாடறிந்து பட்டபலன் யென்கண்முன்னால்
பாதாளம் அண்டதிக்குங் கையிலாச்சே. 372

## ஞானம்

ஆச்சப்பா கையிலரை ரேகையைப்போல்
அண்டமொடு மேற்திக்குங் கீழ்திக்குந்தான்
மூச்சப்பா முனைநாசி வாசல்ரெண்டில்
மூக்கோடும் வாசியது கீழேபாய்ந்த
வீச்சப்பா மூக்கின்வழி வெளியேபாய்ந்து
மேலெழுந்த அங்குலந்தான் பனிரெண்டாகும்
போச்சப்பா பாய்ப்போயே வாசிலாபம்
பொங்கியது நாசிவழி போயினாரே. 373

போனதே திரும்புகிற வழக்கம்பாரு
போகாதே போனாக்கால் மூக்கடைப்பு
ஆனதே யல்லாமல் யோகமாமோ
அறுத்தடைத்த வாசல்கண்டாற் திறக்கலாகும்
ஊனிதே காயமதிற் தமராம்வாசல்
உச்சிவழி புருவமத்தி வாசற்பூட்டை
ஏனதே யப்பூட்டைத் திறக்குமார்க்கம்
எங்களுக்கு நீர்கண்ட தியம்புவீரே. 374

இயம்புவேன் மூக்கில்வளர்ந் தோடும்வாசி
இடதுபுரம் வலதுபுரம் நடுவாம்பாகம்
தயம்புமதை உட்கார்ந்து சம்மணமேயிட்டு
தலைகழுத்து உடல்நிமிர்ந்து புருவமத்தி
நோக்கமதில் வைத்திருந்து நிமையில்மத்தி
நுண்ணறிவாற் பார்த்திருநீ அசைவுகாணும்
தூக்குவதி லுன்மனதைச் செலுத்திப்பாரு
துன்பமற அவ்விடத்தி லிருந்துபாரே. 375

பாரப்பா அவ்விடத்தே அறிவாய்ஸ்தானம்
பார்த்திருந்து பழகிவரக் காலைமாலை
சீரப்பா நாழிகையாம் முகூர்த்தம்ஒன்றே
தினந்தினந்தான் பார்த்துவர மறந்திடாதே
ஏரப்பா உழுதாலோ கருதுகாணும்
யிம்மனதைத் திருப்பியிடு புருவமத்தி
நீரப்பா அவ்வாசல் திறக்கும்பாரு
நீலமணி வயிரமொடு வெள்ளைபச்சை. 376

மச்சைகோ மேதகமும் புஷ்பராகம்
படிகம்போல் மாதளம்பூ சிகப்புவர்ணம்
பச்சையே யவ்வாசல் திறந்தபோது
வாய்க்குமிந்த ஒழிவெல்லாங் காந்திமீறும்
இச்சையே கொள்ளுமிந்த மனமோடாமல்
இமைமத்தி கண்டவுடன் நேரேயேறு
கச்சையே கட்டினாப்போல் விடாதேபாரு
கலைவாசி சீவனுயிர் மூச்சேறுந்தான். 377

ஏறுமல்லோ நாசிவழி யோடுமூச்சு
ஏறுமந்தப் புருவமத்தி வாசலேறும்
பாருமே யங்கிருந்து மேலேயேறப்
பழகினால் மேலேறும் நாசிவாரரா
நீறுமே வாசல்வழி தடைகளெல்லாம்
நீங்கிடுமே புருவமதற் குள்ளேயேறும்
காருமே மூக்குமுனை புருவமத்தி
கால்வாசி மேலேற யோகசித்தே. 378

யோகமுற்ற யோகசித்தி யோகமார்க்கம்
யோகமுறை யோகவழி யோகதீச்சை
தாகமுறை நாமுறையே கூரீரையே
தானறியச் சொல்லிடுவீர் சாந்திசாந்தி
ஊகமுறை யோகமிது வாசல்பூட்டு
உட்புகுந்து மனதுயிரை யூடுவாசல்
ஆகவுரை நீட்டிமுனை வாசல்கூட்டு
அய்யய்யா தீயவொளி யருட்செஞ்சோதி. 379

சோதியே பெருஞ்சோதி சொல்லொண்ணாது
சுழிவாசல் தான்சிறந்தோர் காண்பார்பூண்பார்
ஆதியோ யிவ்வாசல் நுழையக்காணார்
ஆர்காண்பார் மெஞ்ஞானம் அரிதுசத்தே
வீதியோ மேல்வாசல் கெதியாம்வாசல்
மெஞ்ஞான வீடதனிற் குள்ளேசென்றால்
தீதியோ துன்பமில்லை கண்ணாம்வீட்டில்
செந்தனலைக் கண்டிடலாம் தெருவிற்தானே. 380

தெருவென்ப தெதுவென்றாற் பத்தாம்வாசல்
சிறுவாசற் புருவநடு அறிவின்வாசல்
குருவென்றா லவ்வாசற் திருவாம்வாசல்
கொடுங்கோபந் தானகற்றும் சமாதிவாசல்
கருவென்றால் நினைவிநக்கு மூத்திவாசல்
கணக்கறிந்து யேற்வீரோ ஞானவீடு
இருவென்றால் வாராதே யிருந்துபார்ப்பீர்
யித்தனைக்குங் காரணமே நெத்திவாசல். 381

நெத்தியுட மத்தியிலே மூக்குமேலே
நீள்புருவத் தடியின்கீழ் புருவமத்தி
தத்தியே வுள்மேடை யுள்ளோர்வாசல்
தான்திறவே ஊசிமுனை வாசல்தானே
சித்திதா னிருக்குமந்தச் சிவமாம்வாசல்
திறைவாசல் செயவாசல் தெய்வவாசல்
கத்தியே பாராதே சும்மாபாரு
கதவையே திறந்துவிடு மறலிபாரே. 382

பாருமே மாலுடனே பிரமனோடு
பகர்தெய்வம் யாவையுமே திறந்துகாட்டும்
வாருமே அவ்வாசல் வழிநீர்தானே
வந்தாக்கால் பேசிடுவோம் வாருமென்போம்
நீருமே அவ்வாசல் வராவிட்டாலே
நீரென்னைத் தேடாதீர் சும்மாநீரே
சேருமே யாவர்களும் வாழும்வாசல்
சிறுவாசல் பாழ்வாசல் செந்திவாசல். 383

வாசலது வந்தாக்கால் சித்தரெல்லாம்
வாருவாரு மென்றழைத்து மகிமைசொல்வார்
யேசலது செய்யாதே வாயாடாதே
யிருந்தஇடந் தானிருந்து தூங்கிடாதே
பேசலது சொல்லறிந்து பேசிடாதே
பின்னுமுன்னும் பார்த்தேறு உச்சிபாரு
ஊசலது பார்த்தாரு மென்னைக்காண்பார் 384
ஓகோகோ நீயேறு சென்னிமீதே.

சென்னியே தலையுச்சி கபாலந்தானே
சிக்கருக்க லாகாதோ சித்தராலே
உன்னியே பார்த்தவற்குத் தலைமேல்வாசல்
ஊ ஆஏஓ வென்றே யுற்றுப்பாரு
இன்னியே ஐயெனவே யிருத்திப்பார்த்தால்
எறிமூட்டி நிற்குமந்தப் புருவமத்தி
கன்னியே சடங்காணாப் போலத்தானே 385
காலைவிடு புருவமத்தி சடங்கானாலே.

சடங்கான பெண்திரளும் வாரேபோல
தாய்சிசுவின் யோகமுறை சடங்குதானே
மடங்காணும் பண்டாரம் அபிஷேகங்கள்
வாயாலே பூசையல்லோ உயிரைக்காணார்
இடங்காணு நம்மனதும் உயிருந்தோணும்
யிவ்வுடலில் நோயெல்லாந் தோன்றிநாணும்
புடங்காணு நம்முடலே புருவவாசல்
பூட்டதனைத் திறந்தாக்கால் ஞானந்தானே. 386

ஞானந்தான் நமையறிதல் மற்றோர்காணல்
நம்பினவர்க் குபதேசம் நவிலல்தோணல்
ஈனந்தா னக்கதவு திறவாதோரே
இயம்புவது பேரழுகை துன்பந்தானே
வீணன்தன் சுகங்காணாத் துன்பஞ்சொன்னான்
மெய்யறிவாய்ச் சொல்லறிவாய் மெய்
ஞானத்தால்
மோனந்தா னுடலுயிரை உச்சியேற்றி 387
உடற்பகுதி கண்டவனே யூகவானே.

## யோகிக ளிருக்கவேண்டிய விபரம்

பூகவான் சரிகையோடு கிரிகைகண்டு
உறமென்ற யோகமொடு ஞானப்பூட்டை
தேகமொடு தானிருந்து ஒளியைக்கண்டு
தெய்வசித்தி யதின்மேலே ஞானசூரியன்
மோகமது விட்டொழிந்து ஞானவீட்டில்
மொய்ந்திருந்த கபாலஅரை சித்திவீட்டில்
பாகமொடு நீயறிந்து யிருந்துவாழ்ந்து
பார்த்தவர்க்கு மனிதனைப்போல் வாழுவாயே
388

வாழுவாய் தேறிவிடில் தேறாவிட்டால்
மடமங்கை யாகிடுவாய் சித்தர்க்குள்ளே
கோழுவாய் நீவாழச் சொன்னோமப்பா
குருவென்று சொல்லாதீர் தேறுமட்டும்
மாழுவோ மென்றுசொல்வீர் தெய்வஞ்சாரீர்
வாயறைந்தால் மூத்தியென்ற தெய்வந்தானே
கேழுவோய் முத்தியென்ன செத்தபின்னோ
கிருக்கர்சொல்வார் செத்ததுபோல் சொல்லு
வாரே. 389

சொல்லுவார் சாஸ்திரத்திற் செத்தபின்னே
சோம்பேறி முத்தியென்ன சத்திற்கூடா
விள்ளுவார் தெய்வபதம் முத்தியென்று
மென்மேலும் செத்தபின்னே சொர்க்கமென்பார்
தள்ளுவார் சடலத்தை நாற்றமென்றே
தன்னுயிரின் சத்துருவே தோசியோர்கள்
கொளளுவார் உடலுள்ளே முத்திதானே
குமரிவினை யாடுவது குருவினாலே. 390

குருவென்ன ஞானமொழி ஞானதீட்சை
கொண்டதினால் ஞானகுரு சாயுச்யந்தான்
திருவென்ன குருமொழிக்கு ளிருக்குதப்பா
தீயொளிபோல் ஞானவொளி காணுமென்றார்
கருவென்ன பெரியோரி னுள்ளேதெய்வம்
காணலையோ செத்தபின்போ பெரியோரானார்
உருவென்ன சாதனையாற் பெரியோர்சொல்லால்
ஓர்மொழியே யமைந்திருக்கும் பெற்றார்
பின்னே. 391

பின்னேது உடலறிவும் யிறந்தபின்னே
பெற்றபலன் சடம்விட்டுச் சடமெடுத்தோ
என்னேது யிப்படியே உலகோர்கூடி
யியம்பினரே வியாசர்சொன்ன கதையேபோல
மின்னேது செத்தபின்பு ஒளிகாண்பதேது
வேடிக்கைப் பொய்ப்பகட்டே வினாய்நைந்தார்
கண்ணேது பார்ப்பதற்குக் கருத்தங்கேது
கவலையிட்ட மானிடர்சொல் முத்திகாட்டார். 392

முத்தியென்ன தெய்வமதைக் காணல்கூடல்
மோகித்துக் கூடியுற வாடித்தானே
சித்தியென்ன பொருளிருந்த தெய்வலாபம்
தெய்வத்தின் பொருளல்லோ சித்தியப்பா
சத்தியென்ன யிவ்வாடல் பொருள்களெல்லாம்
தானீய வாங்கியவர் முனிவரானார்
கத்தியென்ன காணார்கள் அருளுங்காணார்
கைப்பிடியாய்ப் பிடித்தாரே சித்தர் தானே. 393

சித்தர்முத்தர் முனிவரொடு தவசியோர்கள்
செய்தனரே சரியையொடு கிரிகையரெண்டும்
முத்தர்தான் பெற்றபலன் குருவேயானார்
மொய்முனியுஞ் சினேகிதரே தேவருக்கே
சித்தர்தான் கூடிருக்கு மளவேதெய்வச்
செயலறிவார் கிட்டிருந்து பாடுவார்கள்
எத்தர்தான் தெரியாமற் செத்தபின்னோ
யெமனுலகஞ் சென்றபின்பு முத்தியென்றார். 394

என்றவர்கள் சொல்லெல்லா மிதற்கொவ்வாது
யித்தனையும் பார்த்தவர்கள் சொர்க்கமென்றார்
குன்றார்கள் சரியையொடு கிரிகைரெண்டும்
கொட்டினரே யோகமொடு ஞானம்நாலும்
நின்றார்கள் கண்டுகொண்ட சித்திஐந்தும்
நேராகக் கண்டறிந்தோ ரிதுபோற்சொல்வார்
வென்றார்கள் ஐந்துடனே திதியாம்சிருஷ்டி
மெய்சிலிர்க்குஞ் சம்மார மெட்டென்றாரே, 395

எட்டென்றாற் தூரதிஷ்டி செவிதான் தூரம்
யிருதயத்தின் வர்த்தமானம் மனதோடுங்கெவுனம்
விட்டென்றார் பனிரெண்டு சித்திதானோ
மேலேதா னுடகெவுனம் சரீரங்கண்ணு
நெட்டேதான் நடந்தாலும் பதம்படாமல்
நீள்விசம்பில் நடப்பவர்போற் பதினைந்தாகும்
தட்டேதான் சாயானுக் கிரகம்ரெண்டு
தானிந்தப் பதினேழுந் தெய்வக்கூறே. 396

கூறென்ன நரைமாறல் காயசித்தி
கோடியுக மிருப்பதென்றாற் பிரமசித்தி
பாரென்ன பத்தோடு ஒன்பதாகும்
பகருகிறேன் பசிநீங்கில் ரெண்டுபத்து
வீரென்ன தானிருக்கும் பெலமாய்யானை
மெய்வலுவுந் தொட்டதெல்லாஞ் சித்தியென்ன
ஆரென்ன சொல்லுவரோ யிருபதேமேல்
அறைந்தரெண்டுந் தெய்வபெலன் கண்டிடீரே. 397

கண்டாரே யிப்பொருளைக் கொண்டுவந்தார்
காணுவது செத்தபின்போ யிருந்தபோதோ
தொண்டாரே தெய்வவாசல் காணாப்பேரே
தொடைதட்டி யேநடக்கும் வஷ்துமாரே
உண்டாரைக் காணாமற் சொன்னதாரு
உளம்புவீர் உளமறியாத் தோசிநீரே
விண்டோரைப் பாராம லுரைத்ததாரே
விளக்கமா றோஉனக்குச் சாஸ்திரந்தான். 398

சாஸ்திரங்கள் சொன்னாலே தவமேசெய்து
சாஸ்திரத்தை ஆதியந்த முற்றுமாய்ந்து
வாஸ்திரங்கள் விட்டுவிட்டுக் குருவாசாரம்
மகிமைமெத்த உண்டாகிச் சித்தனாகி
சூத்திரங்கள் தான்மறந்து முத்தனாகி
குருவென்ற பேராகி முனியுமாகி
பேஷ்திரமாஞ் சொல்லெல்லாஞ் சித்தியாகி
பெரும்பேற்றைப் பெற்றபின்பு உடலிருந்தே. 399

உடலிருந்து யிதுகண்டு தெய்வங்கண்டு
உள்மனதைக்கட்டினவர் முத்தியென்றார்
கடமிறந்து கண்டவர்கள் பெற்றலாபம்
தானென்ன சொல்வதினித் தெரியாமுட்டாள்
குடமுடைந்தால் நீருண்டோ உடல்கவிழ்ந்தால்
கொண்டமுத்தி யெங்கிருக்கும் உயிர்
போனாக்கால்
திடமுடனே சொல்லிவிட்டார் பெரியோராகார்
செப்பவில்லை சித்தர்முத்தர் முனிவர்தானே. 400

முனிவர்பத மோபெரிது முத்திதன்னில்
முமுச்சுக றானாலு முத்தர்தானே
கனிபதமே யிவர்சொல்வார் முழுதுங்கண்டார்
காலரைக்கால் பெறமாட்டார் முத்தியென்றார்
தனிப்பதமே பெற்றாகால் யெல்லாஞ்சொல்லும்
தாரித்திரஞ் சிறுமுத்தி சிறிதல்லோதான்
இனியென்ன தெய்வத்துக் கிதுதான்வீட்டி
லிருப்பதுவே கண்டவர்க ளிச்சையற்றோர். 401

இச்சையென்ன யிதுமேலேயிருப்பதுண்டோ
எங்கிருக்கு மிச்சைவந்து யெனக்குள்ளேசொல்
அச்சையென்ன யிதுரூபம் பொருள்களெல்லாம்
அமைந்திருக்கும் பூதஉட லண்டந்தானே
மிச்சமென்ன அண்டமதில் மலைமண்வாரி
மேல்வெளிக்கு ளிருந்ததுவும் கீழேவிள்ளும்
சொச்சமென்ன யிதிலடங்கு மெல்லாந்தானும்
தொன்றுதொட்டு வந்தவகை விபரந்தானே. 402

விபரமாய்ச் சொல்லிவைத்தே னிந்தநூலில்
மேற்பாகஞ் சொல்லிவைத்தே னிரண்டாம்பாகம்
அபரமே யித்தனையும் ஞானசூரியன்
ஆகரெண் டாயிரத்தின் சொச்சமாகும்
உபரமாங் காண்டங்கள் வேணதெல்லாம்
ஒன்றுபோற் பாடினதை ஒன்றேசொன்னார்
இபரமே யிதுதானுஞ் சொன்னதைத்தான்
யின்னூலே சொல்லாது அன்னூல்
சொல்லிடுமே. 403

அன்னூலு மின்னூலுஞ் சரியாய்ப்பாரு
அதிலில்லா தத்தனையு மின்னூல்சொல்லும்
என்னூலும் பார்த்திருந்தா லின்னூல்விள்ளும்
யாவர்களும் பார்க்கரிது ஆராய்ந்தோர்க்கு
முன்னூலும் பின்னூலும் யின்னூலோடு
முறைமுற்றும ஆய்ந்தறிவோர் தெளிவுகாணும்
பின்னூலைப் பார்த்தறிந்தால் முன்னூல்சொனன
பெருவுரையைக் காணபதற்கு யென்னூல்தானே. 404

என்னூலி லண்டம்விள்ளுந் திக்குவிள்ளும்
இதுமேலே கருப்பண்டம் மேலேசொல்லும்
சொன்னாலே மத்திநின்ற மேகஞ்சொல்லும்
தொடர்வாய்வு மதியுடுக்கள் மலைமண்வாரி
இன்னூலே யிதன்கீழே வெளியுந்திக்கும்
இதனடியிற் கண்டஅண்ட திசைகள்யாவும்
வன்னூல்போ லேயிருக்கு மெந்தநூலுக்கும்
வசனிக்க யெட்டாது கருத்துக்கெய்தும். 405

எய்துமோ பலநூலும் பாராதார்க்கு
ஏறுமோ தீட்சைவிதி யெல்லோருக்கும்
வைதுமோ நேராது விவேகியோர்க்கு
வாயாதோ சுத்தமன மௌனியோர்க்கு
நைதுமோ தாராது மேலுள்ளோர்க்கு
ஞாதாவின் பொற்குருதாள் நம்பவாய்க்கும்
பெய்துமோ போகாது பொரியுள்ளோர்க்கு
பேரின்ப மோர்பெரிதோ பெரியோர்தானே. 406

பெரியோர்தா னிப்படியே பெலத்தார்வீரர்
பெய்தமழை குளிர்ந்தாப்போல் குளிர்ந்தார்ஞானம்
உரியோர்தான் மனங்குளிர ஒளியேவீச
ஊடுருவி மேலேறி யொளியைத்தாண்டி
சிறியோரே யதின்மேலே நீரைத்தாண்டி
சிலம்பொலியுந் தாண்டியதின் மேலேபாரு
அறியோரே அச்சரத்தைப் பார்த்தபின்னே
அதன்மேலே பாடுகவி வரிசைபாரே. 407

பாரப்பா அருட்கவியே பெலமாம்பாசை
பாடுதலுந் தாளமொடு ஆடல்காணும்
நீரப்பா வேரிருந்து சீருபாரு
நீண்டமனம் யேகாமல் ஓடிடாமல்
காரப்பா ஒளிகண்ட யிடத்தைக்காரு
கார்க்கியனும் வந்திடுவான் ஞானசூரியன்
பேரப்பா சொல்லிடுவா ரிடங்கள்சொல்வார்
பேர்பெற்ற சித்தர்களும் அடங்குவாரே. 408

அடங்குவார் உச்சியிலே அமர்வார்வந்து
அவர்பட்ட பாடதனைச் சொல்லிப்போவார்
முடங்குவார் பிரசோப துன்பம்போல
முனிகூட்டம் வந்திடுவார் உதவிசெய்ய
கடங்கள்பார் சாவனுட துன்பங்போல
காணுமடா ஒளிகண்டாற் துன்பந்தீரும்
இடங்கண்டால் யெல்லோருந் தானாகவந்து
யென்குழந்தை யென்றுசொல்லித் துணை
செய்வாரே. 409

செய்வார்கள் முத்தர்களுந் தானேவந்து
சிறுபிள்ளை படுந்துன்ப மாற்றுவார்கள்
தெய்வார்கள் கண்டுகொண்டு க்ஷணத்தில்வந்து
தேறுதலை சொல்லிடுவார் சந்தோஷங்கள்
நைய்வார்க ளெப்படியோ அதுபோற்தானே
நமக்காகச் சித்தர்களு முன்னேநிற்பார்
கொய்வார்கள் கர்மமென்ற பாவம்போக்கும்
குருவென்றா லவர்குருவே திருவேதானே. 410

திருவென்ன குருவுதவி யிதுதானய்யா
தீண்டாது விட்டுவிட்டாற் பாவிநீதான்
பொருமவென்று சொல்வாரே மற்றோர்தானும்
போயொழியார் வல்லவரும் வருவார்தானே
கருவென்ன விந்துவிடக் காணலாகும்
காமப்பால் நாமெடுத்த சனனநேரம்
உருவென்றா லுடலல்ல சித்தனாகும்
ஊரண்ட சித்தர்களும் கண்டுகொள்வார். 411

கண்டுகொள்வார் ஒளிதெரிந்த சீஷன்றன்னை
கண்ணால ஞானக்கண் கொண்டுதானே
விண்டுசொல்லார் அங்கிருந்து கெவுனம்பாய்வார்
மெய்சிலிர்த்து நின்றதொரு சீஷன்முன்னே
கண்டுகொள்ள வந்தனென்றே சொல்லிநிற்பார்
கதவடைத்து யிருட்டறையி லிருந்தாலுந்தான்
கொண்டுவந்து காதிலுறை யுபதேசங்கள்
கொண்டமட்டும் ஊட்டுவிப்பார் கோடிதானே. 412

ஊட்டுவிப்பார் கோடியென்றாற் கோடியல்ல
உத்தமனே யானாக்காற் சரணஞ்செய்வார்
தீட்டுவிப்பா ரதிசயங்கள் மெத்தஉண்டு
செகசாலக் கூத்தெல்லா மெத்தவுண்டு
ஆட்டுவிப்பார் நடனங்க ளாடிடாதே
அம்மம்மா வென்றேநீ பாடிடாதே
நாட்டிவிப்பார் அசையாதே நில்லுநில்லு
நம்முடலை மறவாதே நினைவில்நில்லே. 413

நில்லேதான் நினைவிலே நிற்கும்நிற்கும்
நீள்மதியும் வட்டமிட்டு ஆடுமாடும்
புல்லேநீ திரியாதே திறமாய்நில்லு
புத்திகளு மெத்தவுண்டு சித்தர்சொல்லு
வல்லேநீ யென்றாலும் விடமாட்டார்கள்
வாய்மதங்கள் பேசாதே வாயும்நீளும்
அல்லேபோ லிருக்காதே சோதிபோலே
ஆசைமெத்தக் காணுமடா அப்புஉப்பே. 414

அப்புஉப்பு யெங்கிருந்த ருசியாம்உள்ளே
அப்படியே நீர்கசியும் வாருபோல
துப்புஅப்பு நீரெல்லாந் துப்புவாய்நீ
சுகசோதி வரும்போது தூங்குவாயோ
இப்புகைப்பு பச்சைநீ ரிறங்கும்மண்டை
யிருந்தநீ ரெல்லாமும் வாயாற்றானே
செப்புமொழி நாவழியே கொட்டும்நீரே
தினந்தினமா வோர்நாளிற் கொட்டுந்தானே. 415

கொட்டுமடா பச்சைநீர் வலிக்கும்பல்லு
குமட்டுமடா வயற்வலிக்கும் மயங்கிடாதே
தட்டுமடா வாந்தியொடு உச்சிமுட்டி
தாஸ்பிறழும் உடலிருந்த நீர்களெல்லாம்
வெட்டுமடா வெளியேற முட்டித்தானே
மேலேற மாட்டாமல் உடல்வலிக்கும்
முட்டுமடா வாய்வழியே பிரண்டுருண்டு
மோகபங்கை கெற்பமதிற் பிள்ளைபோலே. 416

கெற்பத்தாற் பிரசவித்த மங்கைபட்ட
கெற்பமங்கை யெல்லோரும் பட்டபாடே
அற்பத்தால் யின்னீரால் பிராணதுன்பம்
ஆதலினால் நீரொழிய ஒளியும்வீசும்
நற்பத்தால் நீரொழிந்தார் சித்தர்தானும்
நாகமே நீக்கிவிட்டுச் சித்தர்கூடி
உற்பவித்தார் ஒளியுடனே தானும்வந்து
ஓங்கினதை யென்னசொல்வேன் சமயந்தானே 417

தோணுமே கூடிவிளை யாடலாகும்
தூங்குதற்கு நேரமில்லை துணையுமுண்டு
பேணுவது நாமல்ல தானேபேணும்
பெருப்பேரு வந்ததினாற் பின்னாற்தானே
காணுவது வருத்தமல்ல ஓர்நாள்தானும்
கண்டுகொண்ட நேரமது யிதுபோலப்பா
நாணுவது நமக்கென்ன அருளேவந்து
நடிக்குமல்லோ நொடிப்புகண்டு மெச்சினோமே. 418

மெச்சினோம் ஆண்டிரண்டு சொல்லிவந்தாள்
மேன்மையருள் வாலையவள் வித்தைசொன்னாள்
கச்சிநோய் தானகற்றி மலத்தைப் போக்கி
கனஉடலை லேசாக்கிப் பிலத்துவாசி
உச்சிநீர் நீர்மலமும் லேசாய்த்தள்ளி
உண்டஅன்ன மலக்கசட்டைப் போக்குவித்தாள்
மச்சிமா நங்கையவள் நரகப்போக்கி
மாவுடலை வளர்த்தெடுத்தாள் மெச்சிக்
கொண்டாள். 419

கொண்டவளுந் தன் கருத்தின் படியே செய்தாள்
குடிகேடி கூச்சலிட்டாள் பாலுமீய்ந்தாள்
கண்டவளு மெந்தனுக்கோர் சேதிசொன்னாள்
கதவுதனைத் திறந்துவிடு வந்தேனென்றாள்
உண்டவளு மேல்வாசல் திறக்காவிட்டால்
ஊடுருவி வெளியில்வரா ளெல்லைதாண்டி
திண்டவளும் வெகுமுறடி உச்சிவீட்டில்
திருநடனம் வட்டமிட்டு ஆடினாளே. 420

ஆடினதோர் கணக்கறிந்து நானும்பாடி
அவளோடு நான்கூடிக் கெலித்துநின்றேன்
பாடினதை யறிந்தவளு மாடினாள்பார்
பக்குவமென் றென்னைக்கை தூக்கிவிட்டாள்
கூடினாள் நான்சேர மாட்டேனென்றேன்
குமரிவேச மாறியவள் கிழவியானாள்
ஓடினே னென்னைவிட மாட்டேனென்றாள்
உத்தமிக்கு நான்தேவை நில்லென்றாளே. 421

என்றாலே என்தாயும் யெமதுரூபி
என்கருத்தி லிருந்தவளும் வெளியே வந்தாள்!
அன்றாளே யின்றிருந்தாள் பழமாதேவி
ஆருக்கு மடங்காம லேயிருப்பாள்
குன்றாளே யென்றிருந்தும் வயதேமிஞ்சி
குமரிபோ லேயிருப்பாள் கொடுங்கோபத்தாய்
நன்றாளே யாகிடுவாள் சேர்ந்தோருக்கு
நாவினாற் பாடிடுவாள் கேட்டதெல்லாமே. 422

கேட்டதெல்லாம் பாடியவள் நாவாற்றானே
கிருபைவர மீவாளே சித்தரூபி
தேட்டதெல்லாந் தந்திடுவா ளிருந்ததெல்லாம்
க்ஷணத்திலே முத்தியது கைகண்டாப்போல்
ஆட்டதனை நாவாலும் நடிப்பதாலும்
அங்கைகொண்டு சொல்லாலும் விழியினாலும்
பூட்டதனைத் திறந்திடுவாள் வாசியாலும்
பூரிக்கச் செய்திடுவாள் ஆகாதுண்டோ. 423

ஆகாதா உண்டவர்கள் கண்டபேர்கள்
அடைக்கலமாய்ச் சேர்ந்தவர்கள் யோகப்பேர்கள்
தாகாதா நமதண்டை நம்மள் சார்பில்
தக்கதெது கொள்வதெது தகாததேது
போகாதா நீர்வந்தா லெம்மைச் சேர்ந்தால்
புதுக்கருவி நில்லாதா பொய்போகாதா
வேகாதா மருபிறவி தீய்ந்திடாதா
வெளிபோலே ஒளியதனிற் கூடினாலே. 424

கூடினா லெம்மைப்போல் நீருமாவீர்
குழந்தைகளே கண்டகனாப் பலித்தாப்போலே
தேடினா லாகாது கிட்டாயெட்டா
தீங்கிலா தெவருக்குந் தானேயப்பா
நாடினால் வெகுதூரம் சித்தர்சொல்லார்
ஈரம்நாடி யேயிருந்தாற் தானேவிள்வார்
ஓடியே போகாதே விட்டிடாதே
உள்ளவர்த்த மானமிதை உரைசெய்தேனே. 425

செய்தேனே இன்னூலைப் பதனம்பண்ணு
சித்தர்களும் வந்திருந்து கேட்பாரப்பா
வைவேனே நூல்கொடுத்தாற் தோசமாகும்
மக்களே சாபமிட்டார் சித்தர் முத்தர்
செய்வனே நான் சாபஞ் செப்பவில்லை
திருவருளை முற்றிலுமே காணாமட்டி
நொய்பனே சாபமிட்டான் குறையுமென்றே
நுண்ணறிவோர் தானஞ்சி ஒழித்திட்டாரே. 426

ஒழித்திட்டார் ஒளிகுறையு மென்று அஞ்சி
உத்தமர்கள் தானாகி முழுதுங்கண்டால்
கழித்திட்டுப் பேசுவர்கள் ஒளியையென்றார்
கவலையதிற் சொல்வார்கள் சீவருக்கே
அழித்திட்டார் நூற்சொல்லிக் கிழித்தாற்போல
அய்யய்யோ முனிவர்களு மப்படித்தான்
விழித்திட்டு முக்கண்ணைத் திறந்தோரானால்
மேலென்ன நூல்குறையாத் தொட்டார்யார்க்கே. 427

ஆருக்கு மஞ்சாமற் சொல்லி வைத்தேன்
அவதிவரு மற்றோர்கள் சொன்னாரானால்
பாருக்குட் சித்தர்களு முனிவராதி
பாரத்தை யிட்டிடுவான் நம்முன்னாலே
சீருக்குள் வாலையவள் தன்னைக்கட்டி
சிலம்பொலியை வித்துண்டேன் சொன்னேன் மெய்யாய்
நீருக்குள் சலந்தாண்டி ஒளியைத் தாண்டி
நின்றவளைத் தாண்ட அவள் கணவன் கண்டே. 428

கணவனொடு கணவியவள் அதற்குமேலே
கருவில்லா உடலில்லா வெளியைக் கண்டு
உணவில்லாத் தெய்வமதைக் கண்டதாலே
உடல்கண்ட சித்தர்களுக் கஞ்சிடேன்யான்
மணவனொடு கூடிவாழ் தெய்வம்மேலே
மறைசொன்ன தெய்வத்தைப் படைத்த தெய்வம்
வினையில்லா உருவாகும் வெளியாந்தெய்வம்
மேல்வெளியே நமமுடலே கலந்ததாலே. 429

கலந்ததால் வெளிநமக்கே சொல்லும்விள்ளும்
கர்த்தன்பகை யாகினனே சிறுவன்சித்தன்
உலர்ந்ததால் அப்புமண்ணும் நமக்குப்பேசும்
ஊடுருவி விளையாடுங் காற்றும்பேசும்
மலர்ந்ததால் மதியுடுக்கள் சூரியோரும்
மாதவசி பேசிடிலோ கனிந்துசொல்லும்
வளர்ந்ததால் பிரமபூத மைந்துந்தானே
வல்லவர்கள் பெற்றதினால் முனியானாரே. 430

முனியாகி முனிபதத்தின் மேலேதானே
மோகிப்பார் பிரமபதம் திதியாஞ்சிருஷ்டி
இனிவாகச் சம்மார மூன்றுங்கூடில்
இப்பதமே பிரமபதம் இதனின்மேலே
தொனியான பிரமஉடல் பஞ்சபூதம்
சொன்ன அப்பு உப்புடனே வாயுந்தீயும்
கனிவான வெளியுடனே அஞ்சுந்தானே
கலைவாசி யென்றமுனி சபித்தால் மாறும். 431

மாறுமே யிதுபோலே நடையில்லாமல்
மருவில்லா உடலதுவுங் கெவுனம்பாயும்
சீறுமே கண் தூர திஷ்டி தானே
செவிதூரங் கேட்டிடுமே க்ஷணத்திற்குள்ளே
வாறுமே அண்டபிண்ட வெளிகள் தோறும்
வாலையிட லேகிடுமே அண்ட பிண்டம்
தேறுமே சராசரங்கள் லெகுவேசெல்லும்
தெருவிலே மானிடர்கள் நடந்தாப்போலே. 432

நடந்தாற்போல் பறக்குமடா உடலின்சித்தி
நயனக்கண் சித்தியது யிதுபோற்பாயும்
குடந்தானே உருண்டதுபோல் வெளியிற்தானே
குருசித்தர் நடப்பதுவும் பாதைதானே
திடந்தானே கூடுவிட்டுக் கூடுபாய்தல்
சென்மாந்திரங் காணலைப்போல் நினைவைக்
காணல்
புடந்தானும் போட்டெடுத்த புந்தியாலே
பூமிமண்ணு மாந்தர்களின் நினைவுகாண்பார். 433

காண்பார்கள் விலங்குமரம் மலைபறவை
கனநீருக் குள்ளுயிரும் மனிதரோடு
பூண்பார்கள் ஊர்வனவும் தோற்றமேழில்
பொருந்துநடை சீவர்களில் நினைப்பையெல்லாம்
ஊண்போர்கள் காண்பதல்ல வாலைகண்டோர்
உச்சரிக்குஞ் சொல்லறியாற் யெப்பாசைக்கும்
எண்பாஷை கண்டுவிடுஞ் சித்திபாஷை
இதுபாஷை பரிபாஷை வாலைபாஷை. 434

பாசையென்றாற் பதினெட்டோ கனத்தபாசை
பரைவாலை கண்டவர்கள் பாசையென்ன
வீசையென்ன திரிகால வர்த்தமில்லா
வேதர்களே சாஸ்திரியே குருவானீரோ
பாசையென்ன திரிகால வர்த்தபாசை
பரமபதங் கண்டவர்கள் பேசும்பாசை
ஓசையென்ன சிருஷ்டிதிதி சம்மாரங்கள்
உற்பவித்த மந்திரங்கள் பாசையேதே. 435

பாசையென்ன சமஸ்கிருத வடமாம்பாசை
பரிச்சுழியைக் காட்டிடுமா மூத்தியிமா
ஆசையென்ன தமிழருத்தம் அதுவும்ரெண்டோ
ஆவுவும் வேறலவே வார்த்தைபேதம்
காசையென்ன கொடுத்திடுமோ காசுகேட்க
கையேந்தி நிற்கவைக்கு மந்தப்பாசை
ஓசையென்ன நீட்டிடுவீர் நாவின்சத்தம்
உச்சரித்த மந்திரமும் அரியேதானே. 436

## வேத விபரம்

அரியென்றால் அறியாமல் வார்த்தைசொன்னீர்
அச்சரத்தை வேறுவிதம் பிரித்தீர்கெட்டீர்
விரியென்ற வெளிபோலே வேதமென்றீர்
வேதமென்ற அரிச்சுவடி யுமக்குத்தானோ
பிரியென்ற கயற்றிரித்தாப் போலேநீளம்
பொய்யல்லோ வேதமென்றால் வார்த்தைதானே
சிரியென்ன நாங்களிடும் வார்த்தைபோல
தேர்வடத்தைப் போட்டவரே பேசக்காணீர். 437

## பூணூல் விபரம்

காணீரே யோகபூணூல் சொல்லிவாரேன்
கலையென்ற மூக்கின்வழி சுவாசந்தானே
பொனீரே மூக்கின்வழி பொர்த்தல்காணீர்
பொதுவிருக்கும் நம்மூக்கைப் பிடித்துக்கொள்வீர்
வீணீரே பூசிடுவீ ருட்காராமல்
விருதாவி லேயிருந்து குந்தியேதான்
மானீரே நீரிறைத்து ஒட்டுத்திண்ணை
மண்தரையில் நீருரைத்துத் திரும்பிப்பார்ப்பீர்.
438

## பூஜை விதி

திரும்பாமற் பிறர்சத்தங் கேளாப்பக்கம்
செவிடுமை போலிருந்து சம்மணமேயிட்டு
குரும்பாமல் உடல்கழுத்து தலையும்நேராய்
குருவாக வேணுமென்றால் மனதைப்பாரு
அரும்பாகு மூக்கின்வழி சுவாசமோடும்
அதைப்பார்க்கச் சொன்னாரே நாமளுந்தான்
விரும்பாமற் செய்தீரே நூலைத்தொட்டு
மேலானோ ரெதினாலே கிரந்தத்தாலோ. 439

கிரந்தமென்ன அகத்தியன்சொற் பாசைதானே
கிழக்குருவஞ் சத்திரியர் வசிஷ்டர்தானே
பிறந்தமென ராமர்வீடு தனிலிருந்தார்
பிணஞ்சுடுஞ் சக்கிவிச்சி கர்ப்பம்பெண்ணாள்
மறந்தமென வியாசர்பாண் டவர்கள்வீட்டில்
வாய்நிறைய உண்டவருஞ் சூத்திரன்றான்
சுறந்தமென்ற கிருஷ்ணனுமே கோனாராகும்
சூத்திரரே யிவர்களைநீர் பூசிப்பீரே. 440

பூசித்தார் முன்னோர்கள் நல்லோர்தானே
பொய்வேசம் போட்டுமே மறந்துபோனார்
வாசித்து யிருந்ததினால் வருவதேது
மக்களைப்போல் யாவரையும் பாவியாமல்
பேசித்தான் குருவென்ற தன்மைவிட்டு
பெருநாழி யுண்டிடுவோர் குருவாவாரோ
ஏசித்தா னுபாதானம் பூரியென்பார்
யிதுவென்ன பிச்சைசெம்பைத் தூக்குந்தானே. 441

## வேதம்

தானேதா னோர்காலம் உலகபேதம்
சந்திப்பு வந்துவிடும் பிறர்க்கேவேதம்
கோனேதான் குருவோடு குருவானோரை
கொடியமது விறைச்சியுண்பார் அகுதோர்காலம்
வானேதான் வெளிமறையு மகுதோர்காலம்
வசனிப்பா ரெல்லோருந் தமிழைத்தானும்
தேனேபோல் வானமொழி தித்தித்தோரே
சிவந்திருப்பா ரெல்லாரும் ஒன்றுபோலே. 442

ஒன்றுபோல் வேதமது யெல்லோர்க்குந்தான்
ஒருபாஷை யாகிவிடும் யாவருக்கும்
இன்றுபோல் நாளுமிரா இகுதோர்காலம்
இப்படியே கர்ப்பாந்திர மேநில்லாது
அன்போ லின்றுநாளும் வேதம்நில்லா
ஆசாரம் பாசையொடு நடைகள்தானும்
மன்றுபோல் பழக்கமெது வதுபோல்ஞாயம்
மாமனிதர் உலகநடை வாரிவ்வாரே. 443

இவ்வாறு காலத்தே தர்மபேதம்
எத்தனையோ அத்தனையு மெண்ணிலாதே
ஒவ்வாறு யென்செயலாங் காலபேதம்
ஒற்றுமையு மில்லாட்டாற் சரிவராது
அவ்வாறு தாணிணங்கா மாந்தர்தானும்
அவதிமெத்தப் பட்டிடுவார் படுகளத்தில்
செவ்வாறு சீராய்ந்து கூடிடாமல்
சீரழிந்து நின்றவர்கள் மெத்தஉண்டே. 444

உண்டேதான் குருகுலமும் கலப்பைதொட்டே
உழவுதொழிற் செய்யுகிற கர்ப்பம்உண்டு
கண்டேநான் குருவானோர் கருமாதிக்கே
கையரிசி திதியரிசி புண்யதானம்
சென்றேதான் யாககுண்டம் யெக்யேஓமம்
சீவனத்துக் காகவரார் ஓர்காலத்தே
இன்னதேதா னெவர்வந்தார் சொன்னதுக்கே
இக்குறைக ளுண்டவர்கள் நிற்பார்தானே. 445

நின்றேதான் போயிடுவார் ஓர்காலத்தில்
நீழ்விசும்பு மாறிவிடும் ஓர்காலத்தில்
குன்றேதான் மாறிவிடும் ஓர்காலத்தில்
குமுறாமல் மேகமழை ஓர்காலத்தில்
என்றேநீ கேட்டதெல்லாம் எப்போதில்லை
இடுகாடு மாறிவிடுஞ் சுடுகாடில்லை
கன்றேதான் பால்குடியாக் கெர்ப்பமில்லை
கவலையுண்டு மெப்போது மாறிடாதே. 446

மாறாது மனக்கவலை மண்ணுள்ளகாலம்
மறைநான்கு மேழெட்டு மிருந்துமென்ன
கூறாது மறைவந்து உளத்தேதானே
கூர்மனதும் நில்லாது வாசிதானே
பாராது தானிருந்தால் மனமும்வேறே
பரவாசி மூச்சிருந்தால் மனமபிராணன்
சீராதா யிருதயத்திற் பிராணன்தானே
சிந்தினது மனதென்ற அறிவுதானே. 447

அறிவென்றாற் பிராணதெளி வதுவில்லார்க்கு
அசுத்தஉயிர் தானாகும் மனமாஞ்சீவன்
தெரிவென்றா லாகாது மனதுள்ளோர்க்கு
சீக்கிரத்தி லறிவெய்தால் அசுத்தமாகும்
பிரிவென்றாற் தாமெடுக்க யினிமேலாகா
பிறக்கும்போ தேஉயிரே அறிவே ஆன்மா
மரியென்றா லறியாத மனதுள்ளோரே
மாமயக்க முள்ளவரே மனமுஞ்சத்தி 448

## ஆன்மா

சத்தியது பெலப்படுமே மனத்தின்சத்தி
சங்கரிக்க லாகாதே யாவராலும்
முத்தியென்றா லறிவிருக்கும் பிறக்கும்போதே
முறைவாசி சீவனல்ல ஆன்மாதானே
சித்தியென்றா லான்மாவுந் தானேவந்து
சேர்ந்திடுமே ஞானமட்டும் ஞானமெட்டும்
உத்தியென்றா லாசார உயிரே ஆன்மா
உருவெடுக்கும் பத்திமுத்தி சித்திதானே. 449
தானென்ற மோச்சத்தில் வந்தபேர்க்கு
தாகமுண்டு மோகமில்லை சந்தேகங்கள்
வானென்ற உருவில்லை உள்ளமில்லை
வாயரைய நாவுண்டு பகையுமில்லை
ஏனென்ற சத்தமில்லை கேள்வியில்லை
எம்மக்களானாலும் பழக்கமில்லை
தூனென்ற தம்பத்தில் வேலையில்லை
துணையுண்டு கலக்கமில்லா யிருப்புதானே. 450

## ஆன்மாயிருப்பிடம்

இருப்புதான் வாசியிடம் ஆத்மபீடம்
இயங்காம விருப்பதுவே சமாதிகூடம்
பொறுப்புத்தான் அறிவினிலே கண்டார்காணார்
போனதையே நாடார்கள் வருதல்பார்ப்பார்
குறிப்புத்தான் சுகமதனிற் கண்டகாச்சி
கோணாமற் பார்ப்பாரே யெந்தநாளும்
விருப்புத்தானில்லாரே விருப்பம்போல
மெய்யுடல முள்ளவரை விரும்பார்போலே. 451

விருப்பம்போற் றிரிவார்கள் விருப்பமில்லை
மேதினியில் நானிருந்தே னனேககாலம்
தருப்புத்தான் கண்டதுண்டு ஆண்டுமூன்று
கங்குலைப்போ லிருந்தார்கள் கவலையுற்றே
இருப்புத்தன் னிடமன்றி யாதுங்காணார்
யாதுமே யில்லாரே யானார்காலம்
பொருப்புத்தா னில்லாமற் பந்தமற்று
பொய்யுலக ராயினரே பொசிப்பில்லாதே. 452

பொசிப்பில்லா தென்னசெய்தார் புசுண்டநாதா
பூரணத்தாய் கண்டவரே புசுண்டமூர்த்தி
பசிப்பில்லை மேய்ந்தனர்காண் ஓரேயாண்டு
பழங்கிழங்கைத் தின்றனர்காண் மற்றோராண்டு
இசிப்புல்லே மச்சைகளைப் பிடுங்கித்தின்றார்
இதன்மேலே கிணற்றுநீ ரில்லையில்லை
புசிப்பில்லை யெவ்வகைக்கும் நீருமில்லை
போயினரே சீவர்களும் விருச்சம்வெந்தே. 453

சீவர்களும் விருச்சமுடன் நீருமில்லை
திரைகடலும் நீரிறுகித் திரைகள்மட்டே
யாவர்களு மலையேறி யிருந்தோருந்தான்
அம்மலையுங் காய்ந்துவிட வைந்தாமாண்டில்
ஊவர்களு மில்லாமல் சத்தமின்றி
ஊர்வனமும் போயினவே மிருகமாதி
ஓவெனவுஞ் சத்தமிட்டு ஊனைத்தின்று
ஒளிகுறைந்து கண்மயங்கி உயிர்விட்டாரே. 454

ஆறாண்டு தாண்டியபின் அதன்மேல்தானே
ஆறாண்டு யாருமில்லை ஆறேயாண்டு
பாராண்டு உள்ளிருந்தார் வெளியேவந்தார்
பசித்தவரைப் பாராம லுயிரேவிட்டார்
நீராண்ட மச்சமுண்டு கடலுமுண்டு
நீண்டமலை நெறியாமல் நின்றதுண்டு
கூறாண்டு மண்மலையுஞ் சமுத்திரந்தான்
கூடினது மூன்றுமன்றி தீய்க்கண்டேனே. 455

கண்டேனே யிவ்விதமாய்ப் பனிரெண்டாண்டில்
காலைமாலை யுண்டுண்டு உருமீனுண்டு
பண்டோனே ஆகாசக் கருப்புண்டோமொல்
பார்விசும்பில் மேற்கருப்பு குறைவேயில்லை
சென்றோனே கருப்பதுவு மதிகமாகும்
தீயொளிகள் மாறாமற் கதிர்மதிக்கு
இன்றோனே ஒளிபெருகக் கண்டேன்காலம்
இப்படியோர் கால்பார்த்துக் கூவினேனே. 456

கூவியே நானழுதேன் முத்தரோடு
குறைகேட்க யாருமில்லை தனியேகூவி
ஆவியே தான்பதறி நைந்துஅந்தோ
ஆகூகா வென்றழுதேன் பொருமிவிம்மி
தாவியே கேட்பதற்கு அடுத்தோரில்லை
சந்ததிக ளில்லாதா லிக்கேடுற்றேன்
மேவியே யெனைத்தேட யாருமில்லை
விரதம்விட்டாப் போல்நாட்டை
விட்டிட்டேனே. 457

விட்டேதா னிமையகிரி வடபாகத்தின்
மேலிருந்தேன் கூடுலைந்தேன் மெய்யுநொந்தேன்
நட்டேனே தோலெலும்பு சதையுங்கூடும்
நரைமயிரும் விலாவெலும்பும் புலாலுமில்லை
ஓட்டேனே சதையன்றி யெலும்புதானும்
ஊடுயிரும் வெளியில்வருங் காலந்தன்னில்
மட்டேனே கிழவனுயிர் நடையில்லாது
மறலிகையில் வருஞ்சமயம் உயிர்லாபந்தான்.
458

உயிர்லாபம் பெற்றெழுந்து வெளியேவந்தேன்
உயிரொழித்த முன்வருஷம் பனிரெண்டுக்குள்
கயர்போலே யொன்றுபட்டு உயிர்களெல்லாம்
காக்கியனா மென்னிடத்தே கலந்துகொண்ட
வயர்போலே நான்பெருத்தேன் உடலேகூடு
வாய்த்தனவே அன்றுமுதல் மறுபிறப்பு
துயர்போலே நானிருந்தேன் முன்னேசொன்ன
சூழுலக சீவர்களை யெண்ணித்தானே. 459

யெண்ணினதாற் துன்பமென்று யிகற்குப்பேரு
இதுகடக்க உபாயமது வெகுவில்வாயா
உன்னித்தான் மருமலையே வந்ததாலே
உயிர்மலையில் நானிருந்தேன் கவலையில்லை
நன்னித்தான் பார்ப்பதில்லை தன்னால்வந்து
நாடினதை யான்பாரேன் முனிநோக்கேதான்
கன்னிதா னிச்சையுரு மீனதேரூபம்
கவலையில்லை மனதுருவ மில்லைதானே. 460

இல்லையே யிச்சையுண்டு மனதுமுண்டு
இம்மனது இச்சைவழி ரெண்டுமொன்று
வல்லையோ முள்பாகம் பார்த்தபோதே
மாநெஞ்சந் துடிக்குமது பதைப்புயிச்சை
கொல்லையோ பயிர்முளைத்த தீரத்தாலே
குமுறுகின்ற நெஞ்சசைவு பதைப்பு ஆசை
கல்லையோ உடைத்திடலாம் நெஞ்சம்பொட்டல்
கண்டுகொள வேணுமென்றால் நெஞ்சசைவாகா. 461

ஆகாது நெஞ்சசைவு துடிப்புமார்க்கம்
அய்யய்யோ சுகதுக்கம் மனமதாகும்
போகாது பார்த்தளவிற் கேட்டலோடு
பொங்குதிரை யலையடித்தாப் போலேவுள்ளம்
நோகாது யிருக்கவென்றாற் நெஞ்சிற்பிராணன்
நுணுக்கமாய்த் தட்டிவிடும் பிலமேயாக்கும்
சாகாது விட்டிடுமோ சடலந்தன்னை
சந்ததிகள் செய்யாதோ லெகுவாய்த்தானே. 462

லெகுவாய்த்தா னுடல்முளைத்து உயிரேபூத்து
நீண்டமனங் காயாகி பழுத்தரிந்தே
பகுவாய்த்தா னறிவுமுளை கிளம்பிச்சூச்சம்
பாரறியும் நினையுடலைப் பகுந்துகாணும்
தகுவாய்த்த சித்தியிதிற் பிரிந்துகாணும்
தன்னுடலி லுயிர் அறிவுக் குள்ளேதானே
எகுவாய்த்தே முளைத்தெழுந்த சித்திதானும்
ஈசானு மால்பிரமன் யிடங்காணாப் போல். 463

ஆனாப்போல் அணிமாதி மூலஸ்தானம்
அரையிடுப்பு போகர்சித்தி நோஷந்தண்டில்
மானாற்போற் தூரதிஷ்டி நெற்றிக்கண்ணில்
மறைவேதங் கேட்டசெவி அண்டங்காது
நானென்றெல் றெனைக்கண்ட கண்ணேசித்தம்
நாசிமூக்கு கட்டினதால கெவுனமநாசி
ஊனாரிற் கண்டஒளி புருவமத்தி
உயரநின்ற அண்ணாக்கு அருளண்ணாக்கே. 464

ஆக்கினின்ற அதினுடனே பிடரிகண்ணு
ஆகெவனம் நிறுத்திவிடும் பிடரிதாரை
தூக்கிநின்ற யிவ்வலும் அணிமாசித்தி
தொன்றுதொட்டுச் சொன்னார்கள் பிடரி கண்டார்
நோக்கிநின்ற யெட்டுவிதம் சித்தாம்ஆனி
நூலுகின்ற சாஸ்திரத்தி னிடத்தைப்பாரு
பாக்கநின்ற சித்தியெல்வா மிதற்குள்தானே
பகரமவன்றால் வெகுவிதம்மே அறுபத்துநாலே. 465

அறுபத்து நால்விதமும் மேன்மையோர்க்கு
ஆகாதோ புத்தியுள்ளோ ராகினக்கால்
குருபதது வைத்திருந்தால் அறுபத்துநாலும்
கூடாதோ அறுபத்து நாலுந்தானே
மறுபத்து வந்திடுமே அறுபத்தைந்தாய்
மாவுடலம் பெலத்திடுமே சுகமாம்வீடு
திருபத்து வைகுண்டங் கயிலாசங்கள்
சேர்ந்திருக்த மிக்கூட்டில் அள்ளலாமே. 466

அள்ளலா மப்பொருளைக் குருவானோர்கள்
அவர்கொடுக்க வாங்காதே நமக்குமுண்டு
மொள்ளலர் மவர்பக்கம் நமதுஅன்பால்
மோனியரு மறவார்கள் நல்லோரைத்தான்
கள்ளெல்லாங் குடித்தாலுந் தள்ளிப்போடு
கள்ளமன மிருக்குமிடந் தேடிப்பாரு
உள்ளெல்லா மொழிந்திருக்கும் உடல்களெல்லாம்
ஒன்றுமற வேண்டாய்நீ கண்டுகொள்ளே. 467

கண்டுகொண்டாற் குருவுடனே தூரநில்லு
கண்ணெதிர நில்லாதே விலகிநில்லு
உண்டுகொளப் பின்னேயிரு முன்னேராய்த
ஓடாய்தே ஒழியாதே விலகிடாதே
தொண்டுபண்ண வையார்கள் யெல்லாமுண்டு
தூங்கினரைப் போலிருக்கார் பெலன்தானுண்டு
விண்டுசொல்ல மாட்டார்கள் சாஸ்திரம்போலே
மெய்முழுது மருளடைந்தார் விவேகியோரே. 468

விவேகிபோ லேயிருப்பார் சாஸ்திரம்போலும்
மெய்போலுந் தானிருப்பார் யெல்லாம்உள்ளோர்
சுவேகிதான் கரையில்லாக் கணக்கில்லார்கள்
துன்பமறச் சொல்லிடுவார் சோதிகண்டோர்
தவேகி ஒளிகண்டால் வேதம்வாயே
சாஸ்திரங்கள் பயப்படுமோ அவரைக்கண்டால்
அவேகியரோ காணார்கள் விவேகிகாண்பார்
ஆரிவரோ முத்திவீட்டை வைத்திருப்போர். 469

இருப்பார்க ளிருந்திந்த விடங்களெல்லாம்
எங்குமவர் ஊராகும் வசமேயாவார்
பொறுப்பார்கள் ஒன்றினிலும் பற்றில்லாதார்
பொருட்பற்று ஒன்றுண்டு அருட்பற்றேதான்
வெறுப்பார்கள் கைப்பற்று மனதில்யில்லார்
மேதினியிற் தமைத்தேடும் பற்றுள்ளோர்கள்
ஒறுப்பார்கள் மற்றதெல்லாம் அருளாற்தானே
உட்பற்று நீங்காது நல்லோருக்கே. 470

நல்லோரிற் தமையறிந்த யிருவர்சேரில்
நாம்பேசு முறையதுபோல் சபையுங்கூடி
அல்லோரில் உரைநிறுத்திச் சும்மாநின்று
ஆருக்கு மொத்திருப்பார் பெரியார்போல
வல்லோரில் வல்லவரே பெரியோர்க்குள்ளே
வல்லபங்கள் மெத்தவுண்டு கோடிக்கொன்று
இல்லாத மனிதர்பல கோடிக்கொன்று
இப்படியே சித்தரிலுங் கோடிக்கொன்றே. 471

கோடியிலே ஒருவனல்லோ சீவன்முத்தன்
குறைமுத்தன் அரைரிஷியே தவசிற்பாதி
வாடியிலே போகாதார் பத்தர்தானே
மனதிலே போக்காதார் பித்தராகும்
கூடியிலே வாராதார் பள்ளத்தாரே
குளித்துக்கரை யேறாதார் அழுக்குள்ளாரே
பேடியிலே குறியிருக்க ஆணாகார்கள்
பெண்கொண்டாப் போலல்லோ தேறாமாரே. 472

மாரென்ற விளக்கமா ராசாரங்கள்
மக்களே செருப்பென்ன உடல்காப்பென்ன
சேரென்ன குழுந்துவிடும் நாயும்பேயும்
தீண்டாமற் காத்திருக்கும் வைத்திடத்தே
வீரென்ன மூதேவி கழுதைதானும்
மெய்நலிந்த யேகாலி துன்பங்கார்க்கும்
ஆரென்ன சென்றுமுத்தி குருவுந்தொட்டு
ஆகாயம் பரப்பனபோற் ஓடுவாரே. 473

போவார்க ளப்படியே குருவுந்தானே
போயேற மாட்டாமல முற்றுந்தானே
வாயேறப் பறப்பார்கள் உள்ளடங்கி
வல்லபங்கள் முழுவருளுங் கிட்டுங்கிட்டும்
தாயோர மிருக்கார்கள் முழுதும்வாயா
சந்ததிக ளானாக்கால் முழுதும்வைப்போம்
போயோரம் நில்லாதே புருவமேலே
பூட்டுடைத்துங் காணாரே பொருள்காண்பீரே. 474

காணீரே புருவவாசல் பூட்டுத்தாண்டி
கணக்குடனே போவீரே மூக்குநேரே
பூண்பீரே மூக்குமுனை புருவமத்தி
புகுந்துகொள்ளும் வாசலது மணியுங்கேட்கும்
ஆண்பீரே யதிலிட்டுத் தூண்டுதூண்டு
அரகரா வெனமுழங்கும் காதிற்கேட்கும்
ஞானவீடு காட்டிவிடும் மத்தளங்கள்
நடிக்குமல்லோ பேரிகையும் டங்காசத்தம். 475

சத்தமொடு தம்பட்டங் கேட்டலோடு
தாளமென்ன தித்தியொடு புல்லாங்கோசை
வெத்தியென்ன செயகண்டி மேளதாளம்
மென்மேலும் உப்பரிகை மெத்தவுண்டு
கத்தியென்ன நீபாரு யாருங்காணார்
கனமலொளியும் வீசிவிட்டு முன்னேசோதி
முத்தியென்ன யிதுவென்ன வாசல்தாளம்
முனைவழியே நடக்கையிலே தோணுந்தானே. 476

தோணுங்காண் மற்றதெல்லா மறைந்திருக்கும்
தும்பிக்கை யோன் முருகன் துலங்குவார்கள்
பேணுங்கா ணிதுவழியே நின்றிடாதீர்
பிரபலங்கள் மெத்தஉண்டு கேட்கவேண்டாம்
மாணுங்காண் கண்டிடலா மிதுமேற்தானே
மக்களே கோடிசத்தி வருகும்பாரு
வீணுங்காண் பெண்சத்தி மாயாரூபம்
விரித்துரைக்க யெட்டாது தடுக்கும்பாரே. 477

தடுக்குமே கோடான கோடிசத்தி
தான்வந்து போராடி மாழுமாழும்
அடுக்குமே பின்னாலே அதுவும்வந்தே
அய்யய்யோ யெத்தனையோ யெண்ணவுண்டோ
விடுக்குமே வாசல்வழி தடைகள்தானே
மேலேற வொட்டாது ஒளிவிற்சிக்கும்
கொடுக்குமோ முத்தியென்ற திரிகாலத்தைக்
கூறாது தடுத்துவிடும் மேலேயேறே. 478

யேறுவது பிசகாமல் விலகிடாமல்
யிருந்தயிடந் தாண்டிநீ யேறுயேறு
மேறுவது லெகுவாகும் யேறுவாய்நீ
மெய்புருவம் நடுநெற்றி விரைந்துயேறு
தேறுவது அவ்வழியே வாசல்கண்டு
சிறுவாசல் வந்தவழி முத்தியாகும்
கோறுவது புருவத்தில் பூட்டைக்கண்டு
குருவாகி வந்தாக்காற் சேருவீரே. 479

சேருவீர் கழிமுனையாந் தெருவின்வாசல்
சிக்கருத்து உச்சிவழி சிறந்தவாசல்
போருநீர் போடுவீர் புருவவாசல்
பூட்டிருக்கு மேடையது வலுவுமெத்த
காருநீ நெஞ்சிருக்கும் பிராணன்தானே
கதவையுமே திறந்துவிடும் போவீருள்ளே
நீருமே மெய்ப்புருவத் தமர்க்குள்ளேகி
நினைவையுமே யதிலிட்டுத் தூண்டுவீரே. 480

தூண்டுவீர் தூண்டயிலே புருவந்தட்டும்
துயர்செய்யுங் காதடைக்குங் கண்ணுமூடும்
ஆண்டு பாருடல்மயங்குங் கிறுகிறுக்கும்
அத்தனைக்கும் உடல்வலிக்குந் திறக்கும்போது
கூண்டுபார் நடுநடுங்கும் புலன்களெல்லாம்
கொட்டாவி விட்டாற்போற் சீரணிக்கும்
மண்டுபா ரந்தஇடஞ் சும்மாதானோ
வல்லவர்கள் காண்பார்கள் மற்றோர்தாண்டார். 481

தாண்டுவா ரிதுபெரிதோ யோகியானால்
தாண்டலாம் புருவமத்தி தாண்டலாகும்
மாண்டதினா லெல்லைபலன் குருவாய்வாரும்
வையகத்தோ ராகாமல் வந்துசேரும்
பாண்டதனா லேயிருக்கும் மரணந்தானே
பாரென்ன யித்தனைக்குஞ் சாம்பல்தானே
கூண்டிதனா லித்தனைக்கும் லேசுதானே
கூறினோ நெத்திமத்தி புருவப்பூட்டே. 482

பூட்டென்ன பொருளிருக்குந் திறந்துஉள்ளே
பொக்கிஷங்கள் மெத்தஉண்டு களவுயில்லை
மூட்டென்ன சொன்னாரே முறைகள் சொல்லி
முனைமூக்கு மேலேதான் நேரேபாரு
தீட்டுநீ உட்புகுந்தால் வெளிச்சங்காணும்
தீபவொளி கண்டிடலாஞ் செங்கணேதான்
ஆட்டுவதி லேநுழைந்து யிருந்துகொண்டால்
ஆதித்தன் கோடியொளி யமர்ந்துநில்லே. 483

நில்லப்பா யிப்படியே உச்சிமட்டும்
நேராக யேறையிலே வினோதங்காணும்
கல்லப்பா உன்மனது யெங்கேபாரு
கவலையெங்கே அலைவெங்கே துன்பமெங்கே
செல்லப்பா மானிடனோ வேலையெங்கே
திருவெங்கே குருவெங்கே சீஷனெங்கே
மல்லப்பா யெதிரெங்கே மனிதர்க்குள்ளே
மாமனிதன் சிறுகுழந்தை வசனிப்பானே. 484

## மனிதர் செய்கை

வசனிப்பான் சொல்லெல்லாந் தெய்வமார்க்கம்
வாயாலே சொல்வானே அணணாவாலே
விசனிப்பான் மக்களையே யெண்ணித்தானே
வேறுவித யெண்ணமில்லை கவலையில்லை
வசனிப்பான் கருமார்க்கம் விதியின்மார்க்கம்
மங்கையர்க ளேயறுத்த புலப்பம்போல
விசனிப்பான் தன்னருகி லிருந்தோர்புத்தி
வேறாகும் நாளறிந்து நாடுவாரே. 485

நாடுவார் மரணத்து நாளறிந்து
நம்முடலைச் சாம்பலென நினைவிலெண்ணி
கூடுவார் தாண்டுதலே தர்மமாகும்
குமரிவந்தால் மலைத்தடையே கடலேகோடே
பாடுவார் உந்தாக்காற் தாலிபோட்டு
பாடகத்தை யிட்டாப்போற் விலங்கேயிட்டு
ஆடுவார் யெப்பொழுதும் உபதேசங்கள்
ஆச்சரியஞ் சொல்லெல்லாம் புதிதுதானே. 486

புதுப்புதிது நகைபுதிது புதிதேஆடை
பொங்குகடை யெங்கும்உடை மின்னற்தோடை
பதுப்புதிது சொற்புதிது விரிந்தகூந்தல்
பையரவம் புதிதல்லோ உடையும்ஆடை
விதுப்புதிது அரைபுதிது தளிரேமேனி
மெய்புதிது இடைபுதிது விலையும்புதிது
அதுப்புதிது இசைபுதிது ஓசையும்புதிது
அழகான அங்கமது புதிதுமாச்சே. 487

மாசுவெகு தூள்புதுசு சோடியான
மாதவளும் வந்தாக்கால் தெய்வம்நீரு
ஆசுயிது யில்லறத்திற் காயப்பெண்ணே
அங்கமெல்லா மாபரணம் வீசும்பெண்ணே
வீசுயிது அணிதுணியும் சேலைதானே
மெய்சிலிர்க்கும் நடைமயிலே அன்னமாதே
காசுயெது பாசுயிது நேசுயீது
காணாத மோசுயிது கரைகண்டாரே. 488

கரைகண்டோ மென்பார்கள் களத்துவீரர்
கரையென்ன காண்பீரோ மனதில்லாரே
விரையென்ன விரைத்தாலும் பூமியோர்க்கா
மேனியைப்போ லிப்பூமி யேற்குமோதான்
துரையென்ன காண்பீரோ மனதுசே ர
துரியபதங் கண்டிடலா மிதுகாணாது
மரையென்ன சொல்லிடுமோ வேதங்காணார்
மங்கையரைக் காண்பதற்கு மனமோஆழம். 489

ஆழமே மனதாழங் கருத்தினாழம்
ஆரறிவார் கிட்டிருந்துங் காணமாட்டார்
பாழமே பாதாளம் பெண்கால்மத்தி
பாற்பதுண்டோ முற்றிலுமே விபகாரத்தை
நீழமே யிதுபெரிதே நெற்றிக்கண்ணாம்
நேர்வரவுந் தான்சிறிதே விபகாரங்கள்
ஊழமே யிதையெடுக்கும் யித்தைப்போல
ஊராது சதைதிரண்டால் ஊனையொட்டும். 490

ஊனையொட்டு மெய்சிலிர்க்கும் நடையோடாது
உச்சரிக்கும் பல்திறக்கும் கையுந்தாழும்
ஆணையிட்டும் குருவைவிட்டும் அஸ்திரம்விட்டும்
ஆகாய வெளிமட்டுங் கவலையொட்டும்
ஏனைவிட்டு நீங்குவது யிந்தநாளா
என்னாளும் நீங்காது சாகும்நாளோ
வானைவிட்டு நீங்காத யிருளேபோல
வந்துவந்தும் போகாது மயக்கந்தானே. 491

மயக்கந்தான் பெண்சுகமே மேடைகூடம்
வாய்த்தாலும் உப்பரிகை கூடகோபுரம்
இயக்கந்தான் போதாது வெளியேதானே
ஏகினா லிப்படியே வெளியுந்தோணும்
தயக்கந்தான் கேட்டதெல்லாம் வேணும் நாணா
தாதிகளுஞ் சேடிகளும் சோடிமாதும்
வயக்கமே யிவர்களுக்குப் பூஷணந்தான்
வாயாலே ஆபரணஞ் சொல்லல்லயேதோ. 492

ஏதுசொல்லப் பூமியின்மேல் விளைந்தபெண்ணு
இவள்பூமி செங்கைமலை யிதனிற்றானே
வாதுசொலல யீடிதுவோ விண்ணாஞ்சந்திரன்
வாரியதை யிட்டாலும் நகைதானாகும்
ஈதென்ன பெரிதோதான குற்றஞ்சொல்வார்
இத்தனையுஞ் சுமந்திடுவாள் பாரிபாரி
போதுசொல்லக் காணாது அந்தரங்கம்
புலாஉடலில் மூலசுகம் யென்னவுண்டோ. 493

உண்டோதான் அனற்பூமி சம்சாரிக்கே
உழுதுழுது பலன்காண ா உகலமயேதோ
மிண்டாரே சுகமதனில் கண்டஞாயம்
வெள்ளாண்மை யெடுக்கவென்றாற்
கொடுக்காதய்யா
விண்டவர்கள் சொன்னதெல்லாஞ் சேர்த்துப்
பார்த்தால்
மெய்பெரிதோ உயிர்பெரிதோ நினைவாய்ப்பாரு
கண்டோர்க ளெத்தனைபேர் ஆயிரத்தின்மேலே
கன்னிகையை மணம்புரிந்தும் பாக்கிதானே. 494

பாக்கியே தீர்வதென்ன உயிரேசேர்த்து
பக்குவத்தால் மனம்ரெண்டுங் கூடிமாளும்
தாக்கியே மனம்பிரிக்க யெட்டாதய்யோ
தங்கச்சி யானாலுந் துணையாம்பெண்ணு
நோக்கியே யில்லாட்டால் மனந்தான் ஆணு
நூறாணும் ஓர்பெண்ணும் வேணுங்காணும்
ஆக்கியே அக்கினியே நீரேசேர்ந்தால்
அமைதியெனும் பாவனையே விரும்பச்சொந்தம். 495

சொந்தமென்ற ஆண்மனதும் உயிருந்தானே
தொல்லுலகிற் பெண்மனதும் உயிருஞ்சேரும்
கந்தமென்ற உடல்கலந்தாற் பொழுதுபோக்கும்
காரிழையும் வீரனுமே ஆண் பெண் ஆன்மா
தொந்தமெனச் சோடியது பிரிக்கக்கூடா
தொல்கண்ட மவ்வளவு மிப்படித்தான்
பந்தமெனத் தானிருக்கு மனமுஞ்சிலன்
பழங்கதைகள் சொல்வதுபோ லல்லதானே. 496

அல்லஅல்ல யெம்மூர்த்தி தனியாய்நின்ற
ஆகாகா வாலையவள் நம்மைச்சார்ந்தாள்
சொல்லல்ல பெரியோரும் பெண்ணேயென்றால்
துகளடியிற் வீழ்ந்திடுவார் மனந்தான்சாதி
நில்லவல்ல சித்தர்களும் பெண்ணாற்சிக்கி
நேர்வழியே திரும்பிவர வெகுநாளாச்சு
இல்லவல்ல நாமென்ன தொந்தம்போக்க
எத்தனித்தா லுடலுயிரு மனமுந்தானே. 497

உடலுயிரு மனந்தானே உடலைநத்தும்
உயிர்நத்து மனந்தனையு மொன்றாய்ச்சேரும்
கடலிலுரு நீரிலுப்பு கூடினாற்போல்
காலடியிற் சேர்வதுவே சுகமேவீதி
அடல்செய்யும் ஐம்பூத நினைவேயாதி
ஆச்சரிய மல்லவிது அண்டில்போல
குடல்கண்டு பசியன்னம் விரும்பலேபோல்
கொண்டுடலும் மாய்கையால் மோகந்தானே. 498

மோகந்தான் மறப்பதற்கு முடியாமற்தான்
முனிபதத்தைக் காணாமல் விட்டோம்விட்டோம்
தாகந்தா னிதுவிடாது யெந்தக்காலம்
சாக்காடு வந்தாலும் பின்னாற்செல்லும்
யூகந்தான் வீணாகு மறிவுள்ளோர்க்கு
உற்றதனைத் தள்ளுதற்கு லேசுதானோ
பாகந்தா னிதுவன்றி வேறேபந்தம்
பையரவம் போலவுமே வேறேயுண்டோ. 499

உண்டேதான் கோவில்குளம் மூலஸ்தானம்
ஒரு பெண்ணை அல்லமெத்த உண்டுஉண்டு
மண்டேதா னறியாமற்குளத்தில் வைத்து
மறுநீரைத் தானறியத்தெரியாதேபோல்
உண்டேதான் பலநாளும்தீர்த்த யாத்திரை
ஊடாடிக் கோவில் குளம் பார்த்துங்கேட்டும்
தின்றேதா னறியீரோ கல்லோநீரே
தேவடியாள் போலிருக்கு அம்மைகொண்டே. 500

கொண்டேதா னிருக்காரே சாமியென்பார்
குமரியில்லாக் கோவிலுண்டோ சுத்திப்பாரு
சென்றேதான் பொய்யென்றாற் தள்ளுவார்கள்
சிறுபிள்ளை குழந்தையுண்டு வாசல்தானே
மொண்டேதா னிருக்கார்கள் குடும்பந்தானே
மொய்குழலார் பெண்ணுக்கே கோவில்வீடு
கண்டேதான் நாமிருந்து பொருள்களெல்லாம்
கதவடைத்து வைத்திருந்த தெல்லாமீந்தோம். 501

ஈந்தோமே கோவிலுக்கோ சாமிக்கோதான்
இவர்மனைவி அம்மையவள் பெண்ணுக்கோதான்
நாந்தாமே யீந்தோமே பட்டருக்கோ
நாம்வைக்க யிடமதுயில் லாததாலோ
தாந்தாமே ஒவ்வொருவ ரீந்ததாலே
தன்வயத்துக் கெட்டாதே தேவஸ்தானம்
ஆந்தாமே மத்தளங்கள் கரியாம்யானை
ஆர்பொருளை யுண்ணுதது முத்தியுண்டோ. 502

முத்தியே நாம்தேடச் சாமியுண்ண
மோகித்தோம் நாமறியத் தோணுதில்லை
சித்தியோ வருவதில்லை திரிகாலங்கள்
செபமில்லை திரிகாலந் தோற்றுதில்லை
தத்தியே யேகுதில்லை சாங்காலங்கள்
தானிருந்து மெய்யுடற்குத் தானுந்தோண
உத்தியோ சேருதில்லை யுடற்கர்மந்தான்
உடலையே தேடினது மனதுதானே. 503

## பொய்க் குரு

மனதென்ன பொய்க்குருவே யுகங்கள்தோறும்
மடங்கட்டுஞ் சாமிகளே சாமியாரே
நினதென்ன ஆச்சிரம முத்தியுண்டோ
நீர்நின்று நாமிருப்ப தெந்தக்காலம்
உனதென்று நீயிருக்க நாங்கள்வந்தோம்
ஒருபலனுங் காணமினி உண்மைசொல்லும்
தனதென்று நாமிருந்தோம் நீருஞ்செத்து
சாகும்நாள் கொடுப்பீரோ மனத்துப்பூட்டே. 504

மனத்துள்ள பூட்டதனைத் திறக்கமாட்டோம்
வாய்கொண்டு சொல்லிடுவோம் வார்த்தை கேட்டு
புனத்துள்ள மரமுள்ளு யெடுக்கமாட்டோம்
பொய்புடற்கு நெய்யுண்டு சடைவளர்ப்போம்
கனத்துடலே யில்லாட்டாற் சண்டைசெய்வோம்
கையிலே தர்க்கமுண்டு குறடுபோலே
வனத்துள்ளே யாம்போகோம் நீரேபோகும்
மலடிமகன் சன்யாச மெடுத்துக்கொண்டே. 505

எடுத்துக்கொண் டேயோடி யிங்குவந்தீர்
எங்கள்மனம் நோகாம லிருப்பதற்கோ
தடுத்துக்கொண் டோடிவந்தீர் முத்திகொள்ளை
தானடிக்குஞ் சண்டாளர் போலேயல்லோ
அடுத்துக்கண் டாருயிரை வேரைப்பற்றி
அமாவாசி யிருட்டினிலே கன்னமிட்டீர்
உடுத்திக்கொண் டிருந்தீரே கோவணத்தை
உத்தரிய மெங்கேவைத்தீர் அங்கவஸ்திரமே. 506

வஸ்திரங்கள் மெத்தஉண்டு குல்லாமாலே,
வாசலிலே திறவாளே திறந்தபின்பு
அஸ்திரங்கள் வைத்தாப்போல் அங்குவைத்தோ
அலையறேன் பொருளுண்டு தெருவிலேதான்
மெஸ்திரங்களெனக்கில்லை வெரும்பாழுண்டு
வேணதெல்லா மதிலுண்டு பழம்பாழுள்ளே
மூஸ்திரங்க ளெத்தனையோ பெற்றபேர்கள்
முறிந்தோடிப் போனவர்கள் அனந்தபாமே. 507

அனந்தமுண்டு அவ்வாசல் திறக்கமாட்டார்
அதுவழியே நூல்படியே யேணியேத்தம்
அனந்தமுண்டு வாசலிலே காவற்காரர்
அங்கங்கே தடைசெய்வார் காவல்காப்பார்
அனந்தமுண்டு நாம்மீறிப் போனாற்தானே
அவர்களையுங் காணாதே அழிந்துபோவார்
அனந்தமுண்டு அதிசயங்கள் வேலையில்லை
அப்பாழே பாழ்பாழே பாழேவீழே. 508

## முப்பாழ்

வீழென்றும் பாழதனில் உச்சிப்பாழை
மெய்சிலிர்க்கும் கள்ளமுர்தம் அமுர்தக்களு
ஊழென்றும் பிறகென்ற உடலின்கர்மம்
ஊழ்பாழே மனம்பாழே உச்சிபாழே
வீழென்று சொன்னாரே பாழாம்வீட்டில்
மெய்யரே வந்திருவீர் குருவே அய்யா
ஆழென்று சொன்னாரே அப்பாழப்பாழ்
அப்பாழைக் கடப்பதற்கு முபபாழ்தாண்டே. 509

முப்பாழே முக்கண்ணை மறைத்திருக்கும்
மோகக்கண் திறந்திருக்கு முன்னேதானே
இப்பாழே தாண்டாமல் அப்பாழதாண்ட
எத்தனிப்பீ ருச்சிப்பாழ் தாண்டுதற்கே
துப்பாழே யாகாது ஒளிப்பாழ்கண்டு
தூங்காமற் தூங்கிவிடு ஒளிக்குள்ளேதான்
கைப்பாழே ஒளிதாண்டி வெளியிற்சென்றால்
கரையில்லா வொளிவீசும் உச்சிக்கீழே. 510

உச்சியதின் கீழிருக்குங் கபாலவட்டம்
ஊடேதான் நீயிருந்து ஊஞ்சலாடு
கச்சியதின் கிளிமொழியாள் ஊஞ்சலாட்ட
காலிட்ட மண்டபத்தில் தொட்டிலிட்ட
மச்சிலையின் பாலுண்டு வாமப்பாலை
பகுந்துண்டு நீயிருந்து தூங்குவாயேல்
செச்சையதின் வீடிதுவே அழகாமேடை
தீபவொளி கண்கூசுந் தூங்கிடாதே. 511

தூங்கிடா தேயிருப்பீர் ஒளியாற்றானே
தூங்குமோ ஒளிக்கண்ணு தூங்கிடாது
வாங்கிடா தேயிருப்பீர் சுகத்தினாலே
வல்லபங்கள் மெத்தமெத்த ஒளியாற்றானே
ஏங்கிடா தேயிருந்தார் கண்டோரெல்லாம்
எங்கேயென்று கேட்டாலுந் தானேதோணும்
ஓங்கிநின்ற மறைப்பெல்லாம் தானேமாளும்
உச்சரித்தா ரெச்சரிக்கை யுன்னுட்டானே. 512

தானேயான் கண்டதொரு ஒளியினாலும்
தமர்வாசற் றிறப்பாலும் உச்சியாலும்
கோணாதே ஆன்மாவில் நின்றதாலும்
குருநாடி சாதனையா யேறலாலும்
வானாடி மேல்நோக்கிப் பார்த்தலாலும்
மனங்கண்ணும் புருவமத்தி புகுந்ததாலும்
ஊனாடி கோபுரத்திற் சென்றதாலும்
உயிர்மனமும் புருவவழி உச்சியாலே. 513

உச்சியா முடலுச்சி சுழிணையுச்சி
உண்ணாக்கு அண்ணாக்கு மேலேஉச்சி
இச்சியாம் இடுப்பிடையிற் பீசமத்தி
இதுநாடி நடுநாடி கோசந்தண்டு
ருச்சியாங் கோசபீச தண்டைத்தொட்டு
குருநாடி நாக்குவரை கயரேபோல
நச்சியே போய்ப்பாரு நாக்கண்ணாக்கு
நடுமண்டை உச்சிவரை கபாலநாடி. 514

நாடியே யின்னாடி நாடிப்பாரு
நாமறியும் உடலுயிருந் தாங்கும்நாடி
ஓடியே பிராணனன் ஆடும்நாடி
உத்தமனா யிருக்கின்ற நாக்குநாடி
தேடியே நவத்துவாரஞ் செய்தநாடி
சிறுநாடி உருநாடி குருவாம்நாடி
பாடியே பேசுகின்ற திந்தநாடி
பையுடலில் நடுநாடி வார்த்தைநாடே. 515

வார்த்தையே நாடியென்ற மூலநாடி
வாய்ச்சங்கு நெஞ்சுவயர் கோஷபீஷம்
ஏர்த்தையே யின்னாடி அண்ணாவிற்தான்
இதுதுடர்ந்து உச்சிமுட்டி கோஷமுச்சி
பார்த்தையே அதியந்த மிந்தநாடி
பலபேருஞ் சொல்லுவில்லை நானேசொன்னேன்
நேர்த்தியே யிதுவழியே மூலப்பிராணன்
நேரேறும் நிமிர்ந்திருந்து உட்கார்ந்தாலே. 516

உட்கார்ந்தால் உடலசையா மார்க்கத்தாலே
ஊடுருவி யேறிவிளை யாடுப்பாரு
உட்கார்ந்தால் நாடியது நிமிருந்தானே
உயரவே மேல்நோக்கும் நாடிமார்க்கம்
உட்கார்ந்தால் பண்டைசுத்தும் முன்னேதானே
உன்முகத்தில் புருவமத்தி உன்னிமுட்டும்
உட்கார்ந்தால் முட்டியந்தப் புருவமத்தி
ஊடேதான் ஓடிவரும் கபாலஉச்சி. 517

உச்சியிலே வந்தபின்பு யிறங்காமற்தான்
உருண்டுவிளை யாடுமது வட்டமிட்டு
மச்சியிலே மேலிருக்க யிடமும்உண்டு
வாலையென்று சொல்வார்கள் முத்தரெல்லாம்
அச்சியிலே சுத்தலைப்போல் வட்டமாடும்
அம்மம்மா அதனழகு யென்னசொல்வேன்
பச்சியிலே கிளிபோலே வர்ணங்காணும்
பலவிதமே சோதியொளி வாலைரூபம். 518

ரூபந்தான் திரண்டுருண்டு வாலையாகும்
நொடிக்குள்ளே சுத்திவரும் மனவேகந்தான்
தூபந்தான் ஒளிமிகுதி கோடிசூரியன்
தூண்டாத சோதியொளி வீசும்பாரு
சாபமொடு வரஞ்சொல்லும் மேன்மைசொல்லும்
தங்குதற்கு யிருப்பிடமுங் குறியுஞ்சொல்லும்
தாபந்தான் போக்கிவிடும் குருதானெங்கும்
சங்கித்தார் சினேகரைப்போல் சொல்லும்பாரே. 519

பெயர்சொல்லும் ஊர்சொல்லும் வீடுஞ்சொல்லும்
பின்புவரும் காரியங்க ளெல்லாஞ்சொல்லும்
துயர்சொல்லுஞ் சொல்லாது சுகமேயாகும்
துன்பம்வருங் காரியத்தை முன்னெசொல்லும்
அயல்சொல்லுங் கேளாது தன்னைப்போல
அண்டினரைச் சேகரிக்குந் துணையுஞ்செய்யும்
மயல்சொல்லும் வராது செயலினாலே
மனம்லென்றால் மனமானாள் வாலையானாள். 520

ஆனாளே உடல்வாலை யாக்கிக்கொண்டாள்
அதுவென்ன யிதுதானே நாடிக்குள்ளே
ஆனாளே உயிர்மூச்சு சீவன்ஆன்மா
அம்மனதும் அறிவுடனே புருவந்தாண்டி
ஆனாளே நெற்றிவழி உச்சிமார்க்கம்
அத்தடைகள் நீங்கிவிடும் வாலையாகும்
ஆனாளே உச்சிவரப் பாதைதானே
அறிவித்தேன் புருவமதற் குள்ளேயேறே. 521

ஏறப்பா ஏறையிலே லழுக்கும்பாதை
எல்லோரும் போகும்வழி யார்க்குஞ்சொந்தம்
வேறப்பா பாதையில்லை சோதிகாண
மெய்யுடலத் துச்சியிலே தீபம்பாரு
நீரப்பா உள்ளிருக்குந் தடைகள்தானோ
நீங்கிவிடிற் பேரொளியே நிமிஷங்காணும்
தேரப்பா சொன்னவழி பாதைகண்டு
தெருவீதி யேவருவாய் தேர்ந்தால்தானே. 522

தேர்ந்தால்தான் நீயொருவன் சித்தர்க்குள்ளே
செகசாலங் கண்டுகொள்வாய் முனிவர்நேர்மை
நேர்ந்தாக்கால் யானொருவ னதனுக்குள்ளே
நெடுநாளே காத்திருந்தேன் உன்னைக்காண
ஓர்ந்தாக்கால் வந்திடுவீர் ஒளியின்கூட்டம்
உள்மறையே தேடுதல்லோ மறக்கலாமோ
சார்ந்தாக்கால் யெல்லாருங் கூடலாமே
தம்பியரே அண்ணாவி தமையன்போலே. 523

போலவே யெண்ணுகிறோம் முன்னோருந்தான்
புகழுகின்ற பின்னோரும் பொருந்தினாலே
சாலவே கூடுடையு மட்டுந்தானே
தமர்போலே வாடுவரே நல்லோரோடு
மாளவே யெத்தனிக்குந் துன்பத்தார்க்கு
வசனிக்க மாட்டாரே விசனிப்பார்கள்
தாளவே சம்மதமே யானோருக்கு
சதாசிவனு மாலாலு மாகாவாரே. 524

ஆகாது பிரமனொடு ரிசிகளாலும்
ஆசித்த முனிவரொடு தவசியாலும்
வேகாது பக்குவங்க ளில்லாதவர்க்கும்
வெரும்பொய்யே சாஸ்திரமுங் குருவும்முத்தி
போகாது பக்குவர்க்கெவ் விதத்தினாலும்
புழுக்குழவி யாம்போலும் விட்டிற்றீபம்
சர்குமே அதுபோலக் குருவினாலும்
சந்ததிகள் தழைத்துவிடு மெந்தநாளும். 525

எந்நா ளும்பதங்க ளில்லாவீணர்
எருவடுக்குஞ் சாம்பலுக்கோ கட்டைத் தீய்க்கோ
வெந்தறியார் பார்த்திருந்து மண்ணேதின்ன
வெரும்மண்ணாய்ப் போகுதற்கோ ஆற்றுநீர்க்கோ
பந்தயங்க ளிட்டாப்போல் மிருகத்திற்கோ
பாரிலுள்ள அக்கினிக்கோ யிடிமின்னற்கோ
தொந்தங்கள் வைத்தாரே குருவுஞ்சாஸ்திரம்
தொன்றுதொட்டுப் பார்த்தறியார் தள்ளி
னோமே. 526

தள்ளினோ மெங்கள்மேற் குற்றமில்லை
தவமில்லை அறிவில்லை சாதனங்கள்
துள்ளினோ மவரைவிட்டு அப்பாற்றானே
தூரத்தே போனோமே கண்ணிற்கெட்டோம்
தெள்ளினோ மெங்கள்மனந் தெளிந்ததாலே
தெளிவில்லா மனத்தோர்கள் சேரில்ஓட்டோம்
அள்ளினோ மருட்கடலை மொண்டுஉண்டோம்
ஆகாச வெளியைப்போற் சுகமேதானே. 527

சுகமென்ற சுகமதுவு மாறாதப்பா
தூங்கிடிலு நடக்கையிலுந் தொழிற்செய்தாலும்
அகமில்லை யதனாலே மனமோகந்தம்
ஆனதினா லறிவானோம் அறிவேரூபம்
சகமென்ன அறிவிருந்தாற் தெய்வம்போலே
சாதிக்கும் யாவருமே மனிதரெல்லாம்
யுகமென்ன யெப்போது மிப்படித்தான்
உற்றுணர்ந்து பார்த்திருந்தேன் வசிஷ்டர்நீதா. 528

நீதனே யென்றுரைக்க வசிஷ்டநாதர்
நேர்விசும்பும் பாதாளங் கண்டநாதா
சூதனே கபடற்ற புசுண்டநாதா
தொல்லுலகே பூதஉடல் உலகந்துன்பம்
மாதனே வேதத்தின் தாயேயான
மறையோனே புசண்டரெனுங் காகநாதா
வேதனே கண்டிருந்தீர் பார்த்துங்கேட்டும்
மெய்யுடலை வைத்திருந்தீர் வெகுநாள்மட்டே. 529

மட்டில்லாக் காலமதிற் கண்டகாட்சி
வசனித்தீர் கேட்டவுடன் காலந்தோறும்
வெட்டில்லாக் காலமில்லை யென்றுசொன்னீர்
விரித்துரையும் நல்லோர்க ளெப்போதுண்டு
நட்டில்லாக் காலமில்லை லாபநஷ்டம்
நாட்டிலே யெப்போதும் உண்டுஉண்டு
துட்டில்லாக் காலமில்லை சுகதுக்கங்கள்
சூழ்ந்தவெளி வட்டம்போ லுண்டுஉண்டே. 530

உண்டேதான் கலகங்கள் ஞாயாந்நியாயம்
உலகுண்டு வெளியாகு மட்டுந்தானே
கண்டேதா னிங்குவந்தேன் மலைமேல் நின்றேன்
கண்தெரிந்தே அறிவுள்ளோ ரிங்குயில்லை
மண்டேதா னிருக்குதல்லோ மிருகசாதி
வாயிரையே யாகுதற்கோ யிங்கேவந்தேன்
தொண்டேதான் செய்யாமற் குருவேயானேன்
துறையறியா மானிடனுங் குருவாகானே. 531

ஆகாது பஞ்சபட்சி சிப்பிசாஸ்திரம்
அரைகின்ற மனையடியாம் கெணிதமோடு
சோகாது கொக்கோகம் வயித்தியஞ்சோசியம்
சொல்தவறா மனுநீதி குலமாந்தர்மம்
வேகாது காயசித்தி யோகமார்க்கம்
மெலிவாகும் யோகமுறை பத்திமார்க்கம்
தாகாது முப்பதின்மேல் அறுபதுக்குள்
சந்ததியள் வருமபோது பத்தியமேதே. 532

## பத்திய விபரம்

பத்தியமே யில்லையடா முப்பதின்மேல்
பாரினிலே யாருக்கும் யேனென்றாக்கால்
சத்தியமே உடல்தளரும் பிராணன்குன்றும்
தவறுமே நாடியது நரம்புங்கூடப்
புத்தியுமே தான்மறையும் புசிப்புங்குன்றும்
புலாவெலும்பு ரோமமுதல் நிறமேமாறும்
அத்தியுமே தான்மெலியும் பிராணநாட்டம்
அசைந்தாடும் லெகுவாகும் மெலிவுதானே. 533

மெலிவேதா னுடல்நொந்த காலந்தன்னில்
மெய்யிலே பத்தியங்க ளிடவும்வேண்டாம்
கடலிலே மழைபெய்த காலந்தன்னில்
கல்லுப்பும் விளையாது பசித்தபோது
உடலிலே பத்தியத்தால் உணவைத்தள்ளில்
உன்பெலமுங் குறைந்துவிடும் பிராணன்குன்றும்
திடலிலே மழைபெய்யக் குடநீர்போலே
தெளிந்தநீர் வந்தாப்போல் மலத்தைத்தள்ளே.
534

தள்ளவே பத்தியங்கள் மலத்தைப்போக்கும்
தள்ளிவிடு மலம்போக்கச் சலனம்போகும்
மெள்ளவே பெருந்துடையும் யிடுப்பின் மேலே
மேனியெங்கும் பிடரிவரை மலந்தானிற்கும்
உள்ளவே உடல்முழுது முன்பின்னெல்லாம்
ஊடாடி நிறைந்திருக்கும் கண்வாய்மூக்கும்
இள்ளவே மலககட்டுப் போககினாக்கால்
கிருபைமெத்த யோகமுறை வாசிவாய்க்கும். 535

## சகுன விபரம்

வாய்க்குமே பட்சிகளுங் குறுக்கேபாய்ந்தால்
வல்லபங்கள் மெத்தவுண்டு வலத்திற்பாய்ந்தால்
ஏய்க்குமே கரிநிறமாம் பட்சியெல்லாம்
யிடமிருந்து வலம்பாயில் மறைக்கச்செய்யும்
சேய்க்குமே பிள்ளையென்றாற் பகையேயாகும்
திருவாணை குருவாணை மெய்யேசொன்னேன்
நாய்க்குமே முப்போது தடுக்குமானால்
நாரணனா லாகாது துன்பஞ்செய்யும். 536

செய்யுமே பசுவரத்து யெதிரேவந்தால்
சீரியே ஓடிவர யெதிர்நின்றாக்கால்
பையுமே தன்கிளையில் மரணம்ஒன்று
பலிக்கேதா னிரையிட்ட பெண்ணாளாகும்
கையிலே ஒன்றில்லை யெமனுக்கங்கே
கால்நடையி லேறிவந்தான் விலாவினோரம்
மெய்யிலே யெமன்வரத்துச் சகுனம்போல
விதவிதமாய் வருவானே லேசாய்த்தானே. 537

தானென்ற ஏமனவன் வருகுங்காலம்
தரைதனிலே பலவிதமே யேமரூபம்
வானென்ற வெளிதனிலே சீவர்க்கெல்லாம்
வாயன்னம் நஞ்சிடுவான் தொண்டைவிக்கி
கோனென்ற தண்டம்போற் சாருபமாவான்
குழந்தையெறி கல்லெறிபோல் அதனில்நிற்பான்
தேனென்ற உண்ணலது செறியாவாரு
செய்திடுவான் பலதொழிலு மிருளைப்போலே, 538

இருள்போல மயக்கமது பித்தம்போல
ஏகிடுவா னுள்நுழைந்து மரணகாலம்
மருள்போல வந்திடுவான் கோபரூபம்
மனிதர்களி லெமரூபந் தானுமாவான்
இருள்போல வொளிமறைப்பான் கபாலந்தன்னை
யெப்போதும் உடலுண்ணும் உயிரேயிச்சை
திருட்போலக் கள்ளனவன் மெய்யேசாய்த்து
சீரணிக்கச் செய்திடுவான் காலனாமே. 539

## காயசுத்தி விபரம்

காலனுக்கு உயிருண்ணும் வேலைதானே
காலனுண்ட உயிரெல்லா மேவல்தானே
சூலனுக்குச் சூரனா யிருக்கவேணும்
துணையுண்டு காயசுத்தி யெமனேசாரான்
வேலனுக்கோ குற்றங்கள் யிரையேயிட்டால்
வேகாது பிராணனுமே வெந்துகாயா
பாலனுக்கோ பசிநீங்கும் கோழைபோகும்
பசியொழியுங் காமனுயிர் பறந்துபோமே. 540

பறந்துபோம் மூலப்புளி தின்றாயானால்
பசிக்கையிலே அன்னமுண்டு பசிதீர்ந்தாப்போல்
சிறந்துபோந் தன்னுடலே காயசுத்தி
தேறிவிடில் வென்றிடலாம் யெமனார்கோழை
சுறந்துபோம் ஞானாமிர்தம் உடலந்தன்னில்
தோன்றிடுமே ஞானவொளி சோதிதானும்
இறந்துபோ மனவிருளும் வெளிச்சங்காணும்
இல்லறத்தி லிருந்தாலு மூத்திதானே. 541

முத்திதான் கபங்கோழை யீளைபோனால்
முத்திசித்தி வாய்க்குமடா மோசமில்லை
சித்தியே யில்லாட்டாற் தெய்வம்வேறே
சிவன்வேறே மால்வேறே பிரமன்வேறே
சத்தியே பஞ்சதொழில் தெய்வக்கூரு
தான்வேறு நாம்வேறு முத்திவேறு
வெத்தியே வடிவேலைக் கண்டார்க்கன்றி
வேணசித்தி வாராது மெலிகுவாயே. 542

மெலியாமற் சொல்லுகிறேன் போகாமற்தான்
மேனியெங்குந் தேடாமற் புருவம்பாரு
மலியாமற் பார்த்தாக்கால் யெதிரேதோணும்
வாய்ப்பகட்டா லாகாது குளிர்ந்தஞானம்
சலியாமல் நீபாரு தானாகத்தான்
தந்திமுகன் சேவடியைத் தனியேபாரு
நலியாம லிருப்பதற்குச் சொன்னார்நல்லோர்
நாம் தேடாக் காரியமேன் நாடுவீரே. 543

நாடுவீர் சொந்தமனை விபகாரங்கள்
நாட்டிடுவீர் சத்துருவை ஓட்டிடுங்கள்
தேடுவீர் பொன்வெள்ளி பஞ்சலோகம்
சிறுமங்கை வாழுதற்கு வாலைக்கீவீர்
போடுவீர் மத்தளங்கள் புஷ்பக்கோலம்
பூவனையு மாடிமுதல் சோடினைக்கீவீர்
கூடுவீர் சாதனங்கள ஆடியோடி
கும்பிட்டுக் கூத்தாடிச் செத்துப்போவீர். 544

செத்துப்போங் காலம்வந்தால் சிரிப்பார்பார்த்து
சிரியாத மனந்தானுஞ் சிரித்துயேய்க்கும்
வித்துப்போம் நாமிட்ட பயிருஞ்சாவி
வெள்ளாண்மை யாகாது மலடுமாகும்
கொத்துப்போங் கூட்டோட்ட குலமுஞ்சாவி
குருகுலமே யாகாது வெந்துபோகும்
இத்துப்போம் வெள்ளாண்மை நாமேசெய்த
ஏரிகரை நஞ்சைபுஞ்சை திட்டுதானே. 545

திட்டுத்தான் பிறர்நகைக்க முத்தரெல்லாம்
தொண்டுபோற் தானிருக்கப் பிலமாஞ்சித்தர்
விட்டுத்தான் போயினரே மேலோரெல்லாம்
வெள்ளாட்டி தள்ளிவிட்ட குப்பைபோல
கட்டுத்தான் செய்தாரே சிவத்தால்முத்தி
காணுமென்று சொன்னாரே நோயற்றாரோ
பட்டுத்தான் போனாரே சிவமே செய்தோர்
பரிவாசி காணாதார் மெலியச்சொன்னார். 546

சொன்னார்கள் மெலிந்தோர்கள் கோடாகோடி
துன்பமென்று விட்டாரே கோடாகோடி
மின்னார்கள் வேசமதாற் கோடாகோடி
மெய்காணாத் தோசத்தார்க் கோடாகோடி
என்னாமற் செய்தறியாப் பாவங்கோடி
எத்தனையோ சொல்லிவைத்தார்
முறைகள்கோடி
நன்னாகச் சாதித்துக் காணாரெல்லாம்
நாட்டினார் மெத்தசித்தி யில்லைதானே. 547

சித்தியில்லை ஆண்டொன்று பழக்கமில்லை
செத்தபின்பு மறுபிறவி காணலாமோ
முத்தியது கண்டோரும் பிறவிகாணார்
முழுமோசந் தானறிந்தால் மெய்யதாகும்
மத்தியென்ன நாமறிதல் குருவால்காணு
வல்லபங்கள் மெத்தவுண்டு குருவினாலே
செத்துமென்ன முத்தியது யெங்கிருக்கும்
சிறுவர்சொன்ன அம்புலிபோற் தேறுவீரே. 548

தேறுவீர் முறைகொண்டு செயலைக்கண்டு
தீபவொளி காணுதற்குத் தூண்டுஞாதி
சாருவீர் மேலோரைச் சார்ந்தாற்தானே
சந்ததிபோற் சேகரிப்பாற் தானேயிவார்
கோருவார் தன்கிளையைக் குமரிப்பாலை
கொட்டுவிப்பார் பாலமுர்தம் ஊட்டுவிப்பார்
நேருவார் குருவென்று சொல்லார்வந்து
நிமிஷத்தில் ஆளடிமை செய்குவாரே. 549

செய்துகொள்ள யிதுபெரிதோ பெரியோரானால்
சிறுபிள்ளை கூடாதோ தேறும்பிள்ளை
வைதுகொள்ள வையாதே குறையேதொட்டால்
வாய்கட்டிக் கேளாதே வருகுந்தானே
நைதுகொண்டு போகாரே யிவர்க்கேஞானம்
நாடுமே நவிலுமே குருவேஞானம்
பெய்துகொண்டு தானிருக்கும் பிறவிக்கூட்டில்
பெரியோர்போலேயிருப்பார் பேருள்ளோரே. 550

பேருள்ளா ரஞ்சுவரோ பெரியோர்ஞாயம்
பெருமைமெத்த வுண்டதனாற் பெலத்தவீரர்
மேருள்ளார் மலைபோலே அசையாரய்யா
மென்மேலும் வளர்ந்திடுமே மெய்யைக்காண்பார்
தாருள்ளார் கண்டாலும் ஓடிப்போவார்
சந்ததிகள் கண்டாக்கால் விடுகுவாரோ
சீருள்ளார் சேர்ந்திடுவார் விரதம்போல
தின்றுபசி யாறுமட்டும் விரதந்தானே. 551

விரதவகை குருநெறியே விரதம்நோன்பு
மேன்மக்க ளானாக்கால் விரதம்பூண்டு
சுரதவகை கண்டுகொண்டு துன்பமற்று
தூங்காமற் தூங்கியவர் சுகத்தைக்கொண்டு
இரதமெனத் தேடாம லிரதந்தானே
யெப்போதுந் தொட்டவரும் விரதம்நீங்கார்
பரதமென ஆடாரே உலகோர்போல
பந்தடித்த பந்தெழும்பும் பந்துபோலே. 552

பந்துபோற் திரண்டுருளும் பாவனைக்கே
பாவாணர் சொல்வினைக்கும் பத்தியார்க்கும்
வந்துபோய் சேகரித்து வளர்ப்பார்பாரு
மதியுடையோர் விதியறிவீர் மரணதுன்பம்
இந்துபோற் தானிருக்கு மிந்தக்கூடு
இதுவுடைய யெத்தனைநாள் யெண்ணிலாதோ
சிந்துபோல் நீர்தூவி வெள்ளையுப்பை
சிந்தினபார் அலைவீசித் திரையைப்போலே. 553

திரைபோல மனமுருண்டு திரண்டு ஆடும்
திருவான அறிவதனைக் கெடுத்துக்கொல்லும்
உரைபோல ஓடியது விழுங்கிக்கொள்ளும்
உவமைசொல்ல முடியாது யிருள்போலாகும்
கரையென்ன வெளியகலம் நீளம்சுத்து
கதவடைத்து மறைத்தாலும் அப்பாற்செல்லும்
துரையென்ன நவவாசல் வழியேசென்று
தொந்தோமென் றாடுமிந்தச் சுருதிபாரே. 554

சுருதிபா ரித்தனைக்கு மாதாரங்கள்
சொல்லயினி யென்னாலே முடியாதய்யா
மிருதிபா ரிதுனாலே சொன்னதெல்லாம்
வேணதுண்டு சோதனை விபரமெல்லாம்
உறுதிபார் மனமறிய விபரமாகும்
உத்துப்பார் ஓடாமற் கூர்ந்துபாரு
அறுதிபார் ஒளிகண்டு கூடுமட்டும்
ஆசானைக் கூடவைத்து விட்டிடாதே. 555

விட்டிடா தேசுருதி குருவைத்தானே
விபரத்தைக் கண்டுகொண்டு மெலிந்திடாதே
சுட்டிடா தேசடத்தைப் பட்டினிபோட்டு
தூங்காமற் பாராதே தவம்நேராது
குட்டிடா தேமாய்கை கோலம்பாரு
குமரிகட்கு அஞ்சாதே கிழவிப்பூணு
நெட்டிடா தேயிருந்தா லென்னசெய்வாம்
நீங்காம லேயிருந்து தூங்குவாயே. 556

## கயரில் படுக்குதல்

தூங்குவாய் வாசிகயர் ஊஞ்சலேரு
நொக்குஉடல் காயமிதிற் சூச்சந்தானே
தேங்குவாய் கண்டதனில் விட்டுப்பாரு
தெருத்திண்ணை யாகாதே அரையாமூலை
ஓங்குவா யுள்ளிருந்து பார்க்கச்சித்தி
உருமத்தி யாகாதே சாதனங்கள்
வீங்குவா யுண்ட அன்னஞ் செரிக்குமுன்னே
மேனியதில் வயர்நிறைய உண்ணொணாதே. 557

உண்ணவேண் டாமென்று தடுக்கவில்லை
உயர்நெஞ்சு தத்தளிக்கும் கருவிமாறும்
எண்ணவேண் டாம்நினைவு செபந்தியானம்
இருந்தஇட மசையாம லிருந்துபாரு
கண்ணிரண்டும் ஒட்டிடுமே புருவமத்தி
கால்வீசி மண்ணிடுமே காலைமாலை
விண்ணிருந்த யிடமதுவே நோக்கிப்பாரு
வேணதுண்டு மூன்றாண்டில் விழலாகாதே. 558

ஆகாதே போனாக்கால் நாமென்செய்வோம்
அல்லாருஞ் சொன்னதெல்லா மறிந்துநில்லு
வேகாதே நீயனலிற் சாம்பலாக
வெந்துதூ ளாகுமுன்னே விரைவாய்ப்பாரு
நீ காதல் கொண்டலைந்து வெகுநாள்சென்று
நிசங்காணத் தெரியாட்டாற் கேலியாகும்
போகாதே விட்டுவிட்டுப் புருவம்பாரு
பொங்கியது தத்தளிக்கும் புருவப்பூட்டே. 559

புருவமே சிறுவாசற் கதவின்தாளைப்
போக்கினாற் தெரியுமடா சொர்க்கமெல்லாம்
கெருவமே னவ்வாசற் கெதியாம்வாசல்
கேட்டவரங் கொடுக்குமல்லோ நேர்மூக்குச்சி
பருவமே தொட்டுவிடில் லேசதாகும்
பகர்ந்தாரே மனமிரங்கி உந்தனுக்கு
அருபமே காணுதற்கு என்னசொன்னார்
ஆர்சொல்வார் தாய்தந்தை சொல்லிடாரே. 560

சொன்னார்கள் பெரியோரும் யெளியோர்பேரில்
துயர்வைத்துச் சொன்னாரே பழிக்கேயஞ்சி
மின்னார்கள் சிற்றின்பந் தானேசொல்லும்
மேலின்பங் கண்டவர்க்கே யல்லாதுண்டோ
பொன்னார்கள் கோவில்குளம் புழுக்கூடெங்கும்
புலாலிறச்சிக் குள்ளிருக்குஞ் சோதிமுத்தி
நன்னார்கள் கண்டதனைக் கீரியோதி
நவின்றதனைப் பாராட்டால் யென்செய்வோம். 561

என்செய்வோம் பாடுபட்டார் பலனடைந்தார்
இப்பொருளைக் காணாட்டா லென்னசெய்வோம்
பின்செய்வோ மென்றாக்கால் கிழமாமூப்பூ
பெருந்துணையாய் நடந்துவரும் தொடர்ந்துகூடி
முன்செய்வோ மென்றாக்கால் முப்பதுக்குள்
முன்மறந்து பின்நினைந்த முறமையாச்சு
கன்நெஞ்சர் நினைவிருக்கு மிருளாங்காடு
காடுவெட்டித் திருத்துவதற் கென்செய்வோமே. 562

என்செய்வோம் புத்திசொல்லி அமூர்தம்வார்த்தும்
இணங்காத மடையருக்கு அபராதங்கள்
பொன்செய்தும் வறுமைவந்தும் புழுக்கூட்டிற்கு
பொதுவனார் வந்திடித்தும் புலைநோய்வந்தும்
மண்பசியாந் தீயிட்டும் பித்தங்கோழை
வாதமுடன் தொந்தித்து நலியச்செய்தும்
மின்செய்த நரைமூப்புச் சாக்காடேதான்
மேலிட்டுந் தோணறியாக் குரைப்பதேதே. 563

உரைப்பதெது சொல்லறியா ரிணங்குவாரோ
ஒருமொழியை நம்பாட்டாற் குருவென்செய்வார்
விரைப்பதெது தன்னையன்றிச் சொல்வதேது
மேனியுட லறியார்க்கு மெல்லியில்லம்
கரைப்பதெது அவர்மனதைக் கரைக்கலாமோ
காசினியில் வெளிமறைந்தால் மனமேமாளும்
சிரைப்பதெது அறிவன்றி மனமேமாள
தீயருக்கு யெட்டாது அறிவின்சோதி. 564

அறிவினொளி சோதிகண்டோர் சோதிகாண்பார்
அய்யாகேள் கோடிமதி கோடிசூரியன்
பிரிவினொளி கொண்டல்லோ சோதிகாணும்
பெருஞ்சோதி சிறுஒளியா மனக்கண்ணாலே
குருவினொளி காண்பதற்கு அறிவின்கண்ணால்
கொண்டுணர வேணுமல்லோ நாமென்செய்வோம்
தருவினுரு காண்பதுவும் கண்ணேபோல
தன்னுருவைப் பார்ப்பதற்கு அறிவேசோதி. 565

## அறிவே சோதி

சோதியென்ன பெருஞ்சோதி அறிவாற்றானுந்
துலங்குவது வேதபொருள் பொருளாம்விண்ணு
பாதியிதிற் கண்டிடலா மறிவாற்றானே
பழம்பாதி சொல்லவென்றால் வாலைவந்தே
சேதியதிற் சொல்லிவைப்பாள் தினமுந்தானே
தினந்தினமும் வந்தாலும் ருசியேகாணும்
கோதியவள் சொருகிடுவாள் முடியாள்வாலை
கோவணத்தை யீந்தாலும் பிடுங்கிக்கொள்வாள். 566

கொள்வதொடு முக்காலுங் கொடுக்கேனென்பாள்
கோவணம்போ லல்லவது பெருநீழந்தான்
மொழிவதென்ன யென்னம்மை லேசாய்த்தானோ
மோகினியுங் காணாது பெண்ணும்போகா
தழுவதென்ன கண்ணாரக் கண்டகாட்சி
சாகும்வரை பார்த்திருப்பாள் முழுதும்பார்ப்பாள்
அழுவதென்ன அவள்வந்து தானேயாகி
ஆக்கைதனைக் கைகொண்டு ஆட்டுவிப்பாள். 567

விப்பாளே தன்பொருளை யடக்கிவைப்பாள்
மேனியதைக் காட்டிடுவாள் பொருளைக்
காட்டாள்
முப்பாளே வாவென்பாள் நான்தானென்பாள்
முறமையது தவறாளே வெகுநாள்யோகி
அப்பாலே வந்தாக்காற் கிட்டவைப்பாள்
ஆர்சொல்லுங் கேளாளே அதன்மேலப்பா
எப்பாலே யேதுமில்லை மடிமேல்வைத்து
எந்தனுக்கு நாயகனே எனச்சொல்வாளே: 568

சொல்வாளே அதில் மயங்கிச் சிக்கவேண்டாம்
தோகையல்லோ அருளுருவே கவனமாய்நில்
வெல்வாளே சித்தர்களைப் பழையநீலி
வேதத்தை உடையாக உடுத்திக்கொண்டு
மல்வாளே நானிருக்கே னென்றுசொல்லி
வயற்றெறிச்சல் பட்டிடுவாள் ஓடிப்போவாள்
கைப்பாளே யாகாது கட்டிப்பாரு
கதவடைத்து வாசிகட்டக் கெஞ்சுவாளே. 569

கெஞ்சுவாள் மெய்மெலிந்து நொந்துநைந்து
கிருகிென்று தான்சுழன்று பதறிச்சுற்றி
அஞ்சுவாள் பேய்ப்பறைச்சி பிழைப்பில்லாமல்
ஆருக்கு மெட்டாளே விட்டுத்தொட்டு
மிஞ்சுவாள் நகைத்தாக்கால் மூண்டியாகி
வேணதெல்லாந் தாரேனென்று ஓடிப்போவாள்
மஞ்சுபோற் தானிருண்ட இருளைப்போல
மாபறைச்சி கனவனத்தி ரூபமாறி. 570

மாறியே பெண்ரூபம் ஆணேயாகி
மௌனியா யலியாகி வாயைமூடி
கூறியே கைகாட்டி 'வாயைப்பொத்தி
குடுகுடென்று ஓடிடுவாள் திரும்பிப்பார்ப்பார்
தேறியே தான்வருவாள் மோகமென்பாள்
சிங்காரத் தோடிருந்து நடித்துருபி
கூறியந்தச் சொல்லாலே வெகுநாட்சென்று
குருநகை காட்டிடுவாள் வெட்கமாவாள். 571

வெட்கியவள் போலிருப்பாள் ரூபங்காணாள்
மேதகைய உடல்தொடவும் எட்டாள்கிட்டாள்
துட்கியவள் சொல்லடங்காள் மதன்யோ லுள்ளாள்
தூங்கவிட ஒட்டாளே விழித்திடாளே
மட்கியே பேர்லிப்பாள் வசனியாளே
வாய்வார்த்தை கேட்பதற்குத் தவமேவேணும்
சொக்கியே போகாதே அவளேவந்தால்
துன்பம்வந்து நேர்ந்துவிடும் நினைவாய்நில்லே. 572

நினைவென்ன அவள்தானே உள்ளிருந்து
நேரிலே வெளியேறிக் குதித்துநிற்பாள்
துணையென்ன பேசிடுவாள் சுழிச்துப்பார்த்தால்
தூரத்தி லேகிடுவாள் கண்ணுக்கெட்டாள்
இணையென்ன நாமிருந்தா ளவனுந்தானே
ஏரிட்டுப் பாராளே சம்பிரதாயம்
மனையென்ன உட்காரச் சொன்னாலந்த
வாயென்ன மூடுமுன்னே மறைகுவாளே. 573

மறைகுவாள் வந்திடுவாள் உல்லாசிப்பாள்
வந்ததையும் போனதையும் மறைத்துநிற்பாள்
திறையென்ன உடல்நிறமும் உருவுமாறி
சிறுகன்னி பெருங்குமரி கிழவியாவாள்
துறையென்ன ஓர்நிலையில் நிற்காலந்த
துணைவள்ளி யெவ்விதமும் விடுகாள்நம்மை
பறையென்ன இவள்தானே நமக்குமுன்னே
பரியாசஞ் செய்தாற்போற் சாலஞ்செய்வாள். 574

சாலங்கள் விளையாட்டு அனேகஞ்செய்வாள்
தாயவளும் குட்டிமுன்னே தாலியில்லாள்
கோலங்கள் பலரூபம் யெடுத்தேயாடி
கோடியென்ன பலகோடி தொழிலுமாடி
ஆலங்க ளிட்டிடுவாள் அழகில்லாளே
அடித்தாலும் வையாதாள் வந்தாற்பேசாள்
தூலமதி லிப்படியே யிவள்சொரூபம்
சொல்லுமே சொல்லாளே வாய்திறந்தே. 575

வாய்திறந்து சொன்னாக்கால் முத்திசித்தி
வல்லபங்கள் பேசிடலாஞ் சித்திதானே
தாய்கொண்டு பேசரியார் சித்தராகார்
சமுசாரி போலாகும் வாலைகண்டால்
நோய்கொண்டு யிருப்பார்கள் பேச்சில்லாட்டால்
நுண்ணறிவு யிருந்தாக்கால் பேசுவாளாம்
பாய்கொண்டு போவார்கள் யெங்கேகண்பார்
பத்தினியைக் கண்டாக்காற் பேசுவீரே. 576

பேசவே நான்காணேன் வெகுநாட்சென்று
பேர்பெரிய சோதித்தாய் ரூபத்தாலே
கூசவே யெனைக்கண்டு கூசவேண்டாம்
குமரியல்ல நான்கிழவி சேரவேண்டாம்
காசுமே லிச்சையுண்டு யெனக்குங்கூட
கன்னிசட மெடுத்தாக்கால் ஆசைபொங்கும்
தூசுபோ லிடம்பொருளைச் சேகரித்து
துன்பமற்று யென்னுடனே வாழென்றாளே. 577

என்றாளே வாணிசொல்ல யானுங்கேட்டு
இடம்பொருளைச் சேகரிக்க யெத்தனித்தேன்
குன்றாளே யவள்தானுந் திரும்பிவந்து
குடிகெடுக்கும் பின்விடுவாய் நானேனென்றாள்
அன்றாளே யின்றுவரை கிழவிதானே
ஆருக்கு மாகாளே நல்லோர்க்குத்தான்
இன்றாளே நான்கண்டு தெண்டம்பண்ணி
எத்தனித்தேன் உச்சரிக்க ஓடினாளே. 578

ஓடினாள் பேசுவாயா வென்றுகேட்டேன்
ஒருபொழுது சிறுநகையாற் தந்தங்காட்டி
மாடிமே லேறினாள் யானுஞ்சென்றேன்
மருமனைவி நீபோபோ யென்றுசொன்னாள்
கூடினா ளெனைக்கூடி முத்தமிட்டாள்
குமரியெந்தன் கன்னத்தி லிச்சையுள்ளாள்
பேடிநீ யென்றுசொன்னாள் போடியென்றேன்
பேச்சறிந்து பேசாமல் கிறுக்கானாளே. 579

ஆனதினால் மயிர்பிடித்து அறைந்துகையை
அடிவயத்திற் கட்டென்று விரல்நானிட்டு
வீணதனால் துன்பமிட்ட பதியேபெண்ணே
மெல்லழகி நீநில்லு மெனக்கேனென்றேன்
தூணதனில் முதுவிநடுத் தம்பத்தோரம்
துணையிருக்கே னுடலோரம் யிடங்கொ
டென்றாள்
பேணதனை நீயிருக்க வேணுமென்றால்
பிலாவெலும்பி லூடதனைப் பிலவென்றேனே. 580

பிலக்கச்செய் யெந்தனுட காயந்தன்னை
பிலக்கவே நீயிருந்து தூங்குயென்றேன்
வலுக்கச்செய் யென்றசொல் லவளுங்கேட்டு
வாயில்மண்ணைப் போட்டாயே யென்றாள்கூவி
பலுக்கச்செய் காயசித்தி நிற்பேனானால்
பரிவாசி நிலைத்துவிடும் நிற்பாய்கல்லாய்
மெலுக்கச்செய் யெந்தனுக்குத் துணையுந்தானே.
வெள்ளாட்டி தோழிப்பெண் சகியென்றாளே.
581

என்றாளே பாவிபழி காரநீவி
இத்தனைக்கும் பெண்ரூபி தனமிருந்தும்
மன்றாளே வாய்நடை அழகுள்ளாளும்
மருவிநமைத் தேடியவள் துணையுங்கேட்டாள்
தின்றாளே கருவிகளைச் செயித்தபாவி
சித்திரத்தைப் போலிருந்தும் துணைவாவென்றாள்
மின்றாளே வெட்கமில்லை குறியிடத்தில்
வேண்புண்ணை வைத்திருந்தாள் கண்டு
கொள்ளே. 582

கண்டுகொண்டு அதினாலே தள்ளிவைத்தேன்
காயப்பெண் நீயல்ல சூத்திரச்சி
மொண்டுகொண்டே னுன்னுருவு மெனக்குவேண்டாம்
மோகத்துக் கெதிராகு முனிசீயென்றேன்
பண்டுகொண்டாள் பலரிடத்தும் படுக்கைப்பாவி
பார்த்தவர்கள் விட்டிடல்போல் யானும்விட்டேன்
தொண்டுகொண்டாள் வெகுநாளே பாவிநீலி
துணையெனக்கு இல்லையென்றாள் வெட்க
மாச்சே. 583

ஆச்சப்பா யான்கேட்ட வரத்திற்கஞ்சி
ஆகூவென் றேயழுதாள ஏழைநீலி
ஏச்சப்பா முன்புத்தி பின்னாம்புத்தி
எப்புத்தி கற்றோர்க்கு மேழையாவாள்
நீச்சப்பா நாமில்லாக் காலந்தன்னில்
நிகழ்கால மெங்கிருக்கு மிவளுஞ்சாவாள்
போச்சபபா தந்திரங்கள் விழலாய்ப்போகும்
பொக்கிஷங்கள் திறந்துவிடி லேசுதானே. 584

பொக்கிஷக் கோற்திறவு வுள்ளேதானே
புதுக்குடுசு ஒன்றுண்டு புத்திதானே
கக்கிஷக் கோலுண்டு தீரவேணும்
கணவனையே பிரிவாளே கட்டுகட்டு
திக்கிஷச் சோறுண்டு பூநீருண்டு
தினந்தினமு அமுர்தப்பால் கொடுப்பாருண்டு
செக்கிசச் சொக்கியவள் சொக்கினாளே
தீராது மாயவலை தன்னிற்பாரே. 585

பாரப்பா யிவ்விதமே சித்தரெல்லாம்
பரியாசங் காணாமல் மயங்கினார்கள்
தேரப்பா யிவள்தானும் பெண்ணுமல்ல
சித்திரத்தைப் போலுடையாள் ரூபமல்ல
ஏரப்பா சென்னிமலை உச்சிமேலே
இவளிருக்கு மிடந்தாண்டு குடிசையில்லை
நேரப்பா சொல்லவில்லை சித்தரெல்லாம்
நேர்நிமிர்ந்து பார்த்தாலும் விடேனென்றாளே. 586

என்றவளைப் பிடித்திழுத்துத் தாலிகட்டி
ஏகாந்த வனமிருந்த முத்தர்காணார்
அன்றவளை விட்டார்கள் ஓடிப்போனாள்
அறுத்தடைத்த வாசல்கண்டார் தானும்விட்டார்
குன்றவளை யசையாமற் செய்தோர்க்கல்லால்
கோபிப்பாள் கண்டவரைத் திருட்டுமூளி
சென்றவளைக் கண்டாலும் செயநீர்கண்டும்
திரும்பிமுகம் பாராமல் திருத்துவாயே. 587

## சாயாதேவி

திருத்துவையே யானாக்கா லெல்லாமாகும்
செயநீரைக் கொட்டிவிட்டா லேசேயாகும்
பொருத்துவையே யானாக்கால் பொல்லாப்பேகும்
புடைசூழுங் கரணங்கள் தொண்டுபண்ணும்
இருத்துவையே யானாக்காற் பனிரெண்டாண்டு
ஏகாமல் நின்றிடுவாள் சொரூபப்பெண்ணாய்
குருத்துவையே பத்தாண்டிற் கண்டுகொண்டோர்
கோடிவித்தை கண்டுகொண்டார் தொண்
டானாளே. 588

ஆனாளே தொண்டுசெய்தும் அடிமையாகாள்
ஆச்சரியம் அரூபியவள் கைக்கெட்டாது
வானாளே வீடுடையாள் யிறங்கிவாராள்
வையகத்திற் படிநடக்க மண்மேல்வாராள்
கோனாளே கேட்டதெல்லா மிந்தாவென்பாள்
குமரியுரு மாறிடுவாள் வாணிதானும்
தானாளே செய்வதுண்டு கேட்டலோடு
சம்மதித்து வருவதுண்டு அகப்படாளே. 589

அகப்படாள் கெஞ்சியும்வாய் பொத்தினாலும்
ஆருக்கு மெட்டாளே கைக்கெட்டாளே
வகப்படாள் சேலைகொண்டு அணியும்பூண்டு
வாசனைகள் சேகரமாய் வராளேபாவி
துகப்படாள் வந்தாற்போல் வாணிதானே
சொல்லையுமே தாராளே நிருவாணித்தாய்
கசப்படாள் வெட்கியவள் வந்தாற்போல
கைரெண்டும் பொத்தியரை கவிழுவாளே. 590

கவிழுவாள் வாழவந்தாள் வாழாக்கற்பு
கருத்துடையாள் நெறியுடையாள் கவலைரூபி
தவிழுவா ளெல்லோர்க்கும் நானேதானோ
தரைதனிலே முனிரிஷிகள் சித்தர்க்கெல்லாம்
அவிழுவாள் விரிசீலை யுடுத்திக்கொள்வாள்
அங்கங்கே ஆபரணம் விரித்துக்காட்டி
உவிழுவாள் உள்ளபல்நா வின்பல்காவி
உத்தரியச் சேலைதனை யுதறிநீட்டே. 591

நீட்டியே உத்தரிய மடியாஞ்சேலை
நேர்முகமாய்க் கவிழ்ந்திருந்து நிமிர்ந்தகொங்கை
ஆட்டியே அசையாமல் சிமிளைப்போல
ஆபரண மேலேற்றிக் கொசவமிட்டாள்
ஊட்டியே தாம்பூலம் படுக்கையாடை
உண்டபின்பு யித்தனைக்கும் சமர்க்களத்தி
நீட்டியே பேசாமற் சகியோமென்று
நெடுந்தூரம் நடப்பவர்போல் பின்னிட்டாளே. 592

பின்னிட்ட மெல்லழகி முன்னாற்தூரம்
பெரியஅடி வையாமல் சின்னப்பாதம்
முன்னிட்டுப் போகாமற் தனியேநின்று
மோகமிட்டுப் பாராதே எமனானென்றாள்
கன்னிட்டுத் தான்திரும்பி வெளியேவந்தேன்
கால்நடையாய்ப் போனாளே அவளைக் காணேன்
என்னிட்டு என்னிடமே பின்னால்வந்தாள்
ஏமகிரி ராச்சதன்போல் வாலைதானே. 593

வாலையோ யிவள்தானோ நம்பக்கூடா
மயங்காமல் நின்றாக்காற் சித்தியாகும்
பாலையே சொரிவதுபோல் நமனார்தானே
பரதேசி யென்றவளைச் சினேகிப்பாளோ
கோலையே ஊணாளே கிழவிதானும்
கொடியஅனல் நினைந்தாலுங் கெட்டுப்போவார்
சேலையே நினையாதீர குடும்பம்வேண்டாம்
சீச்சீசீ தேவடியாள் வாலைதானே. 594

வாலைதான் பெண்ணாகு மரணம்வேண்டாம்
மனவேண்டாம் தனவேண்டாம் நினைவு வேண்டாம்
சேலைதான் ரெண்டாகும் பட்டுவேண்டாம்
சினப்வேண்டாம் குருவேண்டாந் தீர்த்தம் வேண்டாம்
பாலையே வேண்டாமே மேடைவேண்டாம்
பரமபதம் வேணுமென்றா லறிவேபோதும்
காலையே அந்திசநது உச்சிராத்திரி
காரிருளைப் போக்குதற்குப் போதுமறிவே. 595

போதுமே அறிவோடு குருவாஞ்சாஸ்திரம்
புதைத்தபொரு ளெடுப்பதற்குச் சாதனங்கள்
யேதுவோ யீதாகும் வனமேவேண்டாம்
இல்லறத்தி லோர்மூலை யெங்கு முண்டு
சாதுவே யிவ்விடத்தே கண்டுகொண்டார்
தனித்திருந்து பார்த்ததினாற் பலன்
பெற்றோர்கள்
கோதுவே தாராதே குற்றமில்லை
குமரியிட மிருந்தாலுங் பத்தியங்களிலையே. 596

இல்லையே முப்பத்தின்மேற் பத்தியங்கள்
இடம்வேணும் பொருள்வேணு மேவல்வேணும்
வல்லையே முப்பதுக்குள் வந்துதானால்
வலுக்குமே பத்தியங்கள் வேணும் வேணும்
தொல்லையே பத்தியங்க ளதனாறதானே
சுகமில்லை சாதனங்கள் விட்டுப்போட்டார்
கல்லையே யெறிந்தாப்போ லெதிர்முன்னாலே
காரணங்கள் பத்தியம்போல் சொல்லி
வைத்தார். 597

வைத்தாரே சொல்லியவர் தேறுவாரோ
வயதேறிற் பத்தியங்கள் விடவேவேணும்
பைத்தாறை விட்டாலே வருஷம்ஆறு
பையனதில் விழுவானே பனிரெண் டாண்டே
நொய்தாரைக் கண்டானே யதனாலப்பா
நுண்ணறிவோர்க் கித்தனையு மல்லஅல்ல
நைதாரைப் போலவுமே அறிவுள்ளோரும்
நடுநாடி கண்டறிந்தார் பெரியோர்தானே. 598

## பத்திய விவரம்

பெரியோர்க்கு முரியோர்க்குஞ் சிறியோருக்கும்
பேசுகின்ற அறுசுவைகள் முப்பதுக்குள்
கரியோர்க்கும் புளியுப்பு ருசியாம்பாகம்
கண்டமதில் நெஞ்சடைப்பு கோழையீளை
அரியோர்க்கு அதுவகலப் பத்தியங்கள்
ஆக்கினார் முப்பதின்மேற் சாதனங்கள்
பரியோர்க்குச் சாதனங்கள் முப்பதுக்குள்
பலிக்காது பலிப்பதற்கு சுவையைத்தள்ளே. 599

தள்ளவே வேணுமடா தவசியானால்
தவம்பூணுங் குருவேணுஞ் சாஸ்திரம்வேணும்
மெள்ளவே குடிசையது வேணுங்காணும்
வெட்டவெளி தனிற்தவசு சித்தியாது
கொள்ளையே திரிவார்கள் மடமேவேண்டாம்
கொடுங்குமரி வருமுன்னே தொடவேவேணும்
இல்லையே பத்தியங்க ளறிவுள்ளோர்க்கு
இல்லறத்தி லிருந்தாலும் வனஞ்சென்றாலே. 600

சென்றாலே மலைவனங்கள் ஊர்கள்தோறும்
சிறுவர்கவி பாடுகின்ற விளையாட்டேபோல்
நின்றாலே மணற்சோற்றை ஆக்குவார்போல்
நெடுநாளே திரிந்தாலும் பலனேயில்லை
குன்றார்க்கு வீடிருந்துந் தவமேசித்தி
குடிசையென்ன செய்யுமடா அறிவுள்ளோரே
மன்றாடி யிப்படியே திரிந்துகெட்டார்
மனுவுழுது வுண்டஅன்னந் தின்னத்தானே. 601

## பொய்த் தவசி

தானென்ற மனங்கொண்டு ஊர்ச்சோறுண்டு
தவசியெனத் தானிருந்து குறடுபூண்டு
ஊனென்ற உடல்வளர்த்துச் சடைநாணிட்டு
உத்தமர்போ லேதாடி உவமைபூண்டு
தேனென்ற மொழிபேசிக் காவியிட்டு
தெருவெங்கும் பாடிடுவார் திவசச்சோர்க்கு
மானென்ற அபிமானங் காசேகொண்டு
வாய்மதங்கள் பேசுவார் தன்னைக்காணார். 602

காணார்கள் கண்டபலன் இரைதான்அன்னம்
கையோடே வைத்திருப்பார் பாத்திரமென்பார்
ஊணோடோ கையோடே மனமும்ஓடே
உதறுகால் நடையோடே ஊருநாடே
வீணோர்கள் குடும்பமதை யழித்தேவேறு
வேறுமனை கெடுப்பதற்கோ வேசம்பூண்டார்
சாணோர்கள் குடல்வலியே பசியேசோரே
தாரித்திரம் பிச்சைக்கஞ்சி ஆண்டிதானே. 603

ஆண்டியே பண்டாரச் சாதியோரே
அறிவுதனை விட்டவரே நீசமாரே
தோண்டிவேசம் போட்டவரே தவங்கெட்டாரே
தொல்லுலகில் வந்தவரிற் சுகங்கெட்டோரே
வேண்டியென்ன அறுசுவைக்கி யலைந்தீர்நீரே
மெய்மறந்தீர் பொய்யறிந்தீர் விதவையானீர்
பாண்டியெனப் பேர்கொண்டும் ஆண்டியானீர்
பரதேசி யானதென்ன பிச்சைச்சோற்கே. 604

சோறுக்கோ அறுசுவைக்கோ துணிக்குத்தானோ
சுகம்வேண்டி யிவ்வளவுங் கையையேந்தி
நீருக்கோ ஓடேந்தி வாசல்நின்று
நிமிர்ந்தாக்கால் நீரிடார் தலைகவிழ்ந்தே
பாருக்கோ பாதபதைப் பார்த்தேநின்று
பரிவாசி காணாமற் கூசிநின்று
மோருக்கோ நின்றிருப்பீர் வாசல்தோறும்
மொய்குழலா ரிட்டஅன்னம் வீடுதானே. 605

வீடுதான் சோறுதருங் காடுதாறா
மேன்மக்கள் மலையேறில் புசிப்பிணங்கா
கூடுதான் தவமிணங்கா மன்நீர்சேறா
குருவிருந்த யிடந்தனிலே யெல்லாமுண்டு
பாடுதான் வேண்டாமே குருவேபோதும்
பசித்திருக்க வையாதே சித்தியானால்
மாடுதான் போற்றிரியும் யெருதாங்கோவில்
மாடுபோ லேதிரியு மெங்குந்தானே. 606

எங்கெங்குஞ் செல்லுமடா அண்டகோளம்
ஏகவெளி ஐம்பூத மெங்குந்தானே
அங்கங்கே அருளிருக்குந் துணையுஞ்செய்யும்
ஆர்வேண்டு மவர்களுக்கு மக்களுக்கும்
இங்கங்கு இவ்விடமுஞ் சென்றார்செல் லும்
இச்சைவைத்தோர் சென்றிடங்கள் ஏவல்செய்யும்
வங்கங்கள் மனஉருகும உடலினாலே
மாவறிவு கொண்டுமண்மேல் திரிகின்றோமே. 607

இன்றாமே நாளைமுத லெந்தநாளும்
எங்கள்முறை குலதர்ம சாதிமார்க்கம்
நன்றாமே நான்நினைக்க வந்துசேரும்
நாட்டுள்ளோர் நமைநினைக்க வந்துசேர்வோம்
சென்றாமே யாம்போகோம் நினைத்தாற்போவோம்
தேசத்தி லிப்படியே சேதியோரே
அன்றாமே யெங்களுக்கு யிந்தவேலை
ஆதித்தன் போலவுயே தினமுந்தானே 608

தினந்தானே நாள்வரவு யெண்ணித்தானே
தினந்தினமுஞ் சதுர்யுகமும் யுகமாமந்தம்
மனந்தானே யாமல்ல அறிவேமேலா
வாய்த்தறிவு பேரறிவு அறிவுமுற்றும்
சினந்தானே சாபமெனக் கையிற்கொண்டு
தெருவெங்குந் திரியோமே கையிலுண்டு
முனந்தானே யெம்மறிவு கண்டுகொள்ளு
மூர்க்கருக்கு அஞ்சாதே மேலோர்க்கஞ்சே. 609

அஞ்சுமே நல்லோர்க்கும் ஞாயத்தோர்க்கும்
அகடிதங்கள் பேசேர்மே வரமேயீவோம்
கெஞ்சுவோம் வரங்கொடுக்கத் தானேநத்தி
கிளறுவோம் உள்ளிருந்த ஒளிப்பையெல்லாம்
மஞ்சுபோற் குளிர்ந்திடுவோம் வாய்கையாலே
மறுபிறவி யில்லார்க்குக் கண்டுதானே
பஞ்சுபோல் நாமிருப்போ மேருவாவோம்
பார்த்தவர்க்குச் சிறுபிள்ளை கைலாசந்தானே.
610

கயிலாசமென்னவென்றால் திதியுஞ் சிருஷ்டி
களறுகிறோம் சம்மார மூன்றுந்தானே
பயிலாக நம்மிடத்தில் ஞானக்கண்ணில்
பாரிந்த மூன்றுசித்தி நம்முள்ளுண்டு
ஒயிலாக வைத்திருக்கோம் பொருளைத்தானே
ஒருபோதும் நம்மைவிட்டுப் போகாயேகா
வெயிலாக நாமிட்ட கோபந்தானே
வெந்துதல்லோ மேகமது சாபந்தானே. 611

சாபம்போல் வரமுண்டு கேட்டாலீவோம்
தாரித்திரம் நம்மிடத்தே யில்லையில்லை
கோபம்போற் சொல்லிவிட்டோம் குழந்தைநம்மை
குருவென்று யெண்ணாதாற் தூசனித்தோம்
கூபம்போல் நீரிருந்திர் அன்னீரன்றி
குழந்தைகளே யுங்களுக்கு மேகமன்றி
தேகந்தா னுண்டோசொல் லின்பமுண்டோ
சிறுகன்னி சந்தோஷந் தானுமுண்டோ 612

உண்டோதான் மாடமொடு கூடகோபுரம்
உப்பரிகை தாளமேள வாத்தியங்கள்
மண்டேதா னுங்களுக்கு நீரேயன்றி
வையகத்தில் நீரன்றி மனுக்களுண்டோ
கண்டேதா னெனைவிட்டீர் நானுமீயேன்
கர்மமுள்ள மானிடரே மேகமீயேன்
விண்டுநான் சொன்னேனே யெனக்கேமேகம்
மெய்மண்ணு உங்களுக்கு மேகமெந்தனுக்கே. 613

மேகத்தை நான்விற்பேன் கிரையஞ்செய்வேன்
மெல்லியற்கு அஞ்சியல்லோ கொஞ்சமீய்ந்தேன்
தாகந்தான் கேட்டாலும் நான்கொடுக்கேன்
சந்ததிகட் கஞ்சியல்லோ தூரச்செய்தேன்
சோகந்தான் நாமடைந்தோம் நீரோக்ஷேமம்
துரியபதம் பெற்றவரை அனாதியென்றீர்
காமந்தான் நீரல்லால் உங்கள்க்ஷேமம்
கதவடைப்பேன் யேகமிட்டுக் கெட்டிப்பூட்டே. 614

பூட்டுடைக்க வல்லவரே நீரும்வாரும்
புத்தியில்லா மானிடற்குப் பெரியவீடோ
சாட்டையில்லா நாக்கயற்றா லடிப்பேன்சாபம்
சந்ததிகள் போனாலும் பெற்றுக்கொள்வேன்
கோட்டைவிட்டு நீர்வருவீ ரெனைப்போல்தானே
கொடுமேக மில்லாட்டால் இல்லம் ஆண்டி
தாட்டிகமா யாண்டியென்றால் அழிப்பேன்மேகம்
அல்லோரும் ஆண்டியா யிருப்போம்நாமே. 615

நாமளுமே கோபத்தாற் சொன்னோமப்பா
நன்குணர்வீ ரெனைக்கண்டு கேட்டுக்கொள்ளும்
தாமளுமே எனைலேசாய் மதிப்பீரானால்
சந்ததிகள் வேண்டாமே யெனக்குத்தானே
நீமளுமே வாழுதற்கு யெனதுசித்தி
நேர்மைவத்தை ஈடுவைக்க லேசாய்ச்சொன்னீர்
கோமளமே கருநிறமே மேகசூதம்
குமரிகன்னி யென்மனைவி கெற்பமீயேன். 616

ஈய்வேனோ மும்மூர்த்தி உலகஞாயம்
எப்படியென் றெண்ணுகிறீர் பொதுவுமாகும்
சாய்வேனோ மண்மலையிங் கடலுந்தானே
சந்ததிகள் தங்களுக்கு பொதுவதாகுங்
ஓய்வேனோ வெளிவாய்வு மேகமோடு
உடுகதிருஞ் சந்திரனும் பொதுவதாகுந்
காய்வேனோ வெளிதானே பொதுவில்நின்ற
கங்குலைப்போ லேகருத்த மேகம்நின்றே. 617

நின்றுதே மேகமொடு வெளியுந்தானே
நிலைதவறி நிற்கவில்லை ஞாயமுண்டு
அன்றிதே யின்று முதல் வெகுநாள்தொட்டு
ஆகாயம் நின்றதைப்போல் நாலுபூதம்
மன்றிதே நிற்கவில்லை ஞாயமில்லை.
மறையில்லை மறையிருந்தால் மாறுமோதான்
கன்றதுவும் பால்குடிக்கத் தாயேகோண
கர்த்தனுமே படைத்தானே பஞ்சபூதம். 618

பூதென்ற பிரம்பூதம் அஞ்சினுள்ளே
பொரியில்லாப் பூதமொன்று வெளியிற்தானே
ஓதென்று சொல்லாதே ஒன்றுங்கேழா
உவமையில்லாத் தெய்வமது வெளியேசோதி
காதென்ற பெண்ணைப்போற் கவலைசெய்யும்
கனமண்ணும் வாய்வுதீ மேகமோடு
சூதென்று செய்துவிடும் நான்குபூதம்
துரியபதங் கண்டவர்க்கும் சிறியோர்க்கேதே. 619

ஏதொன்றுஞ் செய்யாத பூதமோடு
இருந்தினா லிப்பூதஞ் செய்யுந்தானே
ஊதென்று உட்காத்து கண்டதாலே
ஊடுருவி யான்கண்ட சேமத்தாலே
சூதென்று கண்டேனே நான்குபூதம்
தொல்லுலகில் யாவருக்கும் பொதுவில்லாதே
ஏதென்று கேட்டேனே முனியில்லாதால்
எங்கள்நிலை தவறினமே யெனச்சொன்னாரே. 620

சொன்னதனைக் கொண்டுமே விசாரித்தேன்யான்
துரியபத வொளிகண்ணாம் ஞானக்கண்ணில்
இன்னதனில் விபகாரம் மண்ணும்அப்பும்
இடுகாற்று தன்னுடனே தேய்வுநாலும்
என்னதனில் ஞாயமில்லாப் பக்கஞ்சாய
ஏதென்று கேட்பதற்குக் கூப்பிட்டேன்யான்
முன்னதனில் வந்திருந்தார் நாலுபேரும்
முறைதவறும் நால்வரையும் தட்டினேனே. 621

தட்டினே னினிமேலே வெளியேபோலத்
தங்குதா பரமுடனே புற்பூண்டாதி
எட்டினே னென்னோடு சீவரெல்லாம்
இதிற்கண்ட யாவருக்கும் பொதுவுமண்ணே
தெட்டினேன் நிவஞ்சம் போயொழித்தாய்
சிறுபிள்ளை மணற்சோற்றுக் கிச்சையேபோல்
மட்டிநாய் நீபோபோ மண்ணேமண்ணே
மருமண்ணே யாக்கிடுவேன் சமமாய்நில்லே. 622

நில்லென்றால் நிற்காயோ நிற்பாயோநீ
நீள்பிராணன் நாலொடுக்கில் யென்னிதென்று
கல்லென்றால் மண்ணாகுமென் சொல்நாவால்
கவலையை யொழித்தனனே ஒளியுமானேன்
சொல்லென்றாற் சொல்லிடுவேன் பகலேராவாய்
சொல்பெரிதோ பகல்பெரிதோ துணிந்து
சொல்வேன்
வில்லென்றாற் சதைபிழைக்கா தென்சொல்லாலே
விரிகதிரும் கதிராடதிரு மேனியென்னே. 623

## சூரியசாப விபரம்

என்னாலே எனக்காக வைத்திருக்கேன்
என்றாலு மொருசாபஞ் சொல்லிவாரேன்
முன்னாலே யிதுவொன்று முடிந்திருக்கு
முழுகதிருங் குறைவதற்குச் சொல்லிவாரேன்
தன்னாலே யாகுதிது கலியாம் ஆண்டில்
தானடக்கும் அய்யாயிர ரெண்டுபத்து
மண்ணாலே நீர்வறளும் மாரிநீர்போல்
வருஷமூன்று சேரஅதி சயங்கேட்பாயே. 624

கேளப்பா அய்யாயிரம் ரெண்டுபத்து
கெடிமூன்று சேரஅதில் மாதஞ்சித்திரை
பாழப்பா நாள்தேதி மூன்றுதொட்டு
பகருகிறேன் மூன்றுநாள் கதிரேயில்லை
ஊழப்பா சூரியர்க்கு விதிதான் வந்த
உச்சரித்த காலைவிதி பூஜைபாக்கி
சூளப்பா ஆகாமற் சொரூபம் நின்ற
சொக்கிநின்ற பிராணனைப்போல் வருவார்பின்பே. 625

பின்புபார் மற்றோரா மாண்டுதன்னில்
பேசரிய காரணங்கள் வானிற்தோணும்
முன்புதான் கதிர்ஞாயம் வெளிச்சம்போல
முன்தோன்றிப் பின்மறையும் வெளிச்சங்காணும்
என்புபோல் வரிப்பிளப்பு மதிலேகாணும்
எல்லார்க்குந் தோன்றுமது மூன்றாகத்தான்
அன்புபோல் ஒட்டிருககும் ரெண்டுகீத்து
ஆருக்குந் தோற்றாது யெமனார்தானே. 626

தானென்ற அறுநூற்றி யிருபத்தாண்டில்
தாய்மண்ணே அப்புடனே வாய்வுந்தீயும்
ஏனென்று கேட்டேனே நீங்கள் நால்வர்
எப்பொழுதும் வெளிமலையா தைந்தேசேர்ந்து
ஊனென்ற உடம்பெடுத்த நீங்களைவர்
உம்மரிலே வெளிபொதுவே தீயுந்தானே
கோனென்ற வொளிதானே பொதுவதாகும்
குருவாசி மாருதமே பொதுவாங்காற்றே. 627

காற்றோடு மேகமலை பொதுவுதானே
கண்டவைந்து பூதமதில் பொதுவாம்பூதம்
ஊற்றோடு ஆற்றுநீர் பொருந்தினாப்போல்
உறைநீரும் வெளியுடனே தீயுமேகம்
மாற்றோடு மாற்றொட்டல் போலத்தானே
மறைவேதந் தெய்வம்போல் உயிர்வாக்கேபால்
காற்றோடு வெளிசேரல் மின்னல் மேகம்
கண்டுபா ரித்தனையும் பொதுவதாமே. 628

பொதுவேநீ யிதுபோல மற்றோர்பூதம்
பொய்மாய்கை நின்றிருக்கு மண்ணாம்பூமி
எதுவோநீ யாருக்கும் பொதுவல்லாமல்
எங்களைப்போ லானோர்க்கு மில்லாமற்தான்
அதுவோநீ தெய்வமல்ல மாய்கைபூமி
ஆறிலொரு கடமையது கோனுக்கீந்தாய்
மதுவோநீ யிருளானாய் பூமிமண்ணை
வையகத்தி லேபாதி ஏழையாமே. 629

ஏழையே மண்பூமி யில்லாதாலே
எளியோரு மானார்கள் ஆண்டியானார்
பாழையோ மனுப்பதரே துரோகபூமி
பாரினிலே மண்பூமி பெருத்தாற்சீமான்
நாளையே யிப்படியே துரோக பூமி
நாரைமுதற் திண்ணுமல்லோ துரோகபூமி
வேளையோ மன்மதன்போற் துரோகபூமி
மேவிட ஒட்டாது எளியோரைத்தானே. 630

எளியோர்தன் யேக்கமெல்லாம் பூமிகொள்ளும்
எப்பொழுது மிப்பூமி ராசாவாகும்
எளியோரை அடிமையெனச் செய்துவைக்கும்
இப்பூமி பொருந்தொல்லை பிறர்க்குத்தானும்
எளியோரைப் போக்கடிக்கும் வலுத்தோர்தம்மை
எங்கிருந்தும் வரவழைத்துக் கொள்ளுஞ்சாரும்
எளியோரை எளியோரா யாக்கிவிட்டு
இருந்தவிட மசையாமல் நிற்குந்தானே. 631

நின்றிருக்கு மிப்பூமி யிந்தப்பூதம்
நேர்விசும்பில் நீர்மேகம் வாய்வுந்தீயும்
ஒன்றிருக்கும் வெளியதுவே அசையாதய்யா
உண்டாகும் நீர்மேகம் வாய்வுந்தீயும்
நன்றிருக்கும் கதிர்மதியும் உடுக்கள் தீயே
நரருக்கு மேபொதுவே புற்பூண்டுக்கும்
சென்றிருக்கு மேகமது வாயுவுந்தான்
திரைசீவர் புல்பூண்டு தங்களுக்கே. 632

தங்களுக்கு மேபொதுவே வாய்வுமேகம்
சஞ்சரித்து விளையாடும் எல்லோருக்கும்
உங்களுக்கு மெங்களுக்கு மல்லோருக்கும்
ஒத்துவரும் பொதுசமனாய் நாலுபூதம்
எங்களுக்கு முங்களுக்கும் அல்லோருக்கும்
ஏறிவிடு மிறங்கிவிடும் தாளும் நீளும்
அங்களுக்கும் போக்காது யிந்தப்பூமி
அசைந்தாடு மண்மலையுங் கடலுமாய்கை. 633

மாய்கையே யிதுவப்பா மூன்றுந்தானே
வல்லபங்கள் மெத்தஉண்டு நிலைநில்லாது
மாய்கையே யோரிடத்தில் நிற்காதையா
மற்றந்த நால்பூதஞ் சமனாய்நிற்கும்
மாய்கையே பூமியொரு மாயாசத்தி
மாகடலின் பள்ளம்போற் பள்ளஞ்செய்யும்
மாய்கையே மலையைப்போ லுயரச்செய்யும்
மாமண்ணும் நீண்டாப்போல் நீளுந்தானே. 634

நீளுமே மண்மலையுங் கடலுமப்பா
நெடுநாளே ஒத்திருந்தாற் கோனேயாகும்
பாழுமே யிதுதானே ஓரிடத்தில்
பதுங்கினதால் நாம்ஏழை அடிமையானோம்
கோழுமே பொய்ப்பூமி சாபமீவேன்
குருமுனியே யானாக்காற் சமமாய் நில்லு
வாழுமே உன்னுடலுந் துரோகத்தாலே
மானிடற்குக் குஷ்டம்போல் கல்லீவேனே. 635

சவேனே சத்திரிய வசிஷ்டாகேளு
இயம்புமே காகரிசி புசுண்டர் சொல்லும்
மாயுமே கல்லுமுள்ளு மண் மேல்வந்தால்
மானிடர்க ளெங்கிருப்பார் சொல்லுமய்யா
ஓயுமோ ஓயாது மானிடங்கள்
உத்தமர்கள் தானிருப்பார் உலகத்துள்ளே
காயுமோ பழங்கனியு முதிர்ந்திடாது
கனிந்தபின்பு காயோடு வற்றிமாளுமதே. 636

மாளுமே சதுர்யுகமோ அறுபதாச்சு
மறையாச்சு சூரியனார் கோவிலாச்சு
பாழுமே போக்குதற்குத் தீர்த்தமாச்சு
பலபேத முண்டாச்சு அறுபதாச்சு
கேளுமே யிதுகடைசி கலியுகத்தில்
கிளறுகிறே னையாயிர நாற்பதுக்குள்
வாழுமோ யிப்பூமி மண்மேடாகும்
மறைநிலைக்குங் கதிர்நிலைக்கும் ஞானந்தங்கும். 637

தங்குமே யோசனைதான் ரெண்டுமேலே
தார்பூமி யொன்றிருக்கும் ஊரேயொன்று
மங்குமா மரியாதை பொங்கும் பொங்கும்
மானிடர்கள் தவறார்க ளய்யா அய்யா
எங்குமே ஊரானாற் கலகம்வீணே
இக்கதிர்க்கு முன்னாலே கதிராங்காலம்
ஆங்குமே முன்சொன்னேன் முன்னாம்பாகம்
ஆதியந்தம் நடுமத்தி ஆய்ந்துபாரே. 638

## சாதன விஷயங்கள்

ஆய்ந்துபார் பத்தியங்கள் முறைகள் பாகம்
அமைத்திருக்கே னின்னூலி லெவ்விடத்தும்
ஓய்ந்துபார் தனித்திருந்து உற்றுப்பாரு
ஊர்சுற்றுங் கண்ணோடு மனக்கண்சாரு
மாய்ந்துபார் விடியுமுன்னே நாலாஞ்சாமம்
மக்களே யானாக்கா லெழுந்திரிந்து
தேய்ந்துபார் புலன்கருவி மனமொன்றாகி
தீனிதிண்ணப் பல்லசையும் வாருபோலே. 639

போலவே குந்தாதீர் சம்மணங்கள்
பொழுதுபுறப் படுமுன்னே பிறர்காணாமல்
சாலவே பிறர்சத்தங் கேழாப்பக்கம்
தனித்திருந்து பார்க்கையிலே சாய்ந்திடாதே
ஊலவே சத்தமிட்டுத் தூங்கிடாதே
உண்மையென்ன அச்சரத்தைக் கத்திடாதே
ஏலவே கால்கரங்கள் நீட்டிடாதே
இடுப்பதனைக் கோணாதே தலைநேர்நில்லே. 640

நில்லப்பா கண்ணதனை மூடிடாதே
நிமையதனை மேல்நோக்கு கவிழ்ந்திடாதே
வில்லப்பா கையிரண்டுங் கட்டிடாதே
விரித்துநீ யேந்தாதே சவமாய்நில்லு
சொல்லப்பா கேளாதே தடுப்பாய்காதை
துன்பமென்று யெண்ணாதே ஆண்டுமூன்று
கல்லப்பா நிற்பனபோற் சரீரம்பாரு
கதவடைக்கத் திறப்பனபோற் புருவந்தட்டும். 641

தட்டுமே ஒருமுகூர்த்த மிருந்துபாரு
சாதிப்பர் யாண்டொன்று ஆண்டுரெண்டு
கொட்டுமே தேளுருப்போல் விட்டிடாதே
குமரியாசை கொண்டவன்போற் கோருவாய்நீ
வெட்டுமே மனமசையும் அசைந்தால்மாளும்
வேறுதுரை யேராதே வாராயோ நீ
முட்டுமே பசிக்கொடுமை யாலேதீதான்
மூலப்புளி தேடாதே வயித்யந்தானே. 642

வயித்தியமே யாகாது யோகத்தோர்க்கு
வல்லபங்கள் ரெம்பவுண்டு வாய்வின்சேட்டை
பயித்தியங்கள் போலிருக்கும் பித்தமாள
பாழ்மனது மாள்வதற்கு மூலங்கட்டும்
உயித்தியங்கள் செய்தாப்போல் உடலே துன்பம்
உயிர்நொந்து உடல்வலிக்கும் கபாலங்குத்தும்
வயித்தியங்களாகாது அபானவாயுவால்
வயர்நொந்து குடல்பிரண்டு உறுமும்வாய்
வால். 643

வாலென்ன தோலுரித்தாப் போலேகணும்
வாயிலே போட்டக்கால்கசப் பேகாணும்
காலென்ன மொழிக்குமொழி திருகிக்காணும்
கால்பிரளுங் கண்ணுருளுங் கண்டம்நோகும்
சேலென்ன நீர்குதிக்கு மேகம்போலே
சிறுநீரும் வலக்கட்டுந் திரண்டு ஆடும்
ஆலென்னப் போய்விரியும் அபானவாய்வு
அடைத்தாப்போல் நின்றுவிடும் வாசிமூச்சே. 644

மூச்சோடா முனைநாசி முட்டிப்பாயும்
முன்னின்றுங் காணாது விழிமேல் நோக்கும்
பாச்சென்றும் வேண்டாமே தானேபாயும்
பரிவாசி செய்வாசி பரமதேசி
கூச்சென்று முக்குணமும் பருவம் நாடும்
குருநெறியே வாத்தியங் கொண்டகோலம்
ஏச்சென்று பாராதே பக்தி நூலை
என்மக்க ளானாக்காற் தள்ளிடாரே. 645

தள்ளாரே தள்ளுவரே யானாற்தானும்
தாரணியி லென்மனுக்கள் தள்ளுவாரோ
கொள்ளுவா ரானாக்கால் முத்திஞாயம்
கூறுமே ஆதியந்த மத்திபாரு
மொள்ளுவார் ஞான நீரமுர் தந்தன்னை
முகூர்த்தமதிற் சேகரித்து உண்ணுவார்கள்
கள்ளுநீர் போலிருக்கும் ருசியுந்தேனாம்
கால்நடையின் நெய்யாகுங் கருப்பஞ்சாரே. 646

முள்ளுபோற் தடித்திருக்கும் பக்கந்தானே
முழிபிதுங்கு மச்சணமே மயங்கிடாதே
வள்ளுவே போற்குலைக்குஞ் சாந்திபண்ணு
மக்களே மருமகளைத் தள்ளிவைப்பீர்
கொள்ளுவீர் மருமக்கள் தானேநானே
குமரியே யானாக்காற் தள்ளிடாதே
அள்ளுமே மனதடங்கச் சாதித்தேரு
துன்பமற்று யிருந்திடலாம் ஞானக்கண்ணே. 647

ஞானக்கண் நெற்றிக்கண் உச்சிக்கண்ணு
நயனக்கண் மேலேதான் யோகக்கண்ணு
ஊனக்கண் சதைக்கண்ணு விழியின்கண்ணு
உளமறியாத் தோசியற்கு பேச்சுமூச்சோ
வானக்கண் கண்டாக்கால் பேச்சேயாகும்
வசனித்தார்ச் சொல்லெல்லாம் பலிதமாகும்
ஈனக்கண் பெற்றாக்கால் வார்த்தைதானே
இவ்வார்த்தை மனவார்த்தை கலகவார்த்தை. 648

வார்த்தையே சொற்கலகம் மனமுந்தானே
வையாழி போடுமல்லோ கலகநெஞ்சு
போர்த்தையே பிச்செறிந்து நெஞ்சைவெட்டி
பிழைதிருத்தி வனமாக்கி மரத்தைவெட்டி
கோர்த்தையே ஊசிமணிச் சறடேபோல
குருமணியை ஊசிவழி உச்சிநூலில்
ஏர்த்தையே யிக்கண்ணாம் சதைக்கண்ணாலே
என்குருவின் சாஸ்திரத்தை நம்பிப்பார்த்தே. 649

## ஒளிகண்டால் மோட்சம்.

பார்த்தாலுந் தினப்பழக்கம் விட்டிடாதே
பக்குவமாய் சொன்னவைகள் மறந்திடாதே
வேர்த்தாலுங் குளித்தாக்காற் சொரியவேணும்
மெல்லியர்க ளானாலும் மந்தம்வேணும
சேர்த்தாக்காற் சகிப்பதற்கு மந்தந்தானே
தினமிருந்து பார்த்துவா நாட்டந்தானே
ஏர்த்தாக்கா லொளிகாணு முடிவுதானே
எப்போதும் ஒளிகண்டால் மோச்சந்தானே. 650

மோச்சந்தான் ஒளிகாணச் சித்திக்கும்பார்
மோனஒழி காணுமட்டுஞ் சாதனங்கள்
கூச்சந்தான ஞானகுரு ஒளிகாணுமட்டும்
கூசாதே சாஸ்திரங்கள் ஒளிகாணுமட்டும்
பேச்சுத்தான மனமமனற மூடததாமல
பேசாதே ஒருநாளும் அறிவேமாய்கை
ஆச்சுதா னென்றாலு மனதாலாகா
அவ்வறிவு பேரறிவு அதனாலாமே. 651

ஆகுமே அறிவைவிட்டார் சலனத்தாள்வார்
அவ்வாசி யோகம்விட்டாற் சித்திகெட்டா
போகுமே யெனைவிட்டார் சாஸ்திரங்கெட்டார்
பொய்கெட்டார் மெய்யாவார் புழுக்கையாகார்
ஏகுமே உயிர்விட்டார் மயானந்தொட்டார்
எல்லாருந் தொட்டாரோ அச்சமில்லார்
ஓகுமே கண்ணீரே வடிதல்சொந்தம்
ஊழ்வினையென் றிடிப்பாரே துடிப்பினாலே. 652

துடிப்பென்ன உரநெஞ்சு மத்திதன்னில்
தூளெனவும் புகையெனவும் புகைந்தபூதம்
நடிப்பென்ன கண்டிருந்தும் பாராமற்றான்
நாயகனைக் கண்டவள்போல் கவிழுவீர்கள்
நொடிப்பென்ன அடிக்கடியே மார்புபள்ளம்
நொடித்துவலு வடித்தஉயிர் சுருண்டுசுற்றி
அடித்தஉயிர் யிருதயத்தின் பள்ளந்தன்னில்
அடிக்கடியே சுற்றித்தான் சுழலும்வாய்வே. 653

வாய்வென்ன அச்சுழியிற் சுழல்வதாலே
மனதென்றும் நினைவென்றுங் குறிப்பதென்றும்
ஆய்வென்றும் விபகார தொந்தமென்றும்
ஆகாய அறிவென்றும் மறப்பதென்றும்
காய்வென்றும் ஞானமொழி குளிர்ச்சியென்றும்
கங்குல்பக லற்றவிடங் கருத்தேயென்றும்
நோயென்று மனமாய்கை சலனமென்றும்
நுவலுவார் பொய்யிருக்கு மிடமென்பாரே. 654

## மனதின் பெருமை

இடமென்பார் தலமென்பார் தீர்த்தமென்பார்
எல்லோரு நாமிருக்கு மிவடமென்பார்
கடமென்பார் புந்திநடு சித்தமென்பார்
கடத்தறிவு பெருயூகம் தெளிவாமென்பார்
குடமென்பார் குருவுடலே மனமாமென்பார்
கோடான கோடிசித்து மனதினாலே
அடமென்பார் வயிராக்கியஞ் சமமாமென்பார்
ஆர்கண்டு சொல்வார்கள் மனதின் பேற்றே. 655

மனப்பேற்றைச் சங்கர்ப்பத் தெளிவென்பார்கள்
மருகால மறிந்துணரும் வருத்தமென்பார்
இனப்பேற்றைச் சொல்லுதற்கு இதுதான்ஞாயம்
இதுபாயம் அதுபாயம் யெண்ணிச்சொல்லு
தனப்பேற்றை நினைப்பதென்று மிச்சையென்றும்
சகலருக்குஞ் சம்மந்த பந்தமென்றும்
குணப்பேற்றைக் கண்டறியக் கள்ளமென்றும்
கும்பிடுதல் கோவில்குளம் குருசன்யாசம். 656

சன்யாசச் மனமென்றுங் குடும்பமென்றும்
தவமென்றும் பலமென்றுஞ் சாயலென்றும்
சன்யாச மதனாலே கண்டுகொள்ளச்
சாரூப முதலாகச் சரிதையாக
சன்யாச சரிதையொடு கிரிகையோகந்
தான்கண்ட பலனாலே ஞானமென்று
சன்யாச சாலோக சாமீபத்தே
சாரூப சாயுச்ய மிதன்பேராலே. 657

பேராலே ஊராலே பொருளினாலே
பின்னுமுன்னு நால்புரமுந் துணையினாலே
கோராலே சீராலே பத்தியாலே
கொடும்பாவந் தானகற்றும் புத்தியாலே
ஏறாலே உழவாலே மண்ணினாலே
எங்களுக்கு ஆள்துணையு மதுபோற்தானே
நூறாலே படுகளத்தே சாம்பல்வீடு
நோக்கிநாள் வருமட்டு மெண்ணாபேரே. 658

பேரென்ன மனதேபோம் நினைவேபோல
பேர்நினைவை யெண்ணைப்போல் மனதின்பேரு
ஊரென்ன யிப்படியே சீவர்பேரு
உலகமதிற் புற்பூண்டு விருட்சப்பேரு
தாரென்ன மனப்பேரு யிப்படித்தான்
தங்குகடல் வாரிமலை பெயரனந்தம்
வீரென்ன காற்றதுவின் பெயரனந்தம்
வீசுதுளி மேகப்பே ரனந்தந்தானே. 659

அனந்தமே இரவிமதி யுடுக்கள்பேரு
அதின்மேலே கருப்புடலே ஆகாயத்தே
அனந்தமே வெளியகலம் அண்டகோளம்
அந்தமண் திடல்மேடே இந்தமண்ணே
அனந்தமுண்டு யிதற்குள்ளே வெளிக்குள்ளேதான்
ஆச்சரியம் யெண்ணில்லை மனதின்பேதம்
அனந்தமுண்டு நினைப்பதெல்லா மனதின்பேரு
அய்யய்யா வென்றாலு மருள்பெற்றாலே. 660

அருள்பெற்றால் மனவுடலுந் துணையாய்நிற்கும்
ஆகுமது வென்றாலும் நம்மாலாகா
இருள்பற்றி வந்தாலு மெடுத்துப்போடும்
ஏமன்வரு நாளறியுங் கோலாய்நிற்கும்
பொருள்பற்று வந்தாலும் தானேகிட்டும்
புலாவெலும்பு நைந்தாலுந் தானேகட்டும்
மறுபற்று வாராது யெந்தநாளும்
மனமுண்டு உயிருண்டு உடலுமுண்டே. 661

உடலுண்டு உயிருண்டு அதினாலேதான்
ஊடாடு மனமுண்டு அதிலேதானே
கடலுண்டு குதிரைபோல் யெண்ணில்லாத
கார்மேகம் போற்கிளம்பு மனமுந்தானே
திடலுண்டு கட்டுமெட்டு மனமும்உண்டு
தீங்கில்லா மனமுண்டு தினம்போற்தானே
மடலுண்டு பிடுங்கறியா யிடத்தைக்கண்டு
மாமனத்தோ ரானார்கள் யிடங்கண்டோரே. 662

கண்டோர்கள் மனங்கண்டு கர்மந்தாண்டு
காமமறும் யோகமுறும் ஞானம்நாடும்
தொண்டர்கள் பண்டுபொருள் களவுசெய்தார்
தூங்காமற் துரியநிலை பெரியோரானார்
அண்டர்கள் மனமறியார் சிறியோரானார்
அடிப்பவரைக் காத்திருந்து உண்ணலானார்
மிண்டோர்கள் யெக்காலம் பூமி"புண்டு
மேலோர்க்கு யெக்காலந் தாழ்வுமுண்டோ. 663

உண்டோதான் குறைநிறைவு காலந்தோணார்
உட்புகுந்து பார்த்ததனைக் கேட்பாரானால்
பண்டோர்கள் சொற்பலிதம் குறைவுதோணும்
பாரிதனை நன்றாக நிறைவுகாண
தண்டார்கள் பூமியிலே கோடாகோடி
தான்பிறந்து ஆதியந்தம் கணக்கில்லாதே
இன்றேதான் படர்முள்ளுச் செடியேபோல
எத்தனையோ சயெறும்பு போலத்தானே. 664

போலத்தான் மாந்தரெல்லாங் கொசுவேபோல
பொங்கினார் தங்கினார் பொருமினார்கள்
சாலத்தான் விளைந்தவர்கள் மயானக்காட்டை
தானடைந்தார் மேலடையச் சமத்தில்லாதார்
மீளத்தான் தெரியாதார் பூமிப்பாரம்
மேலிட்டுத் தாங்காமல் விளைவோகொஞ்சம்
வாழத்தான் காணாமற் போரேயிட்டு
வயராலே அக்கினியே கோபமாமே. 665

கோபமே தீப்பற்றி உச்சிவாய்வு
கொடுங்கனலா லிந்திரியஞ் சாம்பலாச்சு
தாபமே மேலிட்டு நிறமேமாறி
சந்ததிகள் பழமுறைமை தப்பினார்கள்
கூபமே மண்டிருந்த கிழத்தின்மண்டு
கூக்குரலைத் தானொடுக்கி அடங்கினாப்போல்
ஞாபகமே தானொழிந்து மயக்கமாகி
நானிலத்தில் மானிடருந் தூங்கினாரே. 666

தூங்கினார் தெய்வபயங் கோணின்அச்சம்
துடர்பிரம சாபபயம் தொக்கிநோயால்
ஏங்கினாற் குடற்பசியால் தாரித்திரத்தால்
எல்லாரு மாண்டார்கள் துன்பம்மிஞ்சி
வாங்கினார் சொற்பிலத்தை மனப்பிலத்தை
வாயாட ஒட்டாமல் செமித்தாப்போலே
தூங்கினார் விழித்திருந்து நமனைக்கண்டார்
துன்பமற்று வாழ்வதென்னாள் சொல்லுவீரே. 667

சொல்லுவீர் ஒளிதாண்டி உலகந்தாண்டி
சொற்பிழைகள் தாண்டிவப்பேர் சுகமுற்றோர்கள்
செல்லுவேன் வெகுநாளாய் நினைந்திருக்கேன்
கேடிதனைத் தப்புவிக்க நீரேவந்தீர்
நில்லுப்நீ ரிப்பிழைகள் நீங்குமட்டும்
நீங்காதோ நீரிருந்தால் நீங்கும்நீங்கும்
மல்லுநீர் யுத்தகளஞ் சாம்பலாகும்
வகையுடனே நாமிருப்போம் போக்கிடீரே. 668

போக்கினாற் கைலாசம் பொதுவுமாகும்
புனர்சென்மம் நீங்கிவிடும் பொதுவேயாகும்
வாக்கினாற் சொன்னாக்காற் புகைபோலாகும்
வாசல்வழி திரும்புவரோ மறைந்துபோவார்
நோக்கினாற் போதாதா காடேயாகும்
நீராண்டி லக்கண்டம் கடலதாகும்
போக்கினா லக்கண்டம் புழுதிச்சாம்பல்
புற்பூண்டு தீயெறிய யிறைச்சிதெய்வம். 669

தெய்வமே யானாக்கா லிறைச்சிதின்னார்
தேவடியா ளங்குண்டு வீடுதோறும்
நைவமே கர்ப்பிருக்கும் நாங்கள்தானே
நமனுக்கு வஞ்சோமே யிறைச்சிக்கஞ்சி
பெய்வமோ மழைபேயோம் கல்லேபெய்வோம்
பெருந்தூர மலையாவோம் முள்ளுமாவோம்
கொய்வமே ஆளிருக்கச் சுரமேவந்து
கொண்டுபோம் நாளில்லை நாளைதானே. 670

நாளேதா னேதய்யா புசுண்டமூர்த்தி
நாயகமே யென்னாளும் போற்றிசெய்தேன்
தாளேனே யென்மனது உம்மையன்றி
சகியேனே ஓர்பொழுதுந் தவறிலேனே
மாளேனே உமைநினைந்த வசனத்தாலே
வருவேனே நீரிருக்கும் மிடத்துக்கேதான்
கேளேனே பிறர்சத்தங் கேள்வியோடு
கேட்டதையே நான்சொடேன் நானீவேனே. 671

ஈவேனோ நீர்கொடுத்த வரத்தையானும்
ஈபவனா தருபவனா யெமனைவெல்ல
ஓய்பவனா நான்மறந்து தூங்குவேனோ
உள்மனதைக் காணாமல் வெளிபோவேனா
காய்வேனா நீரிருந்தும் காணாதார்கள்
கஞ்சிகஞ்சி யென்றலைவார் மாறுவேனோ
தாயேனோ தந்தைகொண்ட மாதிருக்க
தமரேனோ யெனைமறந்தால் சமாதிதானே. 672

## சமாதி நிலை

சமாதியே சொல்லுகிறேன் வசிஷ்டநாதா
சந்ததிக ளததனைக்கும் தெளிவதாக
சமாதியே நீயானாய் வெகுநாள்யோகி
சாகும்நாள் தெரிந்தவரே சமாதிதன்னில்
சமாதியே மண்மூடல் அரையாங்கல்லில்
தான்வைத்து மூடலல்ல ஒளியுமல்ல
சமாதியே பிறர்காணா மறைவுமல்ல
தானிறந்து உயிர்விடலு மல்லத்தானே. 673

அல்லவென்றால் சமாதிநிலை உயிராய்மூக்கில்
அசைந்தாடுஞ் சீவனுயிர் பிராணமூச்சு
சொல்லவென்றால் நூலதோறுஞ் சொல்லிவைத்தார்
சுகமுடனே தானிருந்து ஏங்கிடாமல்
நில்லவல்ல பேர்களுமே மூக்கோடாமல்
நிறுத்திடவுந் தடுத்திடவும் உள்ளேதானே
செல்லவல்ல பேர்களுமே சிவன்மால்போல
தெந்தனமென் றாடலுமே உயிரின்சித்தே 674

சித்தியா மிதுதானே சமாதியாகும்
சிவனாணை மாலாணை சித்திதானாம்
முத்தியே யிதுதானே சீவன்முத்தி
முனிமுத்தி காயசித்தி யோகசித்தி
வெத்தியே யிதுதானே நரகந்தன்னை
விரட்டுவதுந் துரத்துவதும் உயிரைவைத்து
யுத்தியே யிதுதானே மற்றதெல்லாம்
புலாலுடம்பைக் காப்பதற்கே மத்திதானே. 675

மத்திதான் புத்தியெல்லாம் பொருளைத்தேடும்
மனிதர்புத்தி சீவனுயிர் பிறிதல்காணும்
சத்திதான் பிரிந்தாலே யென்னவாகும்
தவஞ்செய்த உடலல்லோ எமனுக்கஞ்சா
சித்தியே யுடல்வேண்டு மரணத்தாலே
சீவனுயிர் பிரிவதற்கு உடல்நடுங்கும்
நத்தியே தானிருக்கும அறிவேமத்தி
நாயகரின் பாரிமத்தி சிசுவைப்போலே. 676

சிசுவில்லாத் தாய்தந்தை சினேகம்போல
சீவனுடல் அறிவன்றித் துன்பமாகும்
பசயில்லாச் சாணத்தா லிட்டாப்போல
பல்லிடுக்கி லீரம்வர ஊத்தைபோலும்
நேசமில்லார் ஆடைகட்டித திரிந்தாபபோல
நீள்மனமும் ஊடாடுஞ் சலித்துத்தள்ளும்
கொசுவில்லா உயிர்மூட்டை யில்லாவீட்டில்
கொண்டவா தன் நித்திரைபோற் குரும்பர்
தானே. 677

குரும்பரே சாஸ்திரங்கள் லேசாய்ச்சொன்னார்
குமரிமுகில் கல்லாகும் வாரேயென்ன
அரும்பரே நூல்சொல்லக் குருவானாரோ
ஆருக்கு மஞ்சாமல் முத்திவிட்டு
வெரும்பரே துன்பத்தைச் சொன்னார்பாழாய்
வேரறுக்கச் சொல்லாமல் அழுகைசொன்னார்
திரும்பரே சொன்னாக்காற் திருவைச்சொல்லு
செத்தபின்பு அழுகைவருந் தானேதானே. 678

தானேதான் அழுகைவரும் சுகமுந்தானே
தன்னாலே வருகாது சீவன்முத்தி
கோனேதான் நாடன்றி வருகாதாலே
குமரிசுகம் ஆணையன்றி வருவதுண்டோ
வீணேதான் சொன்னாரே குருவல்லாமல்
வெரும்பிலுக்காய்ச் சரடிட்டார் எலும்புக்காக
தோணேதான் பார்த்தறிந்தாற் தானேகாணும்
சொலத்தெரிந்தால் நான்தெரியுஞ்
சுகவாழ்வாமே. 679

வாழ்விரே தனையறியுஞ் சாஸ்திரங்கள்
வாய்கொண்டு பாடாதே மனதால்பாரு
சேய்கொண்டு தானுன்னல் போலத்தானே
தெருவீதி பாப்பீரே உம்மைப்பார்ப்பீர்
நோய்கொண்டு போவீரே யென்சொல்பாரு
நோக்கியே பாராட்டால் யீதென்செய்யும்
பேய்கொண்டு போவீரே நீரேதானும்
பின்னுமுன்னு மறந்ததினாற் தாரைதானே. 680

தாரைதான் வார்த்தாப்போல் உடலேதாரை
தமர்தாரை நீர்வார்த்திர் யெமனார்ஞாயம்
ஊரேதா னிப்படியே வெளித்திக்கெல்லாம்
ஊடாடுஞ் சீவர்களும் மயானநாடே
பேரேதா னிட்டீரே பெருமான்பேரை
பிள்ளைதிண்ணுங் கர்த்தனே யெமனார்தானும்
வேரேதா னறுத்தானே யெமனார்தானும்
மேல்பெருமான் கூடிருந்து தூக்கினாரோ. 681

தூக்கினார் சிவனாரோ பெருமாள்பிரமன்
துணைசெய்ய யிந்திரனோ குலத்திநாரோ
பாக்கினார் கிரகங்கள் நவமிதானோ
பாரிந்தக் குலதெய்வப் பூசைதானோ
சேக்கினா ரறுபத்தி மூலர்தானோ
திருமைந்த ரிருவருமோ கிழவிதானோ
நோக்கிநே ரெமன்வரவே தெய்வமெங்கே
நுவலுவீர் யெமன்வந்தால் தெய்வமேதே. 682

தெய்வமே யெமன்தானே தெய்வநாமன்
தேசத்தி லவன்சிறிது தள்ளல்வேண்டும்
நைவமே மார்க்கண்டன் தனையேயெண்ணி
நடுக்காட்டி லிருந்தவரும் புலிவாய்முன்போல்
செய்வமே நாம்தவமும் தவத்தைவிட்டு
சிறுபுலிக்கு அஞ்சுவர்கள் புளியிற்தொட்டே
தொய்வமே பெரும்புலியும் யிரையேசெய்யும்
துயர்கொண்ட தெய்வமது நம்மைத்தின்னும். 683

திண்ணாமல் வைத்திருக்கோ தெய்வமெல்லாம்
செத்தபின்பு பூசைக்கித் தேடுந்தானே
உண்ணாமற் தானிருக்கோ தெய்வமெல்லாம்
ஊடாடு மக்கள்வழி பிதுரே யென்கும்
எண்ணாமல் முன்செத்த பேரைத்தானே
என்மகனே யென்றுசொல்லிப் பூசைவாங்கும்
நண்ணாம லிப்படியே தெய்வகூட்டம்
நாம்சாகத் தெய்வங்கள் சாகாதுண்டோ. 684

சாகாத தெய்வங்கள் செத்தபேரை
தான்சொல்லி மக்களிடம் பலியேகேட்கும்
வேகாத மனிதர்களைப் பார்த்ததில்லை
வெந்தலைத் தாண்டினபேர் நாரதாதி
போகாத மனிதர்களும் யெமனார்முன்பு
போய்வருகார் திரும்புவரோ தெய்வந்தானோ
நோகாது வைத்திருக்குஞ் சடலத்தாரை
நுட்பமாய்ச் சுட்டுவிடும் எமனாந்தீயே. 685

தீயென்றா லொதுங்கிடலாம் மண்ணுதானே
தீனிதின்ன நினைத்தாக்கா லென்னசெய்வோம்
வானேதா னடிநம்மைத் திண்ணவென்றால்
வாயானு மென்செய்வோ மெண்ணலுண்டோ
தாயென்று நாம்நினைக்க நீரேகொல்லத்
தாரணியிற் தப்புவது லேசோவாசு
நோயென்றால் மாளென்று நூறுக்குள்ளே
நுரைநுரையாய்ப் பொங்கிவரும் கோடிகோழை. 686

கோடிபோற் குற்றங்கள் யெண்ணிப்பார்த்தால்
கோனழியே டலகோடி அய்யா அய்யா
நாடியே குற்றங்கள் சமனாய்நில்லா
நடுநாடி யென்செய்யும் யெமனார்தூது
பேடியோ தம்பறிவு தூரதிஷ்டி
பேர்பெற்ற திரிகால வர்த்தப்பூமி
வாடியே போனதுவோ போனாலெங்கே
மாவுடலை நீக்குதற்கோ மறைந்திட்டாரோ. 687

மறைந்துமே போகாம லவரைக்கண்டு
மண்டிலணைக் காரணமே தென்றுகேளு
கரைந்துமே போகுமுடல் கரையாவண்ணம்
காயசித்தி யெங்கிருக்கு தென்றுகேளு
உரைந்துமே நாமிருக்கு மிடத்தைக்கேளு
ஊணவிடவும் ஞாயமுண்டோ வென்றுகேளு
திரைந்துமே போனாக்கால் மரணந்தானே
தினந்தினமு மெமன்வருநா ளில்லைதானே. 688

இல்லையே யெந்தெந்த நாளுமுண்டு
எம்பிரான் நாமுண்டு தன்னைக்கண்டால்
தொல்லையே வாராது சுகமதாகும்
துக்கமில்லை நாமுண்டு தூங்கலாகும்
வல்லையே நாமறியக் கண்ணேகாண
மனமுருக அறிவான குருவேகாண
நெல்லையே பொரித்தீரே வித்தேயாமா
நீள்குருவே காயசித்தி நெடுநாள்தானே. 689

நெடுநாளே வாழ்விக்கும் யோகஞானம்
நீள்விசும்பும் ஒத்திருக்கும் சித்தியோகம்
வடுநாளே முன்தெரியா பின்னாற்தோற்றா
வசனித்தால் நாவிருந்து மொழிகுவாளாம்
விடுநாளே நடுநாளுந் தனக்குத்தோற்றும்
மெய்நாளே தோற்றாது பொல்லாநாளே
கெடுநாளே ஒவ்வொருநாள் கிலேசமாம்நாள்
கேட்டவரம் கொடுக்காது தன்னாற்தானே. 690

தன்னாலே தானீயும் பிறரேகேட்டால்
தாரித்திரம் முன்சொல்லும் பின்னேதானே
மண்ணாலே பெண்ணாலே பொன்னினாலே
மாமனது யிச்சையெல்லாம் தானேசொல்லும்
என்னாலே யாகாது கொடுக்கவென்றால்
இடம்வேணும் பொருள்வேணும் யேவல்வேணும்
நின்னாலே யென்னாலே புத்தியாலே
நீள்விசும்பின் சம்மதங்கள் வேணும்பாரே. 691

வேணுமே குலதர்ம ஆசாரங்கள்
மென்மேலும் நல்லவினை பொருந்தவேணும்
தாணுமே யில்லறத்திற் பெரியோருண்டு
சவலையற்ற யிடந்தனிலே யிருப்பதுண்டு
தோணுமே யவர்களுக்குப் பாதிதானே
தெரிந்தமுண்டு அவர்களுக்குப் பிச்சைதானே
நானுமே யவர்களுக் குக்கர்மந் தானே
நாயகனு நாயகிபோல் வாழுவாரே. 692

வாழுவா ரில்லறத்திற் பெரியோர்தானும்
வாய்கொண்டு சொல்லிடுவார் மழையின்ஞாயம்
கோளுபார் மழைஞாயஞ் சொல்லாவிட்டால்
குமரிமுகில் பந்ததுபோற் கல்லுதானே
தேளுபார் விஷமிருந்தும் யில்லமில்லை
தெருவீதி தானிருந்தும் பலனோயில்லை
நாளுபார் பனிரண்டு வருஷமாமா
நாயகனை நாம்கூடிக் கலப்பதற்கே. 693

கலப்பதற்கு வெகுநாளே கண்டாலப்போ
கவலைவிட்டு யிருந்தாக்காற் சணத்திற்சித்தி
பலப்பதே மனமில்லை துன்பமில்லை
பரிவாசி வேண்டாமே யோகம்வேண்டாம்
தலப்பதே கண்டுகொண்டால் தானேவந்து
சம்சாரி யென்சிசுவே யென்றுசொல்லார்
மலைப்பதே யாகாது அவரேதானே
வருவாரே தன்காரியம் வந்தாற்காரே. 694

காரப்பா அவர்காக்க நீயுந்தேறு
கங்குகரை யில்லாத அன்பேசேரும்
பேரப்பா சொல்லாதே குருநேராதே
பிழையென்று நில்லாதே தெளிவாய்நில்லு
ஊரப்பா நானிருக்கேன் வெளியில்நீரே
ஊர்ச்சோற்றை யுண்டீரே யெனக்குவேண்டாம்
நாரப்பா கள்குடிய னெனக்குவேண்டாம்
நம்பினவன் தன்மனதே வேணும்பாரே. 695

வேணுமே அவன்நல்ல பிள்ளைகிள்ளை
மேன்மகனே யெந்தனுக்குத் தொல்லையில்லை
ஆணுமே அவள்தானே பெண்ணும்நானே
ஆண்டடிமை கொண்டிடலா மில்லந்தன்னில்
வீணுமே யாகாது மக்கள்வேண்டாம்
மெய்வேணும் பொய்மக்கள் வேண்டாமப்பா
காணுமே பொருளொடுக்கம் பிள்ளைவந்து
கண்டுகொள்ளுந் தம்பலத்தை மென்றிடாதே. 696

தம்பலமும் பல்லிடுவில் நாறல்போக்கும்
தாரித்திரம் வேண்டாமே குழந்தைஞானம்
உன்பிலமு மென்பிலமு மிருந்தாற்போதும்
உறுபிலமே நானிருக்கேன் நீயேபோதும்
தன்பிலமே பிலமல்லால் பிலமாம்வேறே
சமயத்துக் காகாது சமர்க்களத்தில்
என்பிலமே கொண்டிருந்தும் மயங்கிடாதே
என்மக்க ளானாக்காற் சீஷன்வேண்டாம். 697

சீஷனாமென்று சொன்னாற் சிரிப்பாள்வாலை
சிறுபிள்ளை யுந்தனுக்குச் சீஷனுண்டோ
பாசனாமென்னிடத்திற் சேராத்தோசி
பரிவாசி முற்றிலுமே காணாமாசி
மாசனா முந்தனுக்குக் குடும்பந்தானே
மல்லாந்து பெற்றபிள்ளை சீஷன்றானே
வேசனாம் பெற்றபிள்ளை கொள்ளிவைக்கும்
வெருங்கையை மூடாதே குருவேபோடா. 698

குருபோடா அருள்தாடா நாநீதானே
சோனானாய் கோன்நானே கோனும்நீயே
திருமாட மீதிருந்தா யிங்கேவந்தாய்
செத்தசவ மானாயே தெருவில்நீயே
இருமாட மீதிருந்தாய் நீநானென்றே
யெப்போதுஞ் சரியில்லை யிப்போதானே
பொருள்மாட மெங்குவைத்தாய் பயந்துதானே
பொல்லாப்பு வைத்தாயே தந்தபின்னே. 699

பின்னேது முன்னேது அருளொன்றேதான்
பேசினே னருள்கொண்டு பாதிபெற்றேன்
நின்னேது மென்னேது மெனக்குனக்கும்
நெடுநாளே காத்திருந்தேன் ஒன்றுதானே
மண்ணேது மனமேது திருவருட்கு
மாதங்கை வந்தாக்காற் பெருசங்கேது
தன்னேது பின்னேது சரியோபத்து
தான்வந்து பிலத்தாக்கால் வயது ஒன்றே. 700

வயதொன்று வாலையவள் லந்தாற்தானே
வாரிகடல் மலைமுதலாய் தெரிவாள்கண்டு
தயையென்று மில்லாளே கிழவிதானே
தன்னிடத்தில் வைத்திருந்தாள் பொருளைத் தானே
கயையென்று நீட்டிடுவாள் காலாற்தானே
கண்டவரைக் குரைத்திடுவாள் காலினாலே
அயையன்று மில்லாளே பொட்டல்ரூபி
ஆருக்குஞ் சொல்லாளே சொரூபிதானே. 701

சொரூபபதம் பெற்றாலே சோதிபோலே
சொல்லெல்லாம் வேறாகும் தினமும்வேறே
அருபபதம் வந்துவிடும் தினநாள்காலே
ஆருக்குஞ் சொல்லாதே தானேகாலே
உருபபதம் வந்துவிடில் பொய்யேமெய்யே
ஊனுகின்ற உச்சரிப்பு தர்மந்தானே
கெருவபத மில்லாது வந்துதானால்
கேலிபோ லேயிருக்கும் சிரிப்பாய்த்தானே. 702

சிரிப்பென்ன திரிபுரமுஞ் சேமந்தானோ
செகசால சித்தருக்கு திதியாம்திஷ்டி
மரிப்பென்ன சம்மாரம் நினைந்தாற்போதும்
மக்களே தந்தையவள் பிள்ளைபோல
தரிப்பென்ன யெங்கவளும் நில்லாள்சொல்லாள்
தாபரத்தி லேயிருக்காள் வாணிவில்லாள்
குறிப்பென்ன கண்டுகொண்டால் நம்முக்குள்ளே
கொடுந்தணலைப் பொருக்காமல் கூடுவானே. 703

கூடுவாள் குலக்கொழுந்தி விழித்துப்பாரு
கொங்கையில்லாள் மார்பில்லாள் கொழுந்தி
நல்லாள்
தேடுவாள் நம்மையுமே யோடிப்பாரும்
தெருத்திண்ணை யாகாது மூலைதெரு
பாடுவா ளனுராகம் மோடிதோடி
பச்சிலைகள் தளிர்போலே பலவாம்ரூபி
நாடுவாள் விட்டாக்கால் நம்முட்தானே
நாயகனே நீபோயென் றொழிகுவாளே 704

ஒழிப்பாள்காண் நம்முடலைச் சீரணித்து
உண்டிடுவாள் நம்மனைவி உலகம்போல
விழிப்பாளே நாமழிய யிடமில்லாதே
மெய்சோர்ந்து தனைமறந்த தானுஞ்சாவாள்
குளிப்பாளோ புருஷரன்றிப் பெண்ணேயானால்
குமரிமயில் கோதைகுயில் குளிருங்கண்ணி
அளிப்பாளோ கற்புடையை வேறேநண்ணி
ஆரையுமே யெண்ணாளே நமைநினைந்தே. 705

நினைந்தேதான் வேருடலைத் தேடிப்பார்ப்பாள்
நீதியல்ல லென்றாளோ நிசமேயானாள்
அணைந்தேதான் சேர்ந்திடுவாள் நல்லோரானால்
ஆரையுமே யெதிர்பாரா ள் குறையைப்
பார்ப்பாள்
புனைந்தேதான் சூடிடுவாள் ஒருவரன்றி
பொல்லாப்பே சுள்ளாப்பு பூட்டுபூட்டு
இணைந்தேதான் மூக்குநெற்றி புருவமத்தி
இருந்தவிட்ம் பூட்டொன்று யென்சொல்வேனே.
706

சொல்வேனோ பூட்டதனைச் சொல்லலாமோ
சொல்லினாற பெருஞ்சோதி நெற்றிக்கண்ணு
சொல்வேனோ தீயொளியை நெருப்புக்கண்ணை
தூண்டாத சோதியினைச் சுழினைவாழ்வை
சொல்வனோ பெருஞ்சோதி நிமையின்சோதி
சுடரில்லாச் சோதியது தமரின்சோதி
சொல்வனோ காலவர்த்த மானசோதி
சுடர்கோடி யென்றாரே சூர்யனாரே. 707

சூரியனார் உடலில்லாக் கண்ணேயானார்
தூண்டினாற் கோடிகண்ணு சுழினைதன்னில்
ஏரியனார் யெம்மிடத்தே வருவாரானால்
எக்காலும் நம்மிடத்தே பேசுவார்கள்
கோரியனார் கண்டுகொள்ளும் சுடலைதானே
குருவாமா அறிவாமா பொருளேபூமா
ஓரியனார் கண்தூரம் காதுதூரம்
உள்ளமது வெகுதூரம் உடல்தூரமாமே. 708

உடல்நாராம் உளம்நாராம் சென்னிநாராம்
உத்தகட மத்தனையும் நாராலாகும்
படல்நாரா முள்திரையே அண்ணாப்பூட்டு
பார்திறக்கப் பாருவையே உண்ணாமூட்டு
கடல்காரம் உச்சிமுட்டத் திரையேதிட்டு
கால்நாரம் மொளிமுட்டு பாதப்பூட்டு
ஒடல்நார மிப்படியே விலாவின்பூட்டு
ஊடுதுடை மலப்பூட்டு மூலப்பூட்டே. 709

மூலமதே மலப்பூட்டு நெஞ்சின்பூட்டு
மோகனமே உண்ணாவே தாளேபூட்டு
கோலமதே அண்ணாவி லோரந்தானே
கொடுநாவே உண்ணாவு செல்லுமப்பா
பாலமே யவ்வாசல் மேலேவாசல்
பளீரெனுஞ் சோதியொளி நின்றவாசல்
ஞாலமே யிவ்வாசல் மோனவாசல்
நாதனார் வாழ்ந்திருக்கும் வீடுதானே. 710

விடுதா னவ்வீடு முனிமேல்வீடு
மேதக்க முத்தர்களுங் காணாவீடு
கூடுதான் காத்திருக்கும் அருளின்வீடு
கும்மென்று தானிருக்கும் அருளின்சோதி
பாடுதான் பட்டதனாற் திறந்துபூட்டை
பாலகளத் துப்பிவிட்டு மேலேநோக்கி
ஆடுதான் கண்டதன்மேற் கோணைத்தள்ளி
அப்பாலே நானேறி ஊஞ்சல்தொட்டே. 711

ஊஞ்சல்தொட்டு உயரேறிப் படுக்கைதள்ளி
உன்னதமாஞ் சங்கிலியை ஒட்டியேறி
பாஞ்சதனில் மேலேறி மேடைகண்டே
பையரவம் படுத்திருக்கு மதனைத்தள்ளி
மாஞ்சதனிற் போகாமல் கால்வையாயல்
வலக்காலைப் பின்வைத்து யிடக்கால்தீட்டி
ஓஞ்சதனில் நில்லாமல் ஒட்டிமுட்டி
ஊஞ்சலதின் மெத்தையின்மே லுட்கார்ந்தேனே. 712

உட்கார்ந்தே னுச்சிமண்டை கபாலஓட்டில்
உரசினே னென்னுயிரை உடையாமற்தான்
சட்கார்ந்தே சம்மனமே மூலம்உச்சி
தானோடி நின்றிடவும் யோகம்விட்டேன்
மட்கார்ந்தே நான்படுக்க வில்லைநேரே
வாயாலே சொன்னதெல்லாம் வாலைவாழ்வு
துட்கார்ந்த துஷ்டர்களு மடங்கிப்போனார்
துடியடங்கி நானிருந்தேன் துடியாய்த்தானே. 713

துடியென்ன உச்சிமூலம் வாய்வுதானாம்
தூண்நின்ற தம்பம்போற் தூரேயூணி
அடியென்ற நாக்கினடி மூலபீஷம்
அவ்விடத்திலேயிருந்து யெழும்பிமேலே
இடியென்ற கொடிபோலே உச்சிமட்டும்
ஏறிநின்று விளையாண்டு கபாலஓட்டில்
மடியென்ற விரிபரத்திக் கபாலமெல்லாம்
வாயாக உச்சரித்தாள் யான்கேட்டேனே. 714

கேட்டேனே உச்சியெனுங் கபாலந்தானே
கிருகிரென வட்டமிட்டாள் அமர்ந்துபோனாள்
மாட்டேனே யென்றாலும் பிடித்துச்சொன்னாள்
வலியஅவ ளென்மனைவி துடுக்குக்காரி
விட்டேனே நானாக வைத்துக்கொண்டாள்
வெள்ளாட்டி வெள்ளாட்டி யென்துணைக்கே
ஆட்டாளைக் கண்டுகொண்டு பிழைத்தேன்கூவி
அய்யய்யோ வென்றவளும் அருகினாளே. 715

அருகிலே நானாழ அவளும்நானே
ஆகாகா சொல்லெல்லா மதிசயந்தான்
உருகினா ளெனைக்கண்டு நீயாரென்றாள்
உத்தமியே யானென்று கெஞ்சநானே
தெரியாதாள் போலிருந்தாள் தனியேநின்றேன்
தினந்தினமு மெந்தனையே மறவாதென்றாள்
அருகிலா தேயிருந்தா லென்னசெய்வோம்
அம்மையே யென்னைவிடு குமரியென்றே. 716

என்றெனையே யான்கண்டே னவளும்வந்தாள்
யெக்காலங் குடியிருக்க வேண்டுமென்றேன்
மன்றெனைத் தடுக்காமல் தனியேநின்றாள்
வாய்கொண்டு பொத்திநின்றா ளிருகையாலே
அன்றென்னை வாவென்றாள் வலக்கையாலே
ஆரிழுத்துப் போகாமல் வந்திடென்றாள்
குன்றென்னை தடுத்தாளே நில்நீயென்று
குமரிவரப் பார்த்திருந்தேன் கும்பிட்டாளே. 717

கும்பிட்டா ளெழுந்திருந்து வெட்கப்பட்டு
குமரிநடு முதுயிடுப்பு உரமேகல்லே
வெம்பிட்டாள் தனியிருக்கே னென்றுசோன்னாள்
மேல்விளைந்த காரணத்தை யெண்ணினாளாம்
நம்பிட்டாள் முழுதிலுமே நம்பாளாத்தாள்
நாரதனே யானாக்காற் கெஞ்சுவாள்பார்
அம்பிட்டா ளெந்தனுக்குக் கோழையோரம்
அகப்பட்டாள் வெகுதுலையில் துலைப்பட்டாளே. 718

துலைப்பட்டாள் துகில்பட்டாள் மஞ்சளிட்டாள்
துகிலதனை மேல்விசிறி முக்காடிட்டாள்
வலைப்பட்டாள் எட்டாரைக் கொட்டக்காணாள்
வாயினாற் சம்பிரதாயம் நம்மாலேதான்
இலைப்பட்டா ளெப்போதுந் தாலிக்காரி
யென்னிடத்தி லிச்சையில்லாள் தூத்தூசீச்சி
களைப்பட்டாள் கம்பளத்தி வடுகச்சாதி
காப்பிலிச்சி வேப்பிலைச்சி சலிப்புக்காரி. 719

காரியென்ன சக்கிலிச்சி பறைச்சிஊழி
கருமாதிச் சோறுண்ணும் மயானக்காரி
நாரியென்ன இவள்பேயே நரம்புக்காரி
நாட்டிலே சக்களத்தி குறத்திவாரி
பாரியெனச் சொன்னாக்காற் பாவம்பாவம்
பழிகாரி கொலைகாரி யிரக்கமில்லாள்
வாரியவள் மூதேவி கழுதைநாயே
வாயில்மண்ணைப் போடாதே வாடாமாடே. 720

வாடாநீ போடியடி வலுவாய்நில்லு
மண்டையுடை பெண்ணரசி தூமையோளே
நாடாநீ மலையோதான் வாரியுப்போ
நமனேநீ குடுமியுள்ளாய் நாயோகொண்டை
போடாநீ யென்புழுக்கை புழுக்கைபோடி
பொல்லாத துரோகியடா யெலும்புருக்கி
மாடாநீ மாட்டிறைச்சிக் கோலேபோடா
மாநெல்லு நவதான்ய அண்டேபோடி 721

அண்டுபோல் நீயிருந்து என்னைச்சேர்ந்து
ஆடினாய் கூத்தாடி மக்களீன்றோம்
மண்டுபோல் நாமிருந்து கூட்டங்கூடி
மருமகனைச் சேராமற் றனையேநாடி
குண்டுபோ லேயிருப்பாய் கொழுந்தா யாவாய்
குமருமே யாகாமல் யெனக்குவாய்த்தாய்
திண்டுபோ லேயிருந்து தெருவில்வாராய்
செகசாலம் விட்டொழிந்து மேல்வந்தாயே. 722

வந்தாய்நீ யென்மகனே மகளேநீயே
வாதாடி னோமினிமேல் மருவிக்கூடி
பிந்தோம் நா முந்தோமே யொன்றேயாகி
பெருந்துறவு ரெண்டுமொன்று கூடினோமே
சிந்தோமே யென்னாளுந் தெருவில்வந்து
சித்தருக்கும் நாமிருவர் செயலாய்நிற்போம்
தந்தோமே யிப்படியே யெந்தநாளும்
சமத்ததிக முண்டானோ மினிமேற்றானே. 723

இனிமேலே நாரதர்க்கும் புசண்டருக்கும்
இதையத்தி லூரினதை இருவருக்கும்
கனிமேலோர் சேர்ந்தாலே கூடுவார்கள்
காசினியிற் பெரியோருங் கனிந்துதானே
இனிமேலோ முன்னாலோ யிதுபோற்தானே
என்னாளும் பெரியோர்கள் செய்கையாகும்
கனிபோலே பழவகையிற் தேனேவார்க்கும்
கந்தமென்ற வாசனையும் கொடுக்குங்கூடே. 724

கூடுமோ யிம்மூன்று பழவர்க்கங்கள்
கூடினாற் பழமேதான் ருசியேபோல
நாடுமே யிதுபோலே பழவர்க்கங்கள்
நாட்டிலுள்ள பழவகைகள் ருசிசேர்ந்தாப் போல்
பாடுமே மனருசியே செவியோகாதோ
பாரிலுந்தன் மனப்பழமே கனிந்துதானால்
தேடுமே முககண்ணின் ருசியைத்தானே
சேர்ந்தவர்க்குத் தித்திக்கும் பழம்வர்த்தந்தான். 725

வர்த்தமே திரிகாலம் பழமாமுத்தி
வசனித்த சொல்லெல்லாம் வித்தேசித்தி
வர்த்தமே பொழியு மல்லோ வேதமாகும்
வசனித்த சொல்லாலே சொரூபசோசியம்
வர்த்தமே யதுவொழிய வயித்தியந்தான்
வாய்வழிந்த பல்லிரையிற் சொல்லுந்தானே
வர்த்தமே யழிவார்தம் நூல்களெல்லாம்
வாய்கொண்டு சொன்னவரும் போனார்மாண்டே. 726

போனாக்கா லவர்வாக்கும் பொய்த்துப் போகும்
புதிதுதா னில்லாட்டால் புதிதுதானே
ஆனாக்கா லவர்வந்தார் நம்மினுள்ளே
ஆவியுயிர் விட்டமனுப் பிறவிபோலே
வீணாகப் போகாமல் நம்மைச் சார்ந்தார்
வீணிலே திரிந்த உயிர் நானேகண்டு
கோனாக வாழ்ந்தவர்கள் பெரியோரென்றே
கொண்டுவந்தே னென் தலையில் வைத்துக்
கொண்டே. 727

வைப்போனே நாரதனே நம்மையன்றி
வைப்பவரார் பார்ப்பவரார் வெகுநாள் மூத்தர்
தைப்பேனே உயிர்விட்டு வெளியே நின்ற
தவமுனியே நம்மைப்போ லொற்றார் தங்கள்
கைப்பேனே அவருயிருரே வெளியிருந்தார்
காற்றோடு சேராமல் நானே சேர்ப்பேன்
வைப்பேனோ யென்னுச்சி பிரமரந்திரம்
வாரியண்ட மலைதானு மிருந்தபீடம். 728

பீடமே யென்னுச்சி பிரமமூலம்
பேருச்சிவானுச்சி கோணினுச்சி
கூடமே கோபுரங்கள் மேளதாளம்
கொண்டிருக்கு மாடமதின் பூஜையுய்த்தே
ஓடுமே வெளியதனி லோடுங்கப்பல்
உளமதனைக் கண்டவர்க ளுச்சிவாரி
மாடமே வைத்திருப்பே நானூழ்மட்டும்
மாதவசி நாரதனே நமக்கார்சொல்லே. 729

சொல்வீரென் றெனைக்கேட்ட புசண்டயோகி
சொல்வதென்ன பிரமமன்றிப் பிரமமுண்டோ
செல்வீறோ யெனைப்பழிக்கச் சொன்னீர்நீரும்
கேட்டதற்கு உத்தாரஞ் சொல்வதாரு
சொல்வீரே சொல்லுக்குப் பதிலு முண்டோ
துணையுண்டோ யீடுமக்குச் சோடியுண்டோ
செல்வீரே யானாக்கால் கேட்போம் நாங்கள்
கெதியென்ன நீரிருந்தீர் நான்நின்றேனே. 730

நின்றேனே நான்நெடுநாள் உம்மைக்கண்டேன்
நீர்தவசி யானதையுங் காணேன்பின்னான்
சென்றேனே வெகுதூரம் உமைப்போலொற்றோர்
தேசத்தும் பாதாள மாகாயத்தும்
நின்றேனே நானறிந்த மட்டுந்தானே
நீள்வயதைக் கண்டறியே னும்மைப்போல
அன்றோனே யின்றிருந்தீர் வெகுநாள்மத்தி
ஆகும்நாள் அருணன்நாள் சொல்லுவீரே. 731

சொல்லுகிறேன் சதுர்யுகமே அறுபதாச்சு
சோதியுள்ள சூரியர்க்கு யுகமும்நாலு
செல்லுவே னதுகடந்தாற் சுக்கிரவெள்ளி
கிளறுமே சூரியன்போல் வட்டமாகும்
நில்லுவேன் சொன்னதனிற் சொன்னவெள்ளி
நீள்விசும்பில் வருமார்க்கம் விள்ளவேணும்
அல்லுமே ஒளிநீங்கும் வகையே போல
அருளாவீர் சிறுவெள்ளி ஞாயந்தானே. 732

ஞாயமே சிறியவெள்ளி பெரியஞாயம்
ஞாயரெனும் ஞாயமதை யிதனில்முன்னே
காயமெனு மின்னூலே ஞான சூரியன்
காட்டுமே ஆதியந்தம் உற்றுப்பார்த்தால்
தோயுமோ சந்திரனுங் கதிரும் வெள்ளி
துலங்குமே யின்னூலே ஞானசூரியன்
மாயுமோ சூரியனா ருதிப்புதோறும்
மங்கையர்கள் கெர்ப்பமுள்ள மட்டுந்தானே. 733

தானென்ற யிடிமின்னல் சோதியோடு
தங்குதா பரமுடனே அசைவினோடு
வானென்ற வெளிதனிலே உலாவலோடு
மண்மேலே சுழல்காற்று வாய்வு தேய்வு
ஏனென்ற மேகநீர்க் கருவினோடு
இத்தனையும் ஆதியந்தம் உற்றுப்பாரு
கோனென்ற குருவறியும் அருளுங்காணும்
கூப்பிட்டாற் தெரியாதே குருவென்றாலே. 734

ஆனாலே குருநெறியும் ஆசனங்கள்
அடுத்தடுத்த நோம்புகளு மாசாரங்கள்
மாறினாலே சேர்முறைகள் குருவின்வர்க்கம்
வகையாக யின்னூலில் சுருக்கமார்க்கம்
சனாளே யெட்டுடனே மானவச்சேர்த்து
எங்கள்மன முங்களுக்குப் பனிரெண்டாக
வாகும் ஆஒவ்வும் பனிரெண்டாகும்
உட்கருத்து அத்தனையு மிதன்ந்தானே. 735

இதனிற்றா னித்தனையு மின்னமுண்டு
என்யோகம் நின்யோகம் வசிஷ்டர்யோகம்
இதனிற்தானிக்கோடு விசுவாமித்திரர்
இம்மலையில் வியாசரிஷி சுகரின் யோகம்
இதனிற்தான் காக்கியரும் நாதர்காசி
என்னோடு காசிபருங் கும்ப நாதர்
இதனிற்தான் தெக்ஷணத்தார் யோகமோடு
இல்லறத்தி லிருந்தார்கள் பாகத்தோடே. 736

பாகமொடு தவசிரிஷி மனுமாந்தாதி
பார்சித்தர் முனிகளோடு அதற்குமேலே
தாகமொடு சென்றவர்கள் தவசில்வல்லோர்
தாதுசடம் சிஷ்டிதிதி சம்மாரந்தான்
ஏகமொடு யித்தனையு மிதனுக்குள்ளே
ஏர்விட்டு உழுதுபரம் படித்தார்ப்போல
ஆகமொடு அந்தரங்கத் தூணியிட்டு
அனலிட்டு வெளியதனில் ஒளியைத்தொட்டே. 737

தொட்டந்தக் கொட்டாவி உயிர்யோகங்கள்
தொந்தங்கள் மனஅறிவு கருத்துயூகம்
எட்டந்த தெளிவுடனே தந்திரங்கள்
இதையபுத்தி யெல்லாமே யிதனுக்குள்ளே
கட்டாவி கொட்டாவி யில்லாமார்க்கம்
காலரைக்கால் வீசமெனப் போய்விடாமல்
தொட்டாவி முட்டுமுன்னே யிதனிற்தானே
சொக்காமற் பார்ப்பதற்கு மிச்சமின்னூலே. 738

மிச்சமே தானிருக்கு வெகுநூல் மிச்சம்
வேளாண்மை செய்தமண்ணில் மிச்சம்போல
சொச்சமே மலைமண்ணில் மிச்சம்போல
தொந்திரையுங் கடலதனிற் திடலேபோல
அச்சமே தான்கொடுக்கு மிச்சம்சொல்ல
ஆருக்கு மெட்டாது வெளியே சொல்லும்
சொச்சமே யில்லாது வெளியே சொல்லில்
தொடர்ந்தெழுத யெட்டாது யிதனைப்பாரே. 739

பாருமே யித்தோடு பாதாளங்கள்
பார்விசும்பு மேலுள்ள கீழுங்காணும்
கூருமே யின்னூலே ஞானசூரியன்
கொட்டும்மே அண்டச்சி வரப்பாத்தானும்
தேருமே பார்த்திடவுந் தெளிவுதோணும்
சிந்தைமனம் உயிர்அறிவு மொன்றேயாகும்
ஆருமே தேறிடலா மறிவுள்ளோரே
ஆரிந்தக் காயத்துக் கனுகூலத்தார் 740

அனுகூலத் தாலல்லோ குறையாம்விட்ட
ஆச்சரியந் தொன்றுதொட்டு அப்பியாசிக்கும்
மனுகுலத்தி னாலந்த வித்தைவந்த
மாமுனியுந் தெய்வபதம் தெய்வம்நானும்
எனுகூல மிப்படியே யாதுங்காண
என்னையே பாரீரே யென்னூல்பாரீர்
தனுகூலம் வாசிவலு பெலத்த வீரர்
சந்ததிகள் தானாகக் கொள்குவாரே. 741

கொள்வார்க ளெப்படியென் றெண்ணிடாதே
குருவாகும் நாள்வந்தா விதனைப்பாரு
தள்வார்கள் சேராதார் தோசமில்லை
சந்ததிக ளானாக்கால் தோசமுண்டு
கைவாயா லுண்பவர்போல் தினமுந்தானே
காக்கியனும் புசுண்டனுமே வசிஷ்டநானே
மெய்வாயே தமர்திறக்கப் புருவப்பூட்டு
வில்லங்க மதுகடந்தால் ஒளியுஞ்சொல்லும். 742

ஒளிசொல்லும் வெளியதனில் நின்றரூபம்
உற்றுப்பார் மேல்நோக்கிப் புருவமத்தி
அழிவெல்லுங் காகனுமே மறைந்தகோட்டை
அதில்நுழைந்தாற் திரும்புவதோ நமனுங்
காணான்
பழிகொள்ளும் நமனார்க்குப் பழியாம்வாசல்
பதியான பிரமபதி நெற்றிக்கண்ணு
வழிசொல்லு முன்பின்னும் பிராரத்தகர்மம்
மாயையோ மறைந்துவிடும் ஒளிமுன்னாலே. 743

முன்னாலே செல்லாது பின்னால்நிற்கும்
முறைபிசா நல்லோரைக் கண்டாலஞ்சும்
தன்னாலே சாகாது ஒளியாற்சாகும்
தான்பிறந்த நாளதுவும் ஒளியினாளும்
அன்னாளே இவ்விரண்டும் ஓர்நாள்த்தானே
ஆகையினா லவ்வொளிக்கு யிருளுமஞ்சும்
இன்னாளே ஒளிகண்டு யிருளைப்போக்கி
எக்கால மிப்படியே ஒளியில்நில்லே. 744

நில்லப்பா சஞ்சார காலத்துள்ளும்
நேர்விசும்பிற் சென்றாலு மறந்திடாதே
கல்லப்பா நாடிகலை பிராணசீவன
காலனெனச் சொல்வார்கள் சித்தமேனி
வில்லப்பா யெய்தாப்போல் நாணேறிட்டு
விரைந்தவலு கயர்நிமிரா தடியேநின்ற
அல்லப்பா யிருளலகச் சோதிகாண
அடிவயற்றை நிமிர்ந்திருந்து வில்நாணேற்றே. 745

ஏற்றவே மேலெழும்பி மூக்குதொட்டு
இடதுபுரம் வலதுபுரம் ஓடாமற்றான்
போற்றவே நடுநாடி மூக்கின்தண்டு
பொந்துபுகும் பெருச்சாளி போனாற்போல
ஏற்றவே மூக்குநடு நாசியுச்சி
இப்படியே நடுநாடி யிசைப்பாயப்பா
போற்றவே காண்பீரே முனையாம்வாசி
பொதுவிருந்து நடனமிடும் பொந்திற்பாரே. 746

பாரப்பா கண்ணிரண்டுஞ் சிவந்துபோகும்
பாதமொடு ஆசனங்கள் கடுப்புக்காணும்
நூரப்பா நாள்தினமும் லேசாய்ப்பாரு
நுண்ணறிவிற் காணுமல்லோ செந்தீக்காலே
வேரப்பா காணுகிற தூரநீறல்
மேனியதி லிருபிளப்பு இடுப்புகாலே
சீரப்பா நடுவான இடுப்பில்நின்று
தீபவொளி காணுமட்டுந் தீட்டுதிட்டே. 747

தீட்டுங்கள் வெந்தயமே கடுகோடுள்ளி
சேர்வகைக ளத்தனையும் சேர்ந்துசாரு
கூட்டுங்களத்தனையும் கொட்ட அன்னம்
கொடியருசி தேனமுர்தம் பால்நெய்மோரும்
நாட்டுங்கள் பழவகைகள் கற்கண்டோடு
நற்பாகு யித்தனையும் ருசியாகாது
வாட்டுங்கள் செய்ததன்றி வர்த்தமானம்
வகையென்ன தீபவொளி' வார்த்தைதானே. 748

வார்த்தைதா னேதென்றாற் திரிகாலந்தான்
மாயோக வல்லபத்தால் ஒளியாம்ஞானம்
வார்த்தைதான் காட்டுமல்லால் மவுனங்காட்டா
மாவொளியிற் தான்பிறந்த வர்த்தங்காட்டும்
வார்த்தைதா னேதென்றாற் திரிகாலத்தே
வல்லபத்தைக் கண்டிடலாம் வாக்கிற்சித்தி
வார்த்தைதான் லேசாமோ பலிதஞ்சொல்ல
வாய்ப்பலித மென்னவென்றால் முத்திதானே. 749

முத்திதான் காட்டுவது முகத்திற்காட்டும்
முறைகாட்டும் உரைகாட்டுங் கடமேகாட்டும்
சித்திதா னுடல்காட்டும் செங்கைகாட்டும்
தீபவொளி காணுமட்டும் உடலேகாட்டும்
நத்தியே பார்த்தாக்கால் வெளிச்சங்காட்டும்
நரைமூப்புச் சாக்காடு முன்னேகாட்டும்
உத்தியே யுகங்காட்டும் ஆதியந்தம்
ஊடுருவிப் பார்திரையே புருவப்பூட்டே. 750

பூட்டுடைக்க வல்லவரே புருவம்வாரும்
புகுந்துகொள்ளும் புருவமத்தி திறவுகோலை
நீட்டுடலை நிமிர்ந்திருந்து சம்மணமேயிட்டு
நேராகத் தலைகழுத்து உடலுட்கார்ந்து
பூட்டுடலை வாசிவர மூச்சைக்கண்டு
புகுந்திருவே பொந்திருக்கும் புலியேபோல
வீட்டிலிருந் தேகுகையாய்க் கதவடைத்து
வெரும்வாயை யுண்ணாமல் மந்திரமுண்ணாதே. 751

உண்ணாமல் மறவாமல் அசைந்திடாமல்
உற்றமுகம் கண்விழியுஞ் சொருகிடாமல்
நண்ணாமற் பிறசத்தங் கேளாக் காதாய்
நயனத்தை மூடாமல் நடுங்கிடாமல்
உண்ணாவில் உயிர்வாசி பொழிந்திடாமல்
உறவிருந்தோர் கிட்டவந்து பேசிடாமல்
அண்ணாவிற் றேனமுர்தம் உண்ணத்தானே
அருளொளியா மவ்விடத்தே வாசிமூட்டே 752

மூட்டய்யா காலைமாலை மூக்குவாசி
முனைமூக்கு ஆடிடவே யிரண்டுதாழை
நாட்டவே மேல்நோக்கிப் பார்த்தாயானால்
நயனத்தி நேர்மத்தி புருவமத்தி
கூட்டய்யா வாசியுயிர் புருவந்தட்டும்
குருவென்ன சொல்லிடுவார் யிவடந்தானே
ஓட்டந்தா னேகிடுமே கருவிக்கூட்டம்
உற்றமனந் தான்திறக்கும் ஒளியாம்வீடே. 753

வீட்டிலே புருவமத்தி நாமமத்தி
வெள்ளாட்டி அய்யனுட பொட்டுமத்தி
நாட்டிலே யவ்விடத்தே குருவின்பத்தி
நடுநாமப் பாதைவழி மூச்சுஓடும்
ஏட்டிலே எழுதளையோ புருவப்பூட்டே
இப்பூட்டைத் திறப்பதற்கு குருவேஆசான்
மாட்டிலே காலைசெய்தார் மனுவாமாந்தர்
மாடிதுவே வாசியுயிர் வாசிதானே. 754

வாசிதான் கோலாகுந் திறவுகோலு
வசனித்த சொல்லெல்லா மந்திரந்தான்
நேசியே குருமுறையே ஆசாரங்கள்
நேசித்தார் வல்லவர்கள் சித்தரானார்
தோசியே போயலைந்தீர் தன்னைப்பாரீர்
சுடுகாடு போக்குதற்கு நம்மாலாகும்
பேசியே தானிருந்தீர் கபமாங்கோழை
பெருஞ்சித்தா லாகாது தன்னாலாகும். 755

ஆகுமோ சாஸ்திரத்தாற் குருவாலாகா
ஆச்சரிய மந்திரத்தாற் செபத்தாலாகா
பாகமோ உப்பன்றி செயநீராகா
பார்த்தவர்கள் கண்டுகொள்ளும் பருவந்தன்னில்
ஆகுமோ பருவமன்றிக் காலமன்றில்
ஆ ஊவும் ஏ ஐயும் ஆசனங்கள்
ஓகுமோ ஈயுடனே ஔவுந்தானே
உத்தமர்கள் அரிநமோத்து சிந்தந்தானே. 756

அரிநமோத்து சிந்தமென்றும் அரியோமென்றும்
அரிச்சுவடிச் சுழியென்றுங் காப்பதாகும்
மரியோம்நா மென்பதற்குத் துணையேகாப்பு
மால்சுழியோ திருசுழியோ யெதுதான்முந்தி
கரியோநாம் துதித்தசுழிக் கொம்புகாப்போ
காமம்தன் காமாசைக் கொம்புகாப்போ
உரியோநாம் தயிரெடுக்க உற்சாகத்தால்
உளமறிந்து உட்கண்ணை ஊன்றித்தூண்டே. 757

தூண்டியே சுழிமுனையாம் சுவடிகொம்பே
சுழித்தசுழி அரிச்சுவடி ஆதிகாப்பு
ஆண்டியே ஆகாமல் சுழினைபாரு
அரிச்சுவடி ஆதியிலே சுற்றைப்பாரு
தோண்டியே பார்ப்பதற்கு உடலுள்ளேதான்
சுழிமுனையின் கொம்பதனைச் சுழித்தவாய்வை
ஏண்டியே யென்றுசொல்லி வாலைகோரி
என்தாயைச் சுழிக்காற்றாற் கட்டுவாயே. 758

கட்டுவா யஞ்சோடு மூன்றுநாலுங்
கயர்திரித்துப் போடுவையே பனிரெண்டாலே
எட்டுவாய் பனிரெண்டு ஒருச்சாண்நீழம்
ஏகுமே மூக்கின்வழி உயிர்தான்மூச்சு
கொட்டுவாய் தினந்தினமு மூக்காம்நாசி
குருசொல்லத் தட்டிடுமே மூச்சேயோடி
எட்டுமே மூச்சோடி யோகந்தானே
என்மக்க ளானாக்காற் மூச்சைப்பாரு. 759

குருவாக வேணுமென்றால் மூக்கின்சீவன்
குலக்கொழுந்தே மூக்கேற்று நெற்றிமேலே
திருவாக யிப்படியே பார்த்தாயானால்
தினமென்ற நாள்செல்ல யோகியாவாய்
மருவாக மாட்டாயே உயிரைப்பாரு
மாதவசி யாகிடலா மேலேநோக்கு
உருவாக வாசிவலு உயிர்தான்மெத்த
உயரேறப் பிலத்துவிடும் யோகந்தானே. 760

யோகமே காண்பதற்குச் சரனூல்சொன்னார்
உளமறிந்தோர் சடமறிய உடற்கூரேதான்
தாகமே கொண்டாக்கால் உடற்கூர்பாரு
சாதித்தால் யோகமென்றும் பெலத்தால்ஞானம்
நாகமே தீண்டஉயிர் வேறானாப்போல்
நாதனே யாகிடலாம் மாய்கைபோகும்
ஆகமே சொல்லாகும் வேதமாகும்
அய்யய்யோ நம்முள்ளே அரையாம்வீடே. 761

வீட்டிலே கூட்டினுள்ளே முத்தியுண்டு
மெய்யிலே சோதியுண்டு திரிகாலங்கள்
பாட்டிலே யில்லையிது நாட்டிலுண்டு
பரியாசி கண்டவர்க்குக் காச்சியுண்டு
ஏட்டிலே எழுதிவைத்தார் முன்னோரெல்லாம்
எங்களுக்குஞ் சந்ததிகள் வேணுமென்று
பூட்டிலே கண்டெடுக்கத் திறவுகோலை
பொக்கிஷத்தில் வைத்தாரே சாஸ்திரநூலே.
762

நூலென்ன உங்களுக்குப் புத்திக்காக
நுண்ணறிவைக் காட்டிவைத்தார் சாஸ்திரமேலே
பாலென்ன நெய்யிருக்க மூடினாப்போல்
பரைவாலை காண்பதற்கு நூலாதாரம்
வேலென்ன சத்துருமே லேவினாப்போல்
மெய்யதனி லொளிகாணச் சாஸ்திரந்தான்
நூலென்ன உடலறியத் தெய்வங்காண
நுட்பமாய்ச் சொல்லிவைத்தார் பெரியோர்
தானே. 763

பெரியோரும் நம்மளைப்போற் சிறியோராகி
 பேசியே குழந்தையது வளர்த்தாப்போல
அரியோர்களறியாம லறிந்தார்பின்னே
 ஆனதினா லறிந்ததுவுந் தெரிந்துசொன்னார்
கரியோர்கள் நினைவழிந்து மனதைவென்று
 கவலையற்று நின்றதினாற் பெரியோரானார்
விரியோர்கள் மனதடங்கித் தன்னைக்கண்டு
 மெய்க்குள்ளே தத்துவங்கள் தன்னைவென்றே. 764

வென்றதினாற் கவலைமனம் விட்டொழிந்து
 மெய்க்கருவி யெல்லாமே சத்தமாச்சு
இன்றதனை நீர்காண நீரும்வாரும்
 எத்தனித் தாலாகாதா நீரேவிள்ளும்
குன்றதனி லேறிமலை யுச்சிநின்றே
 குடல்நடுங்கக் குதித்தாப்போல் பிழைத்தோர் யோகி
மன்றதனில் நின்றவரிற் கோடிக்கொன்று
 மறையோகி திருவாகி குருவாய்நின்றே. 765

குருவானாற் திருவாகும் கோணாநாணா
 கோன்போல வாழ்ந்திடலாம் சித்தர்க்குள்ளே
பொருவானாற் திருத்திவிடிற் பொல்லாப்பேகும்
 போனசென்மந் தான்தெரியும் புதல்வரைப்போல்
மருவானா ளெடுப்பதற்கு ஞாயந்தோற்றும்
 மலடிபிள்ளை பேர்பெற்ற வாருபோல
உருவானா லாகாம லென்செய்தீர்கள்
 உத்தமரைக் காணாம லொழிந்திட்டீரே. 766

## இருக்க விதி

ஒழிந்திடா தேயிருநீ வெளியேறாதே
 ஊணுறக்க மின்பதுன்பம் பொதுவாய்நில்லு
அழிவில்லா தேயிருக்க முத்திகாண
 அம்பட்ட னாவிதனாற் சிரைத்திடாதே
உளியில்லா தேயிருந்து மலையேகல்லாய்
 ஒட்டொட்டாய் நொருக்கிவிட்ட உகமைபோல
தெளிவில்லா தேயிருந்தா லென்னசெய்வோம்
 சீவனங்கள் செய்வதற்குத் தியங்கிநீரே. 767

தியங்கினார் தன்னைவிட்டு அறிவைவிட்டு
தேசத்திற் பொருளறியாத் தோசிமாடு
மயங்கியே மானிடர்கள் லேசேயானார்
மாண்டதினா லென்னபலன் மரணந்தோணா
கசங்கினா ரிப்படியே கலகநெஞ்சால்
கலைவாசி மனமறியார் அறிவுங்காணார்
வயங்கினா ரென்னாளுங் காலன்கண்ட
மாந்தரையே நாடாமல் மறந்திட்டாரே. 768

மறந்திட்டார் தன்மரணஞ் சரீரசிட்சை
மறந்திட்டார் நோய்வலுப்பு பித்தமூடம்
துறந்திட்டார் அறிவேறுந் திரிகாலத்தார்
தூண்டாத சோதியுட வெளிச்சங்கண்டார்
சுறந்திட்டார் மானிடர்போற் காயகற்பம்
கண்டவர்கள் அமுதுண்டு காயசித்தி
கறந்திட்டார் காயசுத்தி பிராணசுத்தி
சூட்சமதைக் கண்டவர்கள் சுருக்கந்தானே. 769

சுருக்கந்தான் விட்டகுறை பிறந்தமார்க்கம்
தூண்டியே சொல்லுகிறேன் பிறந்தார்பின்னே
இருக்குந்தான் தாய்தந்தை குலவாசாரம்
என்னஇந்த மக்களுக்குத் தலவிசேடம்
பொருக்குந்தான் கோவில்குளம் தீர்த்தஞ்சால
பொய்க்குருவை விட்டகலு மெய்யேசால
வெருக்குந்தான் பொய்புகலல் அய்யாஅய்யா
மேன்மக்க ளாகார்க்கு முத்திவீணே. 770

வீண்முத்தி யாகாது மெய்யேதொட்டு
மெய்க்குருவால் பொய்க்குருவை
வீணென்றெண்ணி
சாணென்று தானறிந்து வயரேசோம்பர்
தன்வயிற்றை நிரப்புதற்கு அறிவில்லாதார்
மான்மழுவைத் தரித்தவரைக் காணமாட்டார்
மக்களுக்குச் சொல்லுதற்குக் குருவானாரோ
தேன்மொழியுங் குருமொழியு மிதற்குவேறோ
தேறுவான் வேறுவிதம் மாறுவானே. 771

மாறுவான் பொய்க்குருவை வாயாற்தட்டி
 மரணத்து நாளறிவான் தூரதிஷ்டி
கூறுவான் நானாரு நீதானாரு
 குருவென்றாற் சொல்லிடுமே உம்மைக்கொண்டு
சாறுவான் திரிகால வர்த்தமோடு
 சமத்ததிக முள்ளானே மெய்யுளானே
கோறுவான் யெட்டுரெண்டும் பத்தேயென்பான்
 குருவானாற் சொல்லுமென்று கூறுவானே. 772

கூறுமே யாம்நினைந்த சங்கற்பத்தை
 குருவானாற் சொல்லிடுமே அடியராவோம்
யாருமே யெட்டுரெண்டும் பத்தென்றார்கள்
 யார்சொன்னா ரகஸ்தியரே விரித்துச்சொன்னார்
தாருமே மாந்தர்களு மயங்கினார்கள்
 தமர்சித்த ரானாக்காற் சொல்லுவார்கள்
கோருமே நீர்கேட்கச் சொல்லிவாரேன்
 குருவாகு மந்திரங்க ளீதுதானே. 773

மந்திரங்கள் பிறந்தவிடம் வேதமோடு
 வாய்ச்சொல்லு வல்லபங்கள் உயிரினோடு
தந்திரங்கள் பிறந்தவிடம் பூசையோடு
 தானான யிடம்பிறந்த அறிவினோடு
யந்திரங்கள் பிறந்தவிடம் மணிநாவோடு
 அறுத்தடைத்த வாசலொடு நாசியூடு
உன்திறங்க ளென்திறங்கள் பொதுவினோடு
 ஊடாடி உயிர்விளங்குஞ் செபத்தினோடே. 774

செபத்திலே தவம்விளையு மிடத்தினோடு
 செல்காலம் வருங்கால மத்தியோடு
அபத்திலே போகாம லுச்சியோடு
 ஆச்சரியம் அண்ணாக்கு மணுபோற்தொங்கும்
இகத்திலே யாவருக்கு மிதுதானில்லார்
 இக்கூடு ஊமையென்றும் அடைப்பதென்றும்
யுகத்திலே ஒளிபிறந்த காலத்தோடு
 உற்றுணர்ந்தால் கிட்டவில்லை பீடந்தனே. 775

பீடமே மேல்வாசல் உச்சிவீடு
பிரமரந்திர உச்சிக்கண் கபாலஒடு
கூடமே மேல்வாசல் கொடியண்ணாக்கு
கொடியொன்று தொங்குதடா அண்ணாக்கேபார்
மாடமே யொன்றிருக்கு கபாலங்கீழே
மக்களே அண்ணாக்கு மேலேதானே
ஓடமே கப்பலுண்டு நீரேயேற
உச்சிகொடி யண்ணாக்கு வாசல்பின்னே. 776

வாசலே தொங்குநாக்கு பின்புரத்தே
வாசலொன்று கோழையது வருகும்வாசல்
ஏசலே கபாலநீ ரிறங்கும்வாசல்
இவ்வாசல் நீர்களெல்லா மிறங்கித்தானால்
பேசலே வாசியிந்த உயிருதானே
பெரியமண்டை யேகிடுமே குளிகையாகும்
பூசலே யாகிவிடுங் குளிகைசித்தி
பொய்க்கண்ணு மெய்க்கண்ணும்
நெத்திக்கண்ணே. 777

நெத்திக்கண் திரிகால வர்த்தஞ்சொல்லும்
நீண்டசித்தி கண்டவுடன் திதியுஞ்சிஷ்டி
முத்திக்கண் விளைவிதுவே பொருளேசித்தி
மொய்க்குமல்லோ சம்மாரம் தன்னைச்சுத்தி
வத்திக்க ணாகாது யெந்தநாளும்
வருணமயது யேகிடுமே கண்ணுக்கெட்டா
வெத்திக்க ணிப்படியே செவியாந்தூரம்
மேல்விளைவ தறிந்துவரும் கேட்டும்பார்த்தே.
778

பார்த்தகண் செவிதானே அண்டஞ்சென்று
பறந்துவருந் திரிகால வர்த்தம்போல
ஊர்த்துவருங் கண்குளிர்ச்சி செவிதானெட்டும்
உலகயெல்லை சூரியர்க்கு மப்பாற்தானே
தீர்த்துவரும் அண்டச்சுவர் வெளிக்கப்பாலே
தென்வடக்கு கிழமேலும் சுத்திஆயும்
நேர்ந்துவருங் காரியம்போ லாதியந்தம்
நிமிஷத்தி லுள்ளதெல்லாம் சொல்லுந்தானே.
779

உள்ளதெல்லா மித்தோடு உயரமேலே
ஊடுருவிச் செல்லுமல்லோ வர்த்தத்தாலே
மொள்ளவல்ல வல்லவர்க்குங் கதிராமேலே
மூடுவெள்ளி பரப்பிருக்கு மதியின்மேலே
தெள்ளவல்ல வல்லவர்க்கு மேகப்மேலே
திரண்டுவிடுஞ் சுழற்காற்று வாய்வுமேலே
கொள்ளவல்ல வாசிஉயிர் குளிகையாலே
கொட்டிவைத்த வதன்மேலே கருப்பைத்
தொட்டே. 780

தொட்டந்த ஆகாய அண்டவட்டம்
சுற்றிவந்து ஊடுருவி வெளியைப்பார்க்கும்
கொட்டுமந்தத் தேள்கொடுக்கு நோக்கல்போல
கூந்தாடு மெதிர்நோக்கும் தொட்டாற்போகும்
விட்டந்த யோகமுனி நினைப்பானானால்
மீளாது பாக்கியதை முழுதும்நோக்கும்
சட்டந்தத் தன்னறிவால் விளைந்தபோதம்
தூங்காமற் தூங்கியது நிமைகூடாதே. 781

கூடாதா நெத்திக்கண் திறந்ததானால்
குருமுனியே யாகலையா நாரதாதி
வாடாதா மனந்தானுந் தாழ்ந்திடாதா
வசிஷ்டரென்ன அகஸ்தியரும் விஸ்வாமித்திரன்
நாடாதா கொங்கணவன் போகநாதன்
ஞாயிறுபோ லேவீசுங் காசிநாதன்
போடாதா திரிகால புசுண்டநாதன்
பொம்மையொட்டிக் கண்டதிரு மூலநாதர். 782

நாதனெனப் பெற்றானே தீசிநாதன்
நரம்புபோ லேயிருந்த கூர்மனோடு
போதனே யானானே கிஷ்ணைக்கோனே
புளுக்கச்சி வியாசனுமே கூடினானே
ஆதனே அத்திரியும் புலத்தியோனும்
ஆகையினாற் சிஷ்டிதிதி சம்மாரங்கள்
வாதனே கெவுனமதி லேகினானே
வல்லபங்கள் செய்தவள்ளுவ நாதன்றானே. 783

நாதனே இடைக்காடன் மதியேதேய
நாள்சொல்லும் நாளறிந்தான் கணிதவித்தே
பூதனே ராகுவரும் நாளேசொன்னான்
பொய்சொன்னாப் போலேயல்ல மழையே
சொன்னான்
வேதனே கலைக்கோட்டான் வந்தாற்தானே
மேகமெல்லாந் திரண்டு வரும் யேவல் செய்யும்
சூதனே யின்னமொன்று சத்திரியர்க்குள்
சூடாலை காலமதில் நளாகினிக்கே. 784

வருத்தினார் சூரியரும் வந்தார்பின்னே
வல்லபங்க ளிதுவல்ல மரணமாகா
தருத்திறூல் வெளிப்படவே யாகா ஆகா
தொண்டுதொட்டு முனிகளுமே ரிஷிசித்தாதி
பருத்திநூல் தன்ளுதல்போ லுயிரைவிட்டார்
பரமபதங் கண்டவரோ பறைச்சிமக்கள்
இருத்தினூ லிருக்கிவிட்ட புசுண்டநாதன்
யெப்படியோ நின்றானே யெண்ணிலாதோ. 785

எண்ணிலாக் காலமது கண்டகோளன்
எவர்களுக்கும் வல்லவரே பதினெண்சித்தர்
நண்ணிலார் நாணமுற்று யிவருக்கஞ்சி
நரைமூப்புச் சாக்காட்டைக் கேட்டிட்டாரே
வெண்ணில்ா மதிகுறைந்த காலங்கண்டோர்
மெய்வலுவில் சூரியனா ருதிப்புமுன்னோன்
நண்ணிவிலாத் தோளெலும்பு வலுத்தகூடன்
நரைமூப்புச் சாக்காட்டைத் துறத்திவென்றானே. 786

வென்றானே தன்மரணம் யெமனார்கூட்டை
வேறொன்றைப் படைத்தானே திஷ்டியாலே
நின்றானே சதுர்யுகமோ கோடியப்பா
நீள்விசும்புக் கெட்டாதான் உருவிலுள்ளான்
குன்றானே உடல்நீளான் குருகான்தட்டை
குருபோலத் தானிருகான் கிழவனாகான்
மன்றானே மண்மலைகள் கடலாங்காலம்
வாய்த்திடுமே எந்தனுக்கு ஆய்சென்றானே. 787

ஆயிசோ யென்னயிது அதிசயந்தான்
 ஆதித்தின் பலஉருக்கள் கண்டமெய்யன்
வாய்ச மென்றபேர் கொண்டசித்தன்
 வாய்மூக்கு நீண்டதினால் காகனாதன்
ஆய்ச மொன்றுமில்லான் நரைமூப்பாலே
 அனேகருமே சொல்லிவைத்தார் முனிநாதராதி
போய்சை கண்டுகொண்டார் பிடித்துக்கொண்டார்
 புரிதிரிக்குங் கயர்போலே பிராணன்தன்னே. 788

பிராணனையே கயர்திரித்தார் புரிமூன்றாக
 பெருமூக்கி லோடுமுயிர் மூச்சாடாமல்
பிராணனையே மூக்குநுனி யாடிடாமல்
 பெருவாசல் ரெண்டடைத்து நுனியடைத்து
பெருவாச லேற்றிவிட்டார் உச்சிவாசல்
 பெருமண்டை நின்றுவிட்ட குளிகையாச்சு
பெருமண்டை உச்சியேறி ஒளியாய்த்தேறி
 பெருந்தூரந் தூக்கிடுமே கெவுனம்பாய்ந்தே. 789

கெவுனமே யிப்படித்தான் பிலமேமூச்சு
 கெதியென்ன முத்தியுட பொருளிதாகும்
மவுனமே யிப்படித்தான் செய்யும்பொய்யோ
 வாய்க்குமல்லோ காயதத்திரி வலுவே செய்யும்
கெவுனமே மேல்கிளப்புந் தொழிலேதானே
 கேசரத்தி லேற்றிவைக்கும் சித்திதானும்
மவுனமே யென்றுசொன்னார் முன்னோரெல்லாம்
 வந்தவர்கள் கண்டுகொண்ட வகையிதாமே. 790

வகையீது தொகையிதுவே கணக்கோமெத்த
 வல்லவர்கள் மெத்தவுண்டு தொழிலுமுண்டு
பகையீது காயத்து வேறுமுண்டோ
 பைங்கூழைக் கடப்பதற்கு வேறேயுண்டோ
தொகையீது கண்டவர்கள் வெகுபேருண்டு
 சொல்சொல்லாய்ச் சொல்லிவைத்தார்
 மென்மேலாக
நகையீதே உடலுக்குத் திரியாமந்திரம்
 நரர்கண்ட சந்தோஷம் வேறேயேதே. 791

ஏதென்று வேறேவகை தொகைகள் தானே
எண்ணியெண்ணிச் சொன்னாரே யெண்ணிலாதார்
வானிலுள்ள நச்சேத்திரம் விளைதல்போல
வசனித்த வாக்குகளே மறைநூலாச்சு
கோனென்று வந்தாலே சொல்லலாகும்
குருவாக வேணுமென்றால் முழுதுங்காணு
தானென்று வந்தவர்கள் யேறவில்லை
சம்பிரதா யங்களென்ன சலனந்தானே. 792

சலனந்தான் நெஞ்சதனிற் பள்ளந்தன்னில்
தாளாடும் நெஞ்சிலுயிர் பிராணன்சுற்றும்
சலனந்தான் நெஞ்சுபள்ளம் சுற்றுத்தானே
தானேறில் தொண்டைசுத்திப் பேசுமப்பா
சலனந்தான் சங்குதொட்டு மேலேயேறி
தானந்தப் புருவமத்தி நிற்குமாகில்
சலனந்தான் கும்பிடுமே யோகஞ்செய்யும்
தானேறி நெற்றிவழி யுச்சிமுட்டே. 793

உச்சிமுட்டி வாசிஉயிர் சீவன்தானும்
உயிரிருந்து வட்டமிட்டு ஓடிச்சுற்றும்
நச்சியதைப் பார்த்தாக்கால் ஞானமாகும்
நான்சொன்ன வாசிஉயிர் பிடறிவந்தால்
கச்சியிந்த வாதபித்த சிலேத்மநீரை
கால்வாசி வாங்காது பித்தம்ஓங்கும்
மெச்சியிந்தப் பித்தமொடு பிராணன்ரெண்டுங்
மேன்மக்கள் கூடினாப்போல் சேருந்தானே. 794

சேருமே சேர்ந்ததுவுங் கீழிறங்கில்
திரிமூர்த்தி யானாலு மரணமாவார்
வாருமே உச்சியிலே நிற்கவேணும்
வாய்கொண்டு பேசினாப்போ லுச்சிசொல்லும்
கோறுமே நடுநாமப் பாதைமார்க்கம்
கூர்ந்துபார் புருவமத்தி மூக்குநேரே
தேறுமே யவ்விடத்தி லொளியேகாணும்
தேர்வதற்குப் பொட்டுநாம மிட்டார்தானே. 795

தானேதா னிட்டாரே காலைமாலை
தானறிந்து பிறர்சத்தங் கேளாமுன்னே
வானேதான் மனமாகி ஆசனங்கள்
மனம்உடலு மிணங்கியதே ஆசனங்கள்
நானேதான் கண்டுணர்ந்தேன் வெகுநாள்சென்று
நாட்டிலே தானிருந்தேன் மலையேசெல்வேன்
கோனேதா னாவதற்குந் தேறுதற்கும்
குருவாக நான் தெளியத் தேறினேனே. 796

தேறினே னிரண்டுபத்து ரெண்டு ஆண்டு
தெய்வத்தை நான்சேரக் காத்திருந்தேன்
ஆறினே னென்மனைதைச் சாந்திபண்ணி
அங்குஷ்ட அகத்தியரை நோக்கிநின்றேன்.
கூறினார் குன்மவலி தெக்ஷனாயன்
குடுகுடு கஞ்சாவின் சத்தம்போல
மீறினா ரென்காதிற் சத்தங்கேட்க
வெள்ளாள மேனிகொண்டு வந்தார்முன்னே. 779

இருவென்றே னதுகேட்டு இருந்தார்முன்னே
இறைஉடலில் விட்டவரின் உயிரைத்தானே
பொருளென்ற அருந்தவசன் முடிமேல்நின்று
பூரித்துப் பொங்கியதோர் குடமேபோல
மருவொன்று மில்லாத அருளே ஆன்மா
வாசிவலு சித்திவலு வென்னைச்சேர்ந்த
பொருளொன்றும் நானறியாக் காலந்தன்னிற்
பொய்யுடலு மெய்யாகப் புதுமையாச்சே. 798

புதுமையே தென்றாக்கால் கலகமில்லை.
பொரிபுலனு மனஅறிவும் பொங்கிவெம்பி
புதுமையெனத் தேய்ந்தலுத்துச் சுகமேபெற்றேன்
புலாஉடலில் மெய்யொளியே பொருந்துகின்றேன்
புதுமையென்ற ஆச்சரியங் கண்டுகொண்டேன்
புரமூன்றை யெறித்தவரைக் கண்டதாலே
புதுமையென நானிருந்தேன் நெத்திக்கண்ணால்
போனது வந்தது வராதுங்கண்டேனே. 799

கண்டேனே வசிஷ்டருமிப் படியேதானே
கண்ணெதிரே நின்றாரே உடலினோடு
தண்டேனே அருந்ததியுங் கூடநின்றாள்
சரஸ்பதியும் வந்தாளே பிரம்மனோடு
மொண்டேனே அவர்கொடுக்க வாங்கியுண்டேன்
மோனநகை யுள்ளவரே யிருவருந்தான்
அண்டேனே வந்துகண்டு நானுங்கண்டு
அவர்சோடி பார்த்திருந்தே னருமையாச்சே. 800

ஆச்சப்பா அருந்ததியும் பிள்ளைபெற்றாள்
அச்சோடி சரஸ்பதியுந் தனியேநின்றாள்
மூச்சப்பா தானறிந்தே னிவரைக்கண்டேன்
முன்னிருந்தும் பேசார்கள் கண்டுகொண்டேன்
கூச்சப்பா யில்லாதான் குலக்கொழுந்து
குருவாகி நின்றவளே பெண்ணுமானாள்
ஏச்சப்பா வென்றுசொல்லிக் கழித்திடாதே
என்னம்மை பேர்சொன்னேன் பதனம்பண்ணே. 801

என்னம்மை பேர்சொன்னேன் ஊரேசொன்னேன்
இருக்குமிடம் ஆச்சிரமம் வசிஷ்டர்காசி
உன்னம்மை யென்னம்மை ஒன்றேயானால்
ஒளியம்மை நம்மம்மை உடலின்சோதி
என்னம்மை யிக்கூடு காயமட்டே
எழுந்தோடிப் போகும்நாள் ஓடிப்போகும்
உன்றன்மை வாய்த்தாலே ஒளியிருக்கும்
உடல்தம்மைக் கண்டாக்கால் காயசித்தே 802

காயசித்திக் கர்ப்பஉட லழியாமார்க்கம்
காட்டுகிறேன் மூணறையாங் கோடிகண்ணால்
தூயசித்தி கண்டார்கள் லேசாய்த்தானே
சொல்லாமல் விட்டுவிட்டார் துணிவில்லாமல்
போய்சத்தி நின்றார்கள் பொரியினாலே
பொங்குசத்தி வல்லபத்தால் மூழ்கினார்கள்
நீய்சத்தி கண்டுகொண்டாற் காணலாகும்
நேர்நில்லு மனங்குவிந்து நேரேபாரே. 803

பாரப்பா கண்கூசம் பதைக்கும்நெஞ்சம்
பளீரென்று மின்னலொளி பார்நீமுன்னே
ஆரப்பா சொல்வார்கள் ஒளிதான்சொல்லும்
ஆச்சரியங் காயசித்தி யருளுந்தானே
பேரப்பா சொல்லாதோ யெதிரே சொல்லும்
பின்னுமே முறையோடே பெருமையெல்லாம்
ஊரப்பா உளமிருந்து வெளியேசொல்லும்
உற்றுப்பார் கண்டதெல்லாம் பெருமைதானே. 804

பெருமையே யெதிர்நின்று வெளியேசொல்லும்
பிசகாது நின்றிடலாம் பேரேபேரு
வருமையே தாராது யோகம்யோகம்
வாய்த்தாலே போகாது வருமையென்ன
குருவையே நேசித்தால் வருமையேது
குருசொல்லை நினைத்தாலே பெருமையாகும்
திருவையே நோக்கியவர் உளமேகட்டி
தீயொளியைக் காணார்கள் செபமில்லாரே. 805

இல்லாறே வாழ்விந்த யோகம்விட்டார்
இல்லறத்தி லிருந்தாரே இதனைப்பார்ப்பார்
வல்லாரே யவர்களுக்கு குருவேகிட்டும்
வசனித்த சாஸ்திரமும் பொருளேகிட்டும்
நெல்லாரே திறப்பனபோல் துறந்திறந்தார்
நீடித்து வாழ்ந்தாலும் அருளேதூரம்
சொல்லாரே வாய்ப்பகட்டிற் துறவுமாகார்
தூண்டினம்தோர் விரல்சொற்க மானாற்போலே. 806

போலவே பொய்க்குருவு மதுபோற்பிள்ளை
புளுக்கச்சி யாளுக்குப் புளுக்கைபோல
சாலவே வேடகுரு மனதைக்காணார்
தன்னிலையைக் காண்பதற்கு குருவோசீஷர்
ஏலவே இவ்விருவர் மனதைக்காணார்
ஏர்போலே தானிழுத்துப் பரம்படிப்பார்
வாலவே மன்மதனா லிருவர்நேசம்
வாய்கொண்டு மனமில்லார் அறிவில்லாரே. 807

அறிவில்லார் கூட்டமிந்தக் குருநாம்கூடி
அறிவழிந்து மனமறிந்து பெற்றலாபம்
சொரிவில்லாச் சுரணையற்ற மாடுபோல
சுரணையுள்ள மாடுடனே சோடிபோல
நெறியில்லாக் குருசீஷன் சோடிசேர்ந்து
நீண்டதரை யேறுகின்ற யேத்தம்போல
கரியில்லாத் தோலெலும்பு இறச்சிகண்டு
கண்மூடித் திண்ணுகின்ற சுணங்கன்போலே. 808

சுணங்கனவன் வேசரிபோல் உறுமிக்கத்தி
தூரியது பூனைகண்டு தொங்கலேபோல்
பிணங்கனவன் யானைகண்ட சிரமம்போல
பெருஞ்சீரல் நாவெடுத்துப் பெருமையோதி
மணங்கொள்பூ வண்டடுத்த வாறுபோல
மானிடர்கள் தங்களிடம் மயங்குவார்கள்
குணங்கொள்ள வேணுமென்று குருவைத்தேடி
குருசீஷன் தேடினது வாதுயேனோ. 809

ஏனென்றா லிரட்டித்த மனமிரண்டு
இருவருடல் ரெண்டாச்சு ஆகநாலு
ஊனென்றா லைம்பூதம் யீரைந்தோடு
உற்றகரு விக்குலங்கள் யெண்ணிப்பார்த்தால்
ஆனென்றா லிருவரகம் உடலினோடு
ஆமிந்தக் கருவிகளுள் ஒன்றுசேர
நானென்றால் வந்துவிடும் லேசாய்த்தோஷம்
நாம்கூடக் கருவிகளும் கூடாப்பேதத்தே. 810

பேதமே யெத்தனையோ யெண்ணிலக்கம்
பெருந்துகையோ கோடியிலே பெரியலாபம்
பாதமே தேடினவர் பேதங்கோடி
பக்குவர்கள் கண்டதனைப் பரிசோதித்து
நாதமே கேட்பதற்கு ஒளியைவேண்டி
நாதனே யானகுரு வொளியைக்கண்டு
காதமே போகாமல் நிலையிற்கண்டு
காலங்கி கண்டுகொள்வான் தன்னுட்தானே. 811

தன்னுள்ளே காணாதான் குருவைக்கேட்பான்
தன்னையே மறந்தவனே குருவாமென்பான்
மண்ணிலே மாந்தரிலே குருவாமென்பான்
மறைவேதம் நாமென்பான் பொருளேதென்பான்
என்னுளே தானிருக்கு வாங்குமென்பான்
என்னையே விட்டுவிடில் காணீரென்பான்
நின்னுளே காட்டுகிறே னென்று சொல்வான்
நிசங்காண மாட்டாதான் நிசங்காணானே. 812

காணாத கத்தபத்தின் குரலைக்கேட்டு
கண்தெரியாச் சீஷனுமே கருத்தில்லானாம்
நானானே சோடியவன் கூடக்கூடி
நாமிரண்டு பேரும்ஒன்றே யென்றுஓடி
காணானே வெகுதூரம் சென்றுநாடி
கல்மனதைக் கொண்டல்லோ கவலைகூடி
ஓணானே மேலிருந்து தலையசைக்க
உயரேறிப் பதுங்கிவிடும் உவமையாமே. 813

உவமையென்ன ஓர்பித்தன் பொருளைநாடி
ஊர்விட்டு வனம்புகுந்து ஓணான்கண்டான்
அவமையொடு நின்றிருந்த மரத்தின்மேலே
அசைகொம்பி லோர்நுனியிற் படுத்திருந்த
இலகையது இவன்சத்தங் கேட்டபோது
இருந்தகொம்பிற் படுத்திருந்து
யெழுந்துட்கார்ந்த
தகமையதைக் கண்டறிந்த பொருளில்லானும்
தாவந்தந் தீர்வதற்குக் கேட்கிறானே. 814

கேள்ப்பானே நீயிந்தக் காட்டிற்தானே
கிளைக்கொம்பி லேயிருந்த சினேகத்தோனே
வாழ்பவனே யின்றெனக்குக் கெதிநீதானே
வாழ்விக்க வந்தவன்போ லெதிரேநின்றாய்
தாள்ப்பாளைப் பூட்டிருக்கும் பொருளைத்தேடி
தானிங்கு யான்வந்தே நீயேசொல்லு
கோட்பானைக் கண்ணெதிரிற் கண்டகொம்பில்
குடியிருக்கும் ஓணானுந் தலையசைத்தே. 815

அசைத்ததனைக் கண்டிந்தப் பித்தன்ஓணான்
அவ்விருவர் சம்வாதம் சொல்கசைக்க
இசைத்தபதி லொன்றுக்கென் றிவனசைக்க
இப்படியே யதுவசைக்க எய்தினோரும்
பசைத்தமண் ணீர்போல ஒன்றுக்கொன்று
பாரிந்த நீர்ஒட்டும் பான்மையானார்
விசைத்தபடி தலையசைக்க ஓணானிட்ட
மெய்குலுக்கு அறிந்தவன்போல் விரட்டினானே. 816

விரட்டினான் பின்தொடர்ந்து ஓணாநின்ற
விடமதிலே குறியிடத்தே தோண்டிப்பார்த்தான்
அரட்டினா னென்றுயர்ந்த ஓணான்ஓட
அவ்விடத்தில் நீயிருவென் றருகேசென்றான்
உருட்டினான் கல்லுருளக் கல்லெறிந்து
உருண்டகல் நிற்குமுன்னே தடுத்துவிட்டான்
மருட்டினான் கண்டவந்த விடத்திற்தானே
வாயாலே கிணறுவெட்டும் வாறுபோலே. 817

போலவே யவ்விடத்திற் தோண்டித்தானே
பொய்யிதுவென் றெண்ணாதான் புரையோணானை
சாலவே பெரிதென்று வாழ்ந்தாப்போலே
தந்தைகுரு சங்கர்ப்பம் சீஷன்பெற்று
ஏலவே யான்கண்ட கெதிதானென்று
எண்ணியெண்ணி நைந்துமனம் அறிவிழந்தே
காலமே சூரியனுக் கெதிரேநின்ற
கங்குல்போ லானாரே கதியிழந்தே. 818

இழந்தார்கள் குருவோடு சீஷன்தானும்
இவரிருவர் பெற்றபல னிதுவேதானே
பழந்தானே பாலிருக்க நரகில்வீழ்ந்த
பாதைவழி தப்பினவர் பள்ளம்வீழ்ந்த
கிழந்தானே வாலிபத்தை யிழந்தாப்போல
கிளிபூனை கைமாரு கிட்டலேபோல்
உளந்தானே கபநடுவில் யிருகிமூடி
உன்மத்தர் பிசாசர்குணம் கிருக்கனாவாரே. 819

கிருக்கனார் கதியினருட் சுகமேகாணார்
கேள்மக்க ளருள்பெற்றால் உயிர்க்குராசா
உருக்காணா ருடலுயிரும் வளருந்தேயா
ஓகோகோ வாய்ச்சொல்லு மூர்த்திபாசை
திருக்கணார் திருவானார் ஒளியினுள்ளார்
சென்மாந் திரபவத்தின் வினையைவென்றார்
நருக்காணார் மனங்கண்டு உடலேகொண்டார்
நாடிநரம் பத்தலையுஞ் சித்திதானே. 820

சித்தியே நாடிநரம் பொன்றாலொன்று
சேர்விக்கு முத்திசித்தி சேரவைக்கும்
முத்தியே கோடிவிதம் நரம்புபோல
முதுகுதண்டு முள்ளெலும்பு கோணல்போல
அத்தியே ஆள்நீழ அகலம்போல
அங்கத்தின் குறிபோல அமைந்தநாடி
வெத்தியே தானடையச் சிக்கறுத்து
மேல்வலத்தைக் கழித்தாக்கால் உடல்
மோச்சமாமே. 821

மோச்சமே நரகமலப் பாண்டந்தன்னில்
மோட்சமென்ற தனையறிந்து மலத்தைநீக்கு
மோச்சமே வலம்நீங்கச் சித்திதோணும்
முன்னாசி பாயாது வாசிமூச்சு
மோச்சமே மூச்சாகு மூலதண்டில்
மூலமதி லேயிருந்து முன்கால்பாயும்
மோச்சமே மொழிபறடு விரல்நிகக்கண்
முட்டிநின்று உள்ளங்கால் சுற்றிஆடும். 822

ஆடுமே வாசிமூச் சாடல்தானே
அந்தரங்கம் பின்னேறி உச்சியேறும்
ஓடுமே யிப்படியே உருண்டுருண்டு
உள்ளங்கால் உச்சிமுதல் சத்திபண்ணும்
பாடுமே உள்ளிதையம் நடனஞ்செய்யும்
பாம்புபோற் சுருண்டுவிளை யாடுமூலம்
கூடுமே பெருமொழியாம் முழங்கால்மீது
கூத்தாடு மிருபுறமும் எலும்பினுள்ளே. 823

எலும்பினுள்ளே ஓடிஉள்ளங் காலைத்தொட்டு
எத்தசையும் பூணும்உயி ரெல்லாஞ்சாரும்
எலும்பினுள்ளே ஓடியந்தப் பாதைகூடி
எவ்விடமுந் தானேறி உறைந்துபோகும்
எலும்பினுள்ளே உயிரமைந்து தசையைச் சேர்ந்து
ஏகாமல் நின்றுவிடும் ஏகில்ஏகும்
எலும்மிஉடல் பசைநரம்பு யிறுகிப்போகும்
ஏகவே தானொக்கு மிதையங்காணே. 824

காணுமே கண்ணெதிரில் மறைந்தருபம்
காயசித்தி யுடல்காணும் செவுனந்தோணும்
நாணுமே உள்ளிருளும் எமனும்ஓடும்
நாணுங்காண் வஞ்சனையும் பில்லிசூதும்
தோணுமே கண்ணெதிர்பட் டாலேமாளும்
சுயபுத்தி சந்தேகம் விட்டாப்போலே
ஈணுமே வெளியதனி லிருந்ததெல்லாம்
என்னிடத்தே தோன்றிவிடு மறைந்தால்மாளே. 825

மாளுமே பின்திரும்பிப் பிறந்திறக்கா
வையகத்தின் வெளியெல்லாம் வாங்கிவைக்கும்
கோழுமே வுருஞான முதையமானால்
குருவாகும் பரவெளியில் ஞானிசேரில்
தாழுமே யோகமலம் யோகமாழும்
சந்ததிகள் சேராது தானேநிற்கும்
ஆழுமே பொய்பிறட்டு அதற்குமேலே
ஆகாய வெளிகடந்த அறிவுள்ளோரே. 826

அறிவுள்ளோர் பொய்யாதி யந்தங்காண்பார்
ஆச்சரிய மெய்யிருளில் ஆதியந்தம்
தெரிவில்லார் செகசால மனந்தமுண்டு
சீவனத்தில் மெய்த்தொழில்க ளனந்தமுண்டு
நெறியுள்ளா ரதனாலே தெளிவதானார்
நிமிஷத்திற் கோடிவிளை யாடல்சித்து
பொரியுள்ளா ரதினாலே அதுவானார்கள்
பொய்வாக்கு மெய்யாகப் போகுந்தானே. 827

தானென்ற யிப்பதத்திற் சொல்வார்வாக்கு
தலைதெரித்துப் போகாதே சண்டிமாடே
நானென்ற பேய்பிடித்துத் திரிந்திடாதே
நமன்கோழை போக்காத நாரிமாடே
ஊனென்ற உடம்பினுக்கு யிரையைத்தானே
ஒருகோடி தனமிருந்து முட்காராமல்
ஆனென்ற மனமெடுத்து அலைச்சலுற்று
ஆதியந்தங் காணஓடு வார்கள்போலே. 828

ஓடுவார் போற்றிரியும் உள்ளத்தோரே
உரைத்தபடி நிற்பீரோ பிசகுவீரோ
நாடுவார் தங்களையும் விரட்டுவீரோ
நமன்நானென் றெண்ணியே சொல்லுவீரோ
பாடுவார் சொற்போலப் பேசுவீரோ
பிரிவாசி கண்டவரைக் காணுவீரோ
வாடுவார் போற்றிரியு மனதுள்ளாரே
வாயாரச்சொன் னாற்பலிக்க வேணும்பாரே. 829

வேணுமே சொற்பித்தங் கொண்டமாரே
விளக்கமா ரோஉனக்குப் பேரும்வேறோ
தோணுமே சொல்லறிவு சொல்லின்சேதி
துகையென்றாற் காணுமோ கெவுனிப்பாகும்
வீணுமோ நான்சொல்ல நாளேயில்லை
விதியில்லை யெங்களுக்கு முங்களுக்கும்
பேணுமோ சொற்சேர மறியாத்தோசி
பிரபலங்கள் பண்ணாமல் பிலமாய்நில்லே. 830

நில்லிந்தப் பூஞான வொளியைக்கண்டு
நேர்நில்லு நெத்திமத்தி நீளக்கூத்து
புல்லிந்தப் புஷ்பவொளி பூரிக்கத்தான்
பூணாமல் விட்டுவிட்டால் குருவென்செய்வார்
நெல்லிந்தப் பூமியுள வதனிற்செய்யார்
நீள்கதிரை யறுப்பதுண்டோ நீரேபாரும்
மல்லிந்த மல்லனாஞ் செட்டிவேசம்
வாய்த்ததாற் றந்திரசிலம்பம் வேணுந்தானே. 831

வேணுங்காண் சிலம்பமது மூச்சாறிதானே
மெய்யென்ன தந்திரமே மூச்சுவாலை
பூணுங்காண் மூச்சுவிடில் யேதுகாணும்
பொல்லாப்பு ஆகாது புளுக்கைகூது
தோணுங்கா ணடிக்கடியே விடாதுநீவீர்
துன்பமது செய்துவிடுஞ் சூதாடல்போல்
வீணுங்கா ணுங்களுக்குச் சொன்னார்கெட்டார் 832
மெய்வலுவைத் தேடாத விருதாக்கூடே.

கூடமே நோபுரத்தி லெழுதிவைத்து
கொடுஉச்சி முனையென மறைந்திருக்கும்
மாடமே ஆறிருக்கும் கதிநெய்யாரு
மக்களுக்கு வேண்டியல்லோ பொருளாங்கூடம்
ஆடவே அவ்வரையில் ஒளிதான்சோதி
அடைத்துவைத்த வெளிப்பூட்டைத் திறந்தால்
நீரும்
ஓடமே யேறிக்கரை வந்தாற்போல
உன்னதமாய் வந்திடுவீர் ஏற்றிவைப்பேனே. 833

ஏற்றிவைத்தா ரெத்தனைபேர் மயங்கும்போது
எங்குமுண்டு இங்குமுண்டு நமக்குமுண்டு
ஆற்றிவித்தா ரத்தனையுந் தெரிந்துவந்து
அப்பொழுதே தூண்டிவிட்டார் நெறிநின்றோர்க்கு
போற்றுவித்தா ரவர்பிரிந்து மக்கள்தேடி
போனவரை மீண்டவர்கள் நினைத்தாற்காண்பார்
ஏற்றுவித்த ஒத்தாசை பதிலொத்தாசை
எல்லாருஞ் செய்ததென்ன செருப்புமாறே. 834

மாருபார் செருப்புடையுந் தூத்தகாலி
மக்களுக்கே செய்ததென்ன விருதாவோசி
சாருபார் நீயிருந்து குடித்தால்யானும்
தம்பிபோற் படுத்திருந்து உண்டலாபம்
வேருபோற் தானிருக்க உலகஞாயம்
வேளாண்மைத் தொழிலாளி வினையமில்லார்
சாருபோ லேயிவர்க்கு யெரிச்சல்நீக்கி
தன்னுடைய அன்னமதைப் பகுத்தீந்தாரே. 835

சய்ந்தார்க ளதினாலே துன்பமற்று
இல்லறத்தி லிருந்தவர்போற் தவமேசெய்தார்
ஒய்ந்தார்கள் மனக்கவலை யுடலின்துன்பம்
ஓட்டிவிடச் செய்தாரே தவமேயின்பம்
ஆய்ந்தாரே மோனமா யிருந்துகொண்டு
ஆகாய மிருப்பதுபோல் மனமேயானார்
ஆய்ந்தாரே வாசிதனை யிழுத்துக்கொண்டு
உச்சரியா தேயிருந்து நினைவோய்ந்தாரே. 836

ஓய்ந்தார்கள் தன்னுடலின் நினைவின்துன்பம்
உள்ளமது வெட்டவெளி நினைவாகாயம்
பாய்ந்தார்கள் மனவெளியில் ஆகாயத்தில்
பரிவாசி பூந்தெழுந்த பலனேதென்றால்
ஆய்ந்தார்கள் கண்டுகொண்ட அதிசயங்கள்
ஆறெண்ணிக் கணக்கிடுவா ரந்தஞாயம்
வீய்ந்தார்கள் தாங்கண்ட பொருள்களெல்லாம்
மெய்யிலே உள்ளமதில் வெளியேசொல்லே. 837

சொல்லுகிற சொல்லதுமே நூலேசாஸ்திரம்
துகையெண்ணிக் காணாரே செய்யுள்வேதம்
வெல்லவே சொன்னாரே வேதபாதம்
விரித்தெழுத வைத்தாரே விரைவாய்மோனம்
மெல்லவே அங்கிருந்து யெழுந்தஞானம்
மேலெழுதப் பாடினதே யோகமாயம்
செல்லவே சொல்வதென்ன பாதைதானே
திருவருளுங் காணாதே யோகத்தீயே. 838

தீத்தீதீ யென்றுசொன்னாற் சுடாதுதீயே
தீயாகுஞ் சொல்பிறந்தால் யோகமென்றால்
தீத்தீதீ யோகத்தீ மூலத்தீயே
செந்தீயோ வென்றாலே பஞ்சதீயே
தீத்தீதீ உள்ளத்தீ மூலத்தீயும்
சேர்ந்துவிட ஆறாகும் யோகத்தீயே
தீத்தீதீ சுட்டுவிடும் உடலாங்காட்டை
திருவருளே லெகுவாகும் யோகத்தாட்டே. 839

யோகத்தாட் டெப்படியென் றெண்ணிப்பாரீர்
ஊடுருவப் பிளந்துவிடும் உடலும் ஆதி
யோகத்தாட் டுட லுயிரைப் பகுந்துகூராய்
ஊணுரக்க மின்பதுன்பம் பேருர்மாற்றும்
யோகத்தாட் டதினாலே பித்தமீறும்
உன்னுடலம் வெகுபதனம் நிலையாய்நில்லு
யோகத்தாட் டிற்பித்த வாதங்கோழை
உரமுடனே கக்கிவிடும் யோகச்சார்பே. 840

யோகச்சார் பெத்தனையோ முடிவிற்தானே
யோகதடை நீர்கழியும் கபாலங்காணும்
யோகமோ ராண்டுபனி ரெண்டுக்குள்ளே
ஒருமூன்று அய்ந்தெட்டு பத்துரெண்டில்
யோகமே சித்தியிது புண்யலாபம்
ஓவ்வொருவர் புண்யத்துக் கொற்றவாறு
யோகமே யிப்படியே லேசேயாகும்
ஊடுபயில் சிற்பரத்தைக் காண்போருக்கே. 841

காண்போர்க்கு யோகமது முடிந்தார்சாச்சி
கண்புருவத் திடைமத்தி உயிரே ஆடும்
பூண்போர்க்கு யிதன்மேலே ஞானநோக்கு
புருவமே நெறித்துவிட்டு நிமையைநோக்கு
சாண்பாரே உச்சிமே லேறத்தானே
தலையுச்சி கபாலமத்தி அண்ணாக்கின்நேர்
தூண்பாரே மூலதண்டு நாக்குநேரே
சொல்நாவை விட்டுண்ணா அண்ணாக்குச்சீயே. 842

உச்சியே நடுவாசல் பத்தாம்வாசல்
ஊடுருவ மூலதண்டு நாக்கின் மார்க்கம்
பச்சியே வாசிபரி தேசிகாசி
பரைமூச்சு ஆடிடுமே பரத்தின்சூது
நச்சியே காலூன்று மூலமார்க்கம்
நடுநாடி உயிர்நாடி பிராணநாடி
மெச்சியே தான்நடனந் திருக்கூத்தாடும்
விளம்பென்றா லாருரைப்பார் தானாய்க்காணே. 843

காணிந்த மூலபீஷ கோசநாடி
கண்வாய்மூக் காதோடு நவத்துவாரம்
தோணிந்த மூலதலம் ரெண்டேவேறு
சொல்லிவைத்த மேலேழுங் கண்டப்பூட்டு
ஆணிந்த வல்லவர்கள் தம்மைக்கண்டு
அண்ணாடி உடல்கண்டு உயிரேகண்டு
வீணிந்தக் காயதொழில் வெளியேதொண்டு
மேலென்ன உளத்தொண்டு பண்ணுவாயே. 844

## உடற்கூறறியவம்

வாயென்ன வல்லபங்கள் உயிரைப்பார்ப்பீர்
மக்களே யானாக்காற் உயிரைக்கார்ப்பீர்
தாயென்ன யிவ்வுடற்கு உயிருதானே
தந்தையென்ன இவ்வுடற்கு மனதுதானே
சேயென்ன இவ்வுடற்கு கரமுங்காலே
திருவென்ன யிவ்வுடற்கு அறிவுமாகும்
நோயென்ன இவ்வுடற்கு வாதபித்தம்
நோய்கோழை யிவ்வுடற்கு யேமன்தானே. 845

ஏமனே சங்குதொண்டை கரங்காலெல்லாம்
இடதுபுர முன்புரமும் விலாவைச்சுற்றி
காமனே கண்ணொளியி லிதுவே நின்று
காயவுடல் நாக்கின்மேல் உச்சிமட்டும்
தூமனே யிதுவொழிந்து வுருவாய்நின்று
சூச்சஉடல் மனஉருவே காரணங்கள்
நாமனே மேலறிவே யிதனிற்கூடில்
நாயகமே நாதகரு நாயகத்தே. 846

தேவனென்ன தெய்வமென்ன குருவுமென்ன
திகள்வடிவம் வேதமென்ன வாக்குமந்திரம்
சாவமென நின்றோரு மவரைக்கண்டால்
தான்மறைய யேமனுரு கலங்கிமாறும்
தீபமென வொளியடுக்க யிருள்போமால்
செங்கனலாற் தூண்டிவிட்ட நெற்றிக்கண்ணால்
கோபமெனப் பார்த்துவிடும் பிரமக்கண்ணால்
குருதண்டு குருநாடி உயிரேகாலே. 847

காலனென்ன யெமகாலன் காலகாலன்
கதவடைத்தும் உள்நுழைவான் பூட்டுபூட்டு
பாலனெனப் பாரானே நல்லோர்காணான்
பரமபதம் பெற்றாலும் தொடவேபார்ப்பான்
ஏலவே அண்ணாக்கு உச்சிவாசல்
ஏர்வாசல் கனையறிந்து யேறுட்கார்ந்து
காலவேல் உச்சியது யேறித்தள்ளி
காலகன்று வேல்கொண்டு காலன்பாரே. 848

பாரப்பா சென்னியில்நீர் காலனாகும்
பார்த்தறுத்தார் சென்னியில்நீர் பித்தந்தானே
வீரப்பா வலநீரே யிடுப்பில்வாதம்
மெய்யதனில் நெஞ்சுதொண்டை விலாவின்பக்கம்
தூரப்பா மூலதண்டு நாக்குமட்டும்
சொல்மொழியுஞ் சேத்துமந்தான் சமமாய் நின்றால்
காரப்பா நாசிவழி பிராணன்பாரு
கால்வாசி நேர்நடக்க நாக்குமூக்கே. 849

மூக்காலே ஓடுகலை நாசிவாசி
முன்னுக்கு வழிவந்து பேசும்மூச்சு
நாக்காலே சங்குதொண்டை வழியேவந்து
நடுமார்பு இருபக்கம் விலாவில்நின்று
நோக்காலே தானிழுத்துச் சுழன்றவாய்வு
நொடிக்கிநொடி மூக்குவழி பாய்ந்தசிட்டு
ஊக்காலே போயந்த வாசிரூபம்
உள்முகமாய்த் திரும்பும்வகை யோகந்தானே. 850

யோகந்தா னிதுபெற்ற பின்னேஞானம்
உற்றுவருஞ் சொல்சொல்லாய் ஒளிகண்டேதான்
யேகந்தான் சொல்லிவரும் ஒளிதான்சுத்தி
இதுபெற்ற பேரிதுவே ஞானமுத்தி
சோகந்தான் வாராது தானேநிற்கும்
சுகம்பெற்ற வாரல்லாற் துன்பமில்லை
நாகந்தான் தீண்டிவிட நாகம்மாளா
நம்மறிவு தீண்டிவிட மாளாதுமனமே. 851

மாளாது உச்சியில்நின் றிருக்கும்பிராணன்
மனமாளா அறிவிழக்கா துடல்தான்றையா
தாழாது உடற்கருவி மெலிவுதோணா
சங்கற்பஞ் செய்யாது செய்தார்சித்தி
வாழாது மாகருவி யடங்கிநிற்கும்
மனமாண்டாற் பொருளுளதோ உடல்தான் மாளும்
ஆழாது தேறிவிடக் கரையேயேற
ஆகிருஷ்ணஞ் செய்யாதே அசைவைப்பாரே. 852

அசைவையே உடலதனில் நவத்துவாரம்
ஆடுகின்ற புத்தீசல் போலத்தானே
இசைவையே மனஉடலும் அதுபோலப்பா
இப்படியே ஆக்கையுள்ள புழுப்போல்வாசி
பிசைவையே மலக்குடலிற் புழுக்கள்பூர்க்கும்
பெருஞ்சித்தி கெடுத்துவிடும் மலமும்பூச்சி
தசைவையே புழுக்குடலைச் சுத்திபண்ணி
தன்னுடலு முயிர்மனமு மறிவைக்காணே. 853

காணப்பா யிதுநாலுங் கண்டோன்முத்தன்
கால்வாசி மொழிமொழியாய்க் கண்டோன்சித்தன்
நாணப்பா உடலுயிரும் பிரிந்தாற்தோஷம்
நமனேது உடலுயிரும் வாதம்வந்தால்
வீணப்பா உடலுயிரும் பாதிதானே
மேலறிவு யென்னசெய்யும் பிரிந்தால்மாளும்
ஆணப்பா பெண்ணில்லா அரண்மனைக்கோ
ஆச்சரியம் யேதுண்டு அழகேறாதே. 854

ஏறாது வாசிவலு வில்லாக்காயம்
என்னசெய்யு மண்பாண்டம் யேதுக்காகும்
தேறாது உடல்வலுத்துப் பிராணன்குன்றில்
தெய்வஒளி காணரிது தேசத்தோர்க்கு
வாராது உடலுயிர்க்கு அறிவுதானே
மனமாண்டா லுடருயிரு மறிவென்செய்யும்
கோறாது முத்திநெறி குருவென்செய்யும்
குருசொன்ன சாஸ்திரமு நெறியும்வீணே. 855

வீணல்லாற் கத்தினது பெரியோர்மார்க்கம்
வேதாந்தஞ் சிந்தாந்தம் நாதாந்தங்கள்
ஊணல்லாற் பசியிரைக்கே போதாந்தங்கள்
உரைத்தாரே வேதமென்று பரியாசங்கள்
ஆணல்லாற் பெண்களுக்கே புருஷமத்தி
அகப்படுமே கைவசமே நினைந்தபோதே
பேணல்ல கைப்பொருளாற் சோதிகிட்டும்
பேய்பித்தர் சுவாமியெனத் தேடுவாரே. 856

தேடுவார் கண்டதென்ன லெகுவிற்கிட்டா
தெருவிலே காசுக்கு வாங்கல்போலே
ஓடுவார் குருவிடத்தில் வாங்கல்யேலோ
உள்ளமதம் உள்ளமனம் உள்ளிற்காலோ
நாடுவார் பாதமதைக் கட்டிக்கொள்வார்
நம்குருவே நீசாக மாட்டாயென்பார்
வீடுபார் நீர்கண்ட தெம்க்குக்காட்ட
மெய்க்குருவே நீர்கொடுமே துரவென்பாரே. 857

துரவென்பார் யிருவென்பார் தூரநிற்பார்
தூண்டுதற்குத் தன்னாலே கருவைக்காணார்
பரமென்பார் தன்னுடலே நரகமென்பார்
பரிபாஷை காணாத பாவிமார்கள்
கரவென்பா ரென்னுடனே யிருவென்பார்கள்
கால்கொள்ளக் காலறியார் முக்கால்மொள்ள
திரமென்பார் அசடகுரு சந்தேகிப்பார்
தெளிந்தகுரு காணறியார் தேவாரம்போலே. 858

தேவார மென்னகுரு மோனமாகும்
தெளிந்தகுரு சொல்லதுவே தேவாரங்கள்
நாவாரத் தான்மொழிந்த பாஷைதானும்
நன்குணர்ந்தா ரெல்லோரும் பத்தியாகும்
தாவார மில்லாதார் கோட்டைபோல
தாரித்திரம் லெட்சுமியுஞ் சோடிபோல
ஊவார நாமெடுத்த யிந்தக்கூட்டில்
உதகநீர் வார்க்காமற் தாரைகேட்பாரே. 859

கேட்பார்கள் தனம்பொருளைக் கட்டிக்கொண்டு
கெஞ்சு தல்போற் கேளார்கள் கொடுத்தார்
போல
தாழ்வார்கள் சொல்மொழிக ளிதுதான்பாரு
சம்மதம்பொய் யொப்பந்தம் தாநீயென்பார்
வாழ்வார்க ளவர்கொடுக்க வாங்கிக்கொள்வார்
வயற்பசியைத் தீர்த்தவருந் தொண்டுசெய்வார்
ஆழ்வார்க ளவர்களுக்குப் புத்திசொல்வார்
அய்யய்யோ அவர்பிழைக்கச் சொல்வோம்நாமே. 860

நாமேதா னுன்னோடு சேர்ந்தோரெல்லாம்
நாயகனைச் சேர்ந்தாப்போல் நாதன்கண்டு
ஆமேதா னவர்கேட்கப் பதிலுஞ்சொல்லி
ஆச்சரித்து அவர்வரத்தைக் கலந்துகொண்டு
ஊமைதான் போலிருந்து அயிக்கியஞ்செய்து
உச்சரிக்கு மந்திரமும் உயிருங்கண்டு
ஈயென்னும் உயிர்ச்சொல்லின் சீவன்கண்டு
எப்பொழுது மேயிருக்கும் பொருளைக்கண்டே. 861

கண்டவர்க ளுடன்கூடிக் கலந்துகொண்டு
கதைகாவிய புராணமெல்லாந் தெளிந்து
கொண்டு
விண்டவர்க ளுடன்கூடா மெய்யினாலே
விவேகமதைப் போற்றிஅனு சரித்துவரவே
கொண்டவர்கள் தன்னிடத்துக் குருவாந்தேடி
குருபத்திக் குறைவில்லாக் குருவைநாடி
தெண்டவர்கள் கைக்கொண்டு லேசாய்ப்பாடி
சிறுநரியும் புலிமுன்னே சீரினாப்போல். 862

சீரினாப் போலல்லோ சினந்தாருண்டு
சிறுபுலியும் பெருங்கொம்பு மாட்டுக்கஞ்சா
ஊரினா வட்டையது முழுந்தாளேறில்
உச்சாகங் கொண்டிடுமே காலைக்கண்டு
மாறினாற் திரும்பிவரத் திசையைக்காணா
வயரெல்லாங் கால்முளைத்த தண்டின்பூச்சி
ஏறினாற் கீழ்த்தெரியும் மேலேகாணா
இவ்வட்டை நடந்தாலுந் தூரந்தானே. 863

தூரமே யாகிவிடுஞ் சமீபந்தூரம்
துய்யமனு நீதிநெறி யறியாதார்க்கு
பாரமே யாகிவிடும் வேதநூல்கள்
பக்குவமே யானாக்கால் முன்னூல்விள்ளும்
சாரமே பொருந்திவிடும் முத்திபாகம்
தனித்திருந்து பார்ப்பதற்குத் தானாய்நானும்
வீரமே தானெடுக்குங் குருவைக்காணும்
மெய்வேதத் துட்பொருளை விரைவாயாயும். 864

ஆயுமே தானாக அறிவால்விள்ளும்
அறிந்தோரைக் கேட்கவுமே அடங்கினாணி
ஓயுமே கருவிகளும் உலாவல்விட்டு
உற்சாகந் தனைவிட்டு உள்ளேதொட்டு
காயுமே மூலக்கனல் கருவியாலே
காதடைக்கும் வாயடைக்கும் நாசியோடா
பாயுமே கண்ணொளியும் உள்ளேநோக்கும்
பார்வலமுங் கட்டிவிடும் நீர்மேல்நோக்கே. 865

நோக்கியே பார்ப்பவர்க்கு நோய்கள்வந்தால்
நூநானி வயித்தியத்தா லாகாவாகா
ஆக்கியே சமைத்திருக்க உண்ணார்போல
அப்பனே சாதனையிற் சுகங்காணாமல்
நீக்கியே விட்டிடவே விடாதுகாணும்
நீங்காமற் தானிழுக்கும் நிருத்தக்கூடா
போக்கியே விட்டவர்கள் நோயேசார்வார்
பொய்யோக மாகிவிடும் நிசங்காணாதே. 866

காணாது கண்டிடவுங் கடினமெத்த
கற்பமிது அற்பமல்ல கடினவாழ்வு
தோணாது நோய்விலக்கிக் கவலைபோக்கி
துன்பமணு வில்லாமல் நிற்பதற்கு
காணாது ஓர்நிலையில் நிற்போர்கல்லால்
நாடிநிலை நில்லாது நயனம்நில்லா
வாணாளைத் தானொடுக்கி மனதைக்கட்டி
மண்ணுடலை அறிவிருத்த வருத்தாந்தானே. 867

வருத்தமென்ன வெகுகடினம் யோகதுன்பம்
வாயாலே சொல்வதற்கோ நினைவிலாகா
பொருத்தமென்ன யோகவுடல் செனிக்கவேணும்
பூவுலகிற் புண்ணியனாய்ப் பிறக்கவேணும்
அருத்தமென்ன யிதையறிந்தாற் றன்னுட்டானே
ஆகாதோ விட்டகுறை யமைந்தால்நானே
நிருத்தமென்ன ஆடிடுமே வேண்டாதாடும்
நீர்சொல்ல யான்கேட்டே னினிச்சொல்வீரே. 868

சொல்லுவேன் யோகதுன்பங் கடந்தப்பாலே
சூட்சமே ஞானபதஞ் சொல்லவொண்ணா
வெல்லுமே சரிகையொடு கிரிகையோகம்
மெய்வேர்க்கும் நிறங்கருக்கும் விழுங்கில்விக்கும்
அல்லுமே ராப்பகலும் வேலைவேலை
அசரீரி யெட்டாது யிந்தமூன்றும்
நில்லுமே யென்றுசொல்லித் தடுத்தாப்போல
நிசந்தெரியக் காணுமட்டு மூன்றுந்துன்பம். 869

மூன்றுபதந் தனைக்கடந்து நாலாம்பாகம்
முன்சென்மக் கூறறியும் மோட்சஞானம்
தோன்றுபதந் தனைமறக்கும் பித்தர்போல
சுழலிலகப் பட்டதோர் துரும்புபோல
ஈன்றமகள் தனையறியாப் பித்தன்போல
இச்சமைய மாட்டிவைக்கும் நாலாம்பாகம்
ஊன்றுபதந் தனில்நின்று பித்தம்போக்கி
உச்சரியே யெச்சரிக்கை ஆண்டுஒன்றே. 870

ஆண்டொன்று கிருகிருப்பு மயங்கிவீழும்
அய்யய்யோ கடினமது துன்பம்மெத்த
கூண்டொன்று போட்டுவிடக் கூட்டுக்குள்ளே
கூத்தாடு மண்டைவலி குமுரியாடும்
ஆண்டொன்று யிப்படியே விளையாட்டய்யா
அல்லோருங் குளிகையென்று அதனைச்சொன்னார்
வேண்டென்று சொன்னாரே யோகமேலோர்
மெய்க்கூடு கபாலக்குகை விளையாட்டையா. 871

விளையாட்டுப் போலிருக்கும் ஞானமார்க்கம்
மெய்வாத பித்தச்சளி மாறுமட்டும்
சுழியாட்டு மெத்தவுண்டு யெங்கள்வேலை
தாரித்திர மேமிகுத்தால் சளமேபோல
கழியாட்டுக் காண்பதற்கு கடினங்கண்டோம்
கைகாலும் வாசிவர ஞானதேகம்
விழியாட்டு மெத்தவுண்டு மேலோர்ஞாயம்
விளம்பரிது கேட்பதென்ன விளங்குங்கண்டால். 872

கண்டாலே கொல்வதெல்லாம் கதிக்குள்தோணும்
கதிரவனார் கோடியொளி காணுங்காணும்
அண்டார்கள் சொல்லறியார் நூலேபாரார்
ஆனாலும் ஓர்கால மடுப்பார்வந்து
கொண்டார்கள் சொன்னநூல் சுகமேகொஞ்சம்
கோடியென்று சொல்லிடலாம் தடைகள்தன்னை
விண்டார்கள் பாடுபட்ட துன்பந்தானே
வேதாந்த சித்தாந்த நாதாந்தான். 873

அந்தங்கள் போதாந்தங் கீதார்த்தத்தை
அலறியே சொல்லிடுமே அருளேவாக்கியம்
மந்தங்கள் தானகற்றி முறைகள்சொல்லி
மருவுமே தன்னுடலும் அருளேவுள்ளில்
சொந்தங்கள் போலிருந்து உடலிற்சீராய்
துன்பங்கள் தானகற்று லெகுவாய்மேலாய்
பந்தங்கள் தானிருத்திப் பதையாநெஞ்சம்
பதைக்குமெனி லருள்பதைப்பு சித்திதானே. 874

சித்திதான் பெருமளவும் அருள்காணமட்டும்
தேகவினை நையாது சகிக்கொணாது
முத்திதா னிவ்வளவே பதமேமுற்றே
முழுமுத்தி சொல்லுகிறே னதுக்குமேலே
சித்திதான் மேற்பொழியு மதனாற்தானே
செம்படவன் மீன்பிடித்த லெகுவேபோல
வெத்திதான் மனவாக்குக் காயம் ஆன்மா
விரைந்தொன்று சேர்ந்தவர்க்கு சித்திமுத்தே. 875

சித்திமுத்தி நாடிநரம் பிருகித்தானே
தேகமுயிர் மலக்கசடும் நீங்கியப்பா
சத்திதா னுடலிருந்து ஆடிப்பாடும்
சன்மனதும் உடலுயிரும் ஒன்றுகூடும்
சுத்தியே யாடாது சுழிவாய்ச்சொல்லும்
கதிர்பெருகு மிருள்மறையும் கணக்கதாகும்
நத்தியே தானிருக்கிற் பந்தம்வந்து
நரைமூப்பு மொப்பாக வர்த்தம்ஓடே. 876

ஓடுமே திரிகால வர்த்தமானம்
ஊடுருவ நாடாது ஒளிபந்தத்தால்
காடுமே போயொழியும் யீனர்போல
கண்ணெதிரே நில்லாது திரிகாலங்கள்
பாடுமே பட்டுஅதைக் கண்டுகொண்டு
பையிருக்க நூல்நழுவப் பையில்லாதே
வாடுமே திரிகால ஞானமார்க்கம்
வாயிருக்க நாவில்லா வாறுபோலே. 877

நாவில்லா ஊமைமொழி பேசல்போல
நன்குணர்ந்தார் பித்தமது சேர்ந்தாப்போல
பூவில்லா நார்முடிந்த வாறுபோலே
பூவையரின் கெற்பமில்லா வீடுபோல
பாவில்லா நூல்விளங்கும் நெசவுபோல
பரியேறிச் சேணமில்லா உவமைபோல
காவில்லா ஊரிருந்த சுகமேபோல
கண்டதிரி காலமது பந்தத்தாலே. 878

பந்தத்தா லேமறையுந் திரிகாலந்தான்
பதைப்புற்ற நெஞ்சத்தால் மறைத்துக்கொள்ளும்
நொந்தத்தால் நொந்தநெஞ்சம் மனமேயாகும்
நோகாத மனமல்லோ பதைப்பில்லாதே
அந்தத்தா லேஅருளும் திரிகாலத்தை
ஆர்சொல்வார் குருவருளால் அருளைத்தானே
கந்தத்தால் மலபந்த வாசற்கூடு
கண்ணிமை கார்ப்பனபோற் பந்தங்கார்க்கும்.
879

கார்க்குமே உடலுயிரும் நினைப்பேபந்தம்
கதவடைக்கக் கட்டுண்ட கள்ளனைப்போல்
சேர்க்குமே மல்லுயுத்தம் பந்தமப்பா
சிறுவர்தெரு விளையாடுஞ் சேர்க்கைபோல
தார்க்குமே ஆதியந்தந் திசையெல்லாந்தான்
தானிழுத்துக் கொள்ளுமது நினைவால்மூடி
வார்க்குமே முன்பின் னும் வினையால்நாடி
வாலிபன்பா லுள்ளிருந்து மாறுவேறே 880

மாறென்றும் நெஞ்சென்றுஞ் சித்தமென்றும்
மனமென்றும் உளமென்றும் மாய்கைவீடு
தூறென்று கூட்டிவைத்தால் திரிகாலங்கள்
சொல்லிவைக்குந் திரிகால வர்த்தமானம்
காரென்று நீர்பிசகா நெஞ்சங்காரு
கண்மூடித் திறந்தாலே நெஞ்சமாகும்
பாரென்று மிப்படியே யிரண்டுமுண்டு
பாலித்த சித்தியென்றும் மாய்கைமூடிடும். 881

மூடுமே நெஞ்சமதை மூடிடாதே
முன்மூக்கில் நின்றாப்போல் மனதில்நில்லு
ஓடுமே கூடுவிட்டுக் கூடுபாயும்
உட்பொருளை நீயறிவாய் உளமேசேரு
கூடுமே தானிருக்கக் கூடுவிட்டு
கூத்தாடி யேறினாப்போ லோடுதேபார்
நாடுமே தோணுதற்குச் சாஸ்திரமேனோ
நம்குருவைச் சேர்ந்தாக்கால் நீரும்வீணோ. 882

வீணல்ல யோகமொடு ஞானாப்பியாசம்
வேராதி யந்தமொடு கடக்கவேணும்
ஊணல்ல நித்திரையுந் தள்ளவேணும்
உண்டுடுத்தல் சையோகந் தள்ளவேணும்
பூணல்ல போக்குவதை யறியவேணும்
புலாலெலும்பு தோலிறைச்சி புரைகள்நீங்க
தோணல்ல நீங்கிடவே யிதுகள்மாய
துன்பமற்றுச் சாதனைகள் தொந்தமாக்கே. 883

ஆகுமே மலவிருத்தி கசடுநீங்கும்
அய்யய்யா மனவெளியும் அரூபமாகும்
ஏகவே சொற்சொல்லாய்த் தனியேசொல்லும்
இன்பமுற யெங்கிருக்கும் நெஞ்சகத்தே
போகவே பொய்யிருளும் வெளியேபாயும்
பொல்லாப்பு நீங்கிவிடும் உலகஞாயம்
வேகவே கூடிருந்த மண்ணுள்மாள
விட்டகுறை வந்துதென்றால் சனனங்கண்டே. 884

## சித்தர் கேட்குதல்

கண்டீரே சனனமது பிறந்தாற்பின்னே
காலனுக்கு ஆளாக மாட்டாமார்க்கம்
கொண்டீரே வடகயிலை பொன்மேருள்ளோய்
குமரனுக்கு முன்பிறந்த குழந்தைகாகா
விண்டீரே யெங்களுக்கு விளங்கா ஞாயம்
விளங்கயெடுத் துரைத்தவரே விமலர் ஞாயம்
கண்டீரே உம்மைப்போ லாதியந்தம்
கருக்குருவைச் சொல்லவில்லை யெங்களுக்கே. 885

எங்களுக்கே யோகமொடு ஞானம்வந்தால்
எங்கள்மனந் திரிகால வர்த்தமாகும்
உங்களுக்கு யோகமொடு ஞானசித்தி
ஊடுருவச் சொல்லிவைத்தேன் திரிகாலத்தை
தங்களுக்கு மெங்களுக்கும் உங்களுக்கு
சாஸ்திரப்பேர் ஆதியந்தம் ஞானசூரியன்
ஓங்கள்மனந் திரிகால நெறியீதாகும்
உரைத்துவிட்டேன் சரிகைகிரி யோகஞானம் 886

ஞானமா மதின்மேலே சித்திதானும்
நாடிநரம் பிருகிவிடும் கெவுனம்ஆழும்
வானமோ பாதநடை பூமியாகும்
வல்லபங்கள் மெத்தவுண்டு மனதுற்சாகம்
பானமோ கேட்டதெல்லாந் தானேசாரும்
பரைவாலை முன்னின்று தொண்டுசெய்வாள்
ஈனமோ யிவ்வுடலு முயிருந்தானே
எங்கள்மனஞ் சித்தியுயிர் முத்திதானே. 887

முத்திதான் பெற்றதிந்தக் காயக்கூட்டில்
முன்னின்று விளையாடுஞ் சித்தியேவல்
நத்தியே யெங்களுக்கே தொண்டுபண்ணு
நாயென்று சொன்னாக்கா லடங்கிநிற்கும்
வெத்தியே யென்பொருளு மிதுதான்கையில்
வெகுநாளிற் கண்டெடுத்தேன் பாடுபட்டு
சித்தியே கண்டெடுக்க யெடுத்தபின்னே
செணப்பொழுது யான்தாங்க மாட்டாமற்தான். 888

அத்தானு மச்சானுங் கூடிக்கூடி
அடிக்கடியே பரியாச மாகுமாபோல்
சித்தானும் யான்கூடிச் சேருமார்க்கம்
சிறுபிள்ளை நானறியாத் தோஷத்தாலே
முத்தானே யென்வசமே யாகுமட்டும்
முழுமோசம் போயினனே அறியாநானும்
பெத்தானைக் காணாதான் உத்தான்கண்டு
பேசுமொழி ஞானவழி ஆண்டுரெண்டே. 889

ரெண்டிலே யோகியது பனிரெண்டுண்டேன்
நேர்வழியே ஞானவழி ஆண்டுரெண்டு
ஒண்டிலே நான்திரிந்து ஊரைச்சுற்றி
ஊமைமொழி பேசியெனை யாடினானே
மண்டிலே நானிருக்க யென்னைத்தூக்கி
வாரிவலஞ் சுற்றினதே மண்டையோடே
விண்டிலே நானிருந்து சகியாவாலை
விட்டகுறை வந்ததென்று தள்ளினாளே. 890

தள்ளினாள் யான்பயந்து சுருங்கிநின்றேன்
தமரோடு வாழுகின்ற தன்மைபோல
அள்ளினா ளென்குணத்தை வாரியுண்டாள்
அப்பொருளிற் தன்குணத்தை யதனில்வைத்தாள்
இள்ளினாள் நெஞ்சகத்தை யடக்கிக்கொண்டாள்
கிழவியுருக் கொண்டனளே கிழவனாக்கி
தள்ளினா ளெந்தனைக்கை விட்டிடாமல்
சமுசாரி போலிருப்பா யென்றிட்டாளே. 891

என்றவுடன் நான்வணங்கி நின்றபின்பு
என்மேலே பிரியமுற்று எடுத்தணைத்து
நன்றாகச் சொல்லுகிறேன் கவனமாக
நானிலத்தில் நீயிருப்பா யென்றுநீயும்
குன்றாத யோகமது செய்வாயானால்
கூடுமே பிராணாய முடிந்துபோகும்
அன்றாடம் நீயெழுந்து காலைமாலை
அப்பனே யோகமதை முடிப்பாய்தானே. 892

## பிரமரந்திர உற்பத்தி

தானென்ற ஞானமே ப்ரமரந்திரம்
தானிருந்து பிறந்ததுவும் திரிகாலவர்த்தம்
வானென்ற திரிகாலம் ஆன்மாஉச்சி
மண்டையதின் மேலேற உச்சிக்கண்ணில்
ஆனென்ற கண்ணதுமே யோகத்தாலே
அவயோகம் வாசிதா ரணையினாலே
ஏனென்ற தாரணைதான் வாசிமுச்சாம்
இவ்வாசி யுண்டஅன்னம் செரிக்கும்போதே. 893

செரிந்துவந்த மலம்உருண்ட காற்றுத்தானே
தீப்புகைபோல் புகைகிளம்பி மூலமேறும்
மரித்ததுவும் வந்தகலை வாசியாகி
மாறாது கலைபிரிந்து மாறிக்கொள்ளும்
வெரித்துவந்த முனைமூக்குத் தண்டுஉச்சி
விரைந்துமதில் பாயுவதும் ஆன்மாவாகும்
முரித்துவதி லாடுகின்ற ஆன்மாதானும்
முன்பிறந்த உடலுயிரும் யெலும்பிற்றானே. 894

எலும்பென்ற முதுகுத்தண்டு எலும்பினூடே
இளையூசி செலுத்துமது வாசல்போல
எலும்பினில் துவாரமது ஓடுமார்க்கம்
இருக்கின்ற பாதைவழி பிராணனாகும்
எலும்பினுள்ளே ஓடுகின்ற வாசியான்மா
ஏரியது ஓடுவது முனைமூக்குத்தான்
எலும்பிலே வாய்வான ஆன்மாவந்தால்
இப்படியே புருவமத்தி யேறும்பாரே. 895

ஏறியே ஆதாரத் திடையிற்சென்று
இடைநடுவே ரோட்டுவழி பாதையுச்சி
ஏறியே மண்டைநடு உச்சிநேராய்
ஏறியந்தப் பாதைவழி ஓட்டின்மேலே
ஏறியந்த ஓட்டின்மேல் உச்சித்தோலில்
ஏறிநின்று மண்டையெல்லாம் ரோமமாச்சு
ஏறியே யிறங்கினதால் மேல்காலெல்லாம்
இயல்ரோமம் அங்கங்கே முளைத்துச்சேர்ந்தே. 896

சேரவே காயசித்தி ரோமந்தானும்
சிரசிருந்த மயிர்வெள்ளை கருத்துப்போகும்
மாரவே சரீரங்கள் வெகுகாலந்தான்
மயிர்கருத்து உடல்பிலத்து உயிர்கட்டுண்டு
சேரவே யிவ்வான்மா உச்சிரோமம்
சேர்ந்தேறி மயிர்மார்க்கந் துடர்ந்துபற்றி
மீறவே அங்குலந்தான் பன்னிரண்டு
மிகநடக்கும் பிரகாரப் பிரவேசந்தானே 897

## பிரகாயப் பிரவேசம்

நடக்குமது பிரகாயப் பிரவேசந்தான்
நாட்டைவிட்டு வெளிதனிலே யேறச்செய்யும்
துடக்காக யேறியது சந்திரசூரியர்
சுயவுடுக்கள் உயர்லோகம் ஆகாயத்தில்
படக்கவே பன்னிரண்டு மயிலின்மேலே
பார்விசும்பின் பதினெட்டு மயில்வரைக்கும்
இடக்கவே பானுசந்திர வுடுக்கள்தானும்
இயங்கியே உயரவே தூக்கும்பாரே. 898

தூக்குமே அதற்குமேல் உயரச்செல்ல
துய்யசங்கு நிறமேகம் கருப்புமேகம்
ஆக்குமே பொன்மேகம் பச்சைமேகம்
அரிநீல மேகமென்ற கருவியெல்லாம்
தாக்குமே யனேகவகை மேகந்தானும்
சலத்தில்வரு திரைபோலும் மேலுமேலும்
நோக்குமே ஆகாய மேகரோட்டில்
நொடியாதே வருமார்க்கந் தன்னில்தானே. 899

மார்க்கத்தில் பிரகாயம் கெவுனமார்க்கம்
வழியோடே கெவுனத்தின் வழியேசெல்லும்
மார்க்கத்தில் செல்லாது செல்லுந்தன்மை
வருவிப்பேன் கண்மூடித் திறப்பதற்குள்
மார்க்கத்தில் யோசனைதூ ரங்கள் போகும்
வருவித்துச் சொல்லுதற்கு நாவோயில்லை
மார்க்கத்தில் செல்லுகின்ற விபரந்தானும்
வருவித்துச் சொல்வதென்றால் அனேகமுண்டே. 900

உண்டேதான் மேகத்தின் போக்கில்தானும்
ஊர்ந்துவரும் வழிவிலகி யொன்றோடொன்று
சண்டைதா னிட்டதுபோ லண்டத்திற்றான்
தாக்கியது யிடியிடித்துப் போடுஞ்சத்தம்
அண்டந்தான் வாய்விட்டு அலறினாப்போல்
அப்போது பிரண்டுருண்ட சலமேகந்தான்
சண்டன்போல் மேகமது முட்டித்தாக்க
சல்தியினி லொளிவீசும் யிடியுமாச்சே. 901

ஆச்சப்பா யிடிச்சத்தம் ஒளியின்காந்தி
அச்சணமே பூலோகந் தன்னிலேதான்
வீச்சப்பா பூமியதில் ரூபந்தன்னில்
வீழ்ந்தவிடம் அடையாளந் தெரிந்ததுண்டு
பேச்சப்பா காலிநிலந் தனில்விழுந்தால்
பேச்சென்ன பூமியிற்போந் தெரியாதப்பா
காச்சப்பா மூவேழு லோகத்துள்ளும்
கடக்குமது சென்றவிடம் அழிந்துபோமே. 902

அழிந்துபோ யிருந்ததுவு மூன்றுலோகம்
அதிலொன்று மேலோக மப்பாபாரு
வழிந்தந்தக் கீழ்லோக மொன்றேயாகும்
மகிமையுள்ள பூலோக மிதுவேயாகும்
இழிந்ததுவும் போனதுவும் போகமூன்று
இருப்பதிலே இரண்டுக்குச் சுவரோயில்லை
பொழிந்தந்த மூன்றினிலே சீவனுண்டு
புகழ்சீவ பேதமுண்டு சுற்றிப்பாரே. 903

சுற்றிவந்து அண்டச்சுவர் முடிவின்மட்டும்
சூட்சமாய் அங்கங்கே பார்த்துவந்தேன்
பற்றுதலில் லாமலே வெவ்வேறாக
பரவியே நிற்கிறது அணுப்போற்றோனும்
மற்றவர்கள் கண்ணுக்கோ தோணாதப்பா
வாகாகத் தெரியவென்றால் சித்தன் பார்ப்பான்
கொற்றவனா னாலுமதைக் காணமாட்டான்
குறிப்பறிந்து யான்பார்த்தே னன்னாள்தானே. 904

அன்னாளில் யான்போய்ப் பார்க்கவென்று
அடிதொடங்கிப் பார்ப்பதற்கு எத்தனித்தேன்
என்னாலே சொல்லவொண்ணா அதிசயங்கள்
எத்தனையோ தான்பார்த்தேன் தனிமையாக
முன்னாலே தெருவுகளும் வீடுபோலும்
மூதண்ட மானசிவ கணங்கள்போலும்
பின்னாலே மகாவிஷ்ணு கணங்கள்போலும்
பேரின்பம் பெருகினதை விள்ளுவேனே. 905

விள்ளுவேன் சீவனுடல் பிரியுமார்க்கம்
மேலான உயிர்நாடி உயிர்பிறிந்தே
தள்ளுவதும் மார்நாடி தம்பநாடி
தனியான முதுகுதண்டு நடுவாம்நாடி
துள்ளியே வழிவிலகி உயிராய்ஜீவன்
துடுநாடி தனைவிட்டு உயிர்விலகி
தெள்ளியே வழிவிலகிப் பாதைதப்பி
சீவனிருப் பிடம்விட்டுப் போயினாரே. 906

போயினா லுடல்விட்டுப் போகுமார்க்கம்
புகழான பிராணனுட லுயிருமாகும்
வாயினால் சொல்லவென்றால் தலைவெடிக்கும்
வகையோடே சுருக்கியே சொல்லக்கேளு
ஆயிசொன்ன படிதானும் உடலைவிட்டு
ஐவகையாய்த் தான்பிரியும் பிராணன்றானும்
காயிருந்து பழம்பழுத்த வாறுபோல
கனிந்துதிர்ந்த பழம்போலே மூலம்போமே. 907

போமேதான் மதிகதிரு மேவலுத்து
புருவநடு மூக்குத்தண்டு உச்சியேறி
வாமேதா னிளைத்துவிடில் உச்சிமூக்கு
மரணவாய் முடிவதென்ன வகைமோசந்தான்
ஆமேதான் இடதுகைப் புரமேசாய்ந்தால்
அப்பனே வலப்புரமப் படியேசாய்ந்தால்
தேமேதா னிப்படியே பிராணவாயு
திரும்பிவழி விலகிப்போம அபானன்றானே. 908

போமேதான் மண்டைஉச்சி மூலைதன்னில்
புகுந்தவிடம் பிராணனது மூளைசிக்கி
தாமேதான் கீழிறங்க விடமாட்டாது
தவறியது விடுமாகில் மோசமெய்தும்
காமேதான் பிராணரந்திரங் கெட்டியாகில்
கனிவாகவே பிடிக்கும் பிராணன்போகா
ஆமேதான் பிராணமென்ற பிராணன்சொக்கி
அப்படியே உள்ளுடலில் அமர்ந்துபோமே. 909

அமர்ந்துபோம் நரம்பின்வழி பிராணவாய்வு
யணியணியாய் அலியென்னும் அலையைப்போலே
அமர்ந்துபோம் அலைந்தலைந்து உடலுள்ளேதான்
அங்கமெல்லாம் பரவிநிற்கும் பிராணன்றானும்
அமர்ந்துமே பின்கிளம்பி தோளின்மேலே
அலமோதி உயிரேறி அங்கேநின்று
அமர்ந்துமே நின்றுவிடும் பிடறியேறும்
அப்போது கீழ்விழுந்து சொக்கிப்போமே. 910

போமேதா னிப்படியே மரணச்சாவு
பொக்கிஷத்தில் வைத்தபொருள் போலேயாகும்
போதான மினமுண்டு மரணமார்க்கம்
புகழ்மிகுந்த நோய்பிணிக ளானதெல்லாம்
போமேதான் நரம்பெலும்புத் தசைபசைதோல்
பூரணமாய் வியாதிகளின் மெலிவுநாளும்
போமேதான் வாதபித்த சேத்துமத்தின்
புலன்நாடி குறைந்துவிட்டால் நாடிபோமே. 911

நாடியே உள்மூலஞ் சொல்லுவேன்கேள்
நாபியடி பீஷமூலம் கோஷபீஷம்
பாடியே தொப்புள்வலி வட்டஞ்சுத்தி
பார்த்தாக்கா லிருதயமாம் பள்ளந்தன்னில்
ஆடியே மேலெழும்பித் தொண்டைவந்து
அந்தரங்கச் சுத்தியதாம் வாயண்ணாக்கு
ஓடியே மேலெழும்பி மூக்கில்வந்தே
உற்றயிரு கலையாகித் தேயும்பாரே. 912

பாரேநீ யிப்படியே மூன்றுநாடி
பரிவான பொம்மைபோல் வாசிவீசி
நேரேதான் மதியுடனே கதிருமாகி
நேர்மையுடன் மேலாகச் சுழினையாகி
சீரேதா னிருகலையும் போயிப்போயி
சிறப்பான மூக்கின்வழித் தண்டின்வாசல்
தானேதான் வந்துவந்து போகும்போது
தமர்வாசல் வழிநாடி ஏங்குந்தானே. 913

ஏங்குமே யிச்சீவன் நோயுமில்லை
இயல்பாக யீதறிந்தோர் சாகமாட்டார்
சாங்காலந் தான்தோற்றும் மரணமாகார்
தானறிவர் உயிரறிவர் சரீரந்தோற்றும்
போங்காலம் வந்தாக்கால் முன்னேகண்டு
புலனிருக்கு மிடங்கண்டு ஒடுங்கிக்கொள்வர்
ஆங்கால மறிந்தவர்கள் அடங்கிநிற்பார்
அதுவறிந்து கண்டோர்கள் சுடார்கள்பாரே. 914

கண்டோர்கள் உடலுயிரும் பிரித்துக்கொள்வர்
கருத்துடனே யிரண்டையுமே ஒன்றாய்ச்சேர்ப்பர்
விண்டோமே நாமறிந்து கொண்டமார்க்கம்
விபரமதை இதன்முன்னே சொல்லிவைத்தோம்
அண்டோமே நாமறிந்து கண்டுகொள்ள
ஹரிஓம் நமாவென்று யிருத்தியூத
பண்டோமே சித்தர்முனி ரிஷிகள்தானும்
பகுத்தெழுதி ஆதியிலே வைத்தார்பாரே. 915

ஆதியாம் சரநூலோ உடலின்சாரம்
அதுவறிந்து உடலறியும் விளக்கந்தன்னை
பேதியா தேயறிந்து கொண்டோன்சித்தன்
பேரின்ப மதையறிந்து நடத்தவேணும்
சாதியாம் மூவாண்டு முன்சொல்மார்க்கம்
தனையறிந்து நீயிருந்து காத்திருந்தே
வாதியா தேயிருந்து சொல்லிக்கேட்டு
வாங்கியே தீர்க்கமாய்ச் செய்துவாயே. 916

தீர்க்கமாய்ச் செய்வதற்குப் புத்திவேணும்
சிவசிவா உயிரொடுங்குங் காலந்தோண
மார்க்கந்தான் யார்சொல்வார் உடலைக்காப்போர்
வாயாலே சொல்லார்கள் நூல்தான் சொல்லும்
யார்க்குந்தா னிதுபோல வெளியாய்த்தானே
அரன்விஷ்ணு பிர்மாதி யாருஞ்சொல்லார்
பார்க்குள்ளே வெளியாகச் சொல்லினாலும்
பண்பாக இடிவீழும் தலையிற்றானே. 917

தானென்ற உயிரேங்குங் காலந்தானும்
தவஞ்செய்த ரிஷிகளுக்குத் தானேதோணும்
வானென்ற மண்டைதனில் நாசிமூக்கு
வலமிடமாய் வருகிறதை மேலேதாக்கி
ஏனென்று கேட்கிறதோர் வாசிமூச்சு
இதுசுத்தி வட்டம்உச்சி யேறிஊஞ்சல்
தானென்று ஆடையிலே நூறுதாண்டும்
தாண்டியது இளைத்ததனால் சமாதியாமே. 918

ஆமேதான் சமாதியது உச்சிவட்டம்
அசைந்ததுவும் மேற்சுற்றி யாடித்தேய்ந்து
போமேதான் பிராணன்வலுக் குறைந்துநிற்கும்
புகழ்நாடி நரம்பிலுக்கும் வலுத்துப்போகும்
தாமேதான் வலுக்குறைந்த பிராணன்றானும்
சமாதியா யடங்கியது உறைந்துநிற்கும்
வேமேதா னிப்படியே பிராணன்நிற்க
விதமறிந்த சித்தர்களுங் குகைசென்றாரே. 919

சென்றாரே சித்தர்களுங் குவடுக்குள்ளே
தீரமுடன் தானிருந்தார் கோடிகாலம்
நின்றதொரு சித்தர்களும் கற்பங்கொண்டு
நீடித்து கெவுனமது சென்றாரப்போ
அன்றுவந்த சித்தர்களு மிதனைக்கண்டு
அதிசயங்கள் தான்பேசி யிருக்கும்போது
என்றுமே அழியாது தேகமென்று
இனிமையுடன் அறிவுள்ளோர் விளக்கந்தானே. 920

அறிவுள்ளோர் அறிவினுட ஆதியந்தம்
அடி நடுவும் முடிவுபெறக் கருதுவார்கள்
அறிவுள்ளோர் கருத்துடனே யூகஞ்செய்து
ஆதியந்தந் தான்தெரிந்து நடந்துகொள்வார்
அறிவுள்ளோர் கற்பத்தால் சித்தி பெற்று
அவன் பரம பதத்தினிலே யிருக்கலாகும்
அறிவுள்ளோ ரிதற்குமேல் புளிகளுண்டு
அவர்தேகஞ் சித்திபெற்று முனியாவாரே. 921

முனியாவார் பிரமரிஷி பதத்தைக்காண்பார்
மூவுலக முந்தெரிவார் கெவுனஞ்செல்வார்
தனிவானோர் ஓரிடத்தி லிருக்கமாட்டார்
தாரணியில் ராஜரிஷி யாவார்பாரு
பணிவாக ஒருவரோ டிணங்கமாட்டார்
பத்திமுத்தி தன்னையுமே காட்டுவார்கள்
துணிவாகச் சகலருக்கும் அஞ்சமாட்டார்
சூட்சாதி சூட்சமெல்லாம் பேசுவாரே. 922

## சிவனிடஞ் சொல்லுதல்

பேச்சப்பா வேல்வரும் தொக்கித்தக்கி
பிரளையங்கள் முடிந்தவுட னிவடம்வந்தார்
மூச்சப்பா யென்னவென்று வினவிக்கேட்டேன்
மூதறிவி னோடெனக்கு முறையைச்சொன்னார்
வாச்சப்பா யிருவென்று யுகங்கள்தோறும்
மறைந்துநான் வெளியேறும் வகையுஞ்சொன்னேன்
காச்சப்பா யிருவென்று யிருத்தியென்னை
கருதிவந்த விபரமெல்லாங் கேட்டிட்டாரே. 923

கேட்டவுடன் பிரமரந் திரமுஞ்சொன்னேன்
கிருபையுடன் யுகமுடிவு முறையுஞ்சொன்னேன்
நாட்டமுடன் மனுக்களுண்டாம் வகையுஞ்சொன்னேன்
நன்மையுட னதுமடியும் விபரஞ்சொன்னேன்
தேட்டமுட னெப்போது மிருப்பதற்கு
தேவியுட பூரணத்தைத் தெரியச்சொன்னேன்
வாட்டமிலா தேகேட்டுக் குமரனுந்தான்
மலைமேலே சென்றுவிட்டான் மார்க்கத்தோடே. 924

## கற்பம்

மார்க்கமென்ன மலைகளிலே திரிந்தானப்பா
வகையோடே வுந்தனுக்குச் சொல்லிவிட்டேன்
ஏர்க்கையுட னெல்லாமுங் கேட்டுக்கொண்டாய்
இனியென்ன கேட்கனுமோ கேளுகேளு
சேர்க்கையுள்ள வசிட்டருமப் போதெழுந்து
சிறப்பாகப் புசுண்டரிடம் கற்பந்தன்னை
பார்க்கவே சொலவேணு மென்றுகேட்க
பண்பாக மனதுகந்து சொல்லுவாரே. 925

சொல்லுவேன் கற்பமது இரண்டதாகும்
சுகசரீரந் தவறாது இருப்பதற்கு
நல்லதொரு கற்பமொன்று வாலைபூசை
நலமான ஞானகற்ப மென்றதாகும்
எல்லவற்குங் கிட்டாது இரண்டுந்தானும்
இயல்புடைய முனிரிஷிக்குக் கிட்டுங்கிட்டும்
வல்லவர்கள் கற்பமது கொள்ளுவார்கள்
மற்றவர்க ளொன்றுமே அறியார்பாரே. 926

பாரப்பா அகாரந்தான் முதலாங்கற்பம்
பரிவாக உகாரந்தா னிரண்டாங்கற்பம்
நேரப்பா மகாரந்தான் மூன்றாங்கற்பம்
நேசமா யிருந்துசெய்வாய் சிகாரகற்பம்
சீரப்பா இந்நான்கு கற்பந்தானும்
தீர்க்கமுட னுண்டவனே சித்தன்சித்தன்
வீரப்பா பன்னிரண்டு வருடஞ்செல்லும்
முக்யமுள்ள கற்பமது முடியத்தானே. 927

கற்பமென்று அண்டத்தைச் சுற்றவேண்டாம்
கனிவாக உன்னிடத்தி லிருக்குதப்பா
அற்பமல்ல அண்டபிண்ட மதுதானாகும்
அடைவாகப் பார்த்தாக்கால் தோணாதப்பா
உற்பனமாய் உன்னுக்குள் முடிந்திருக்கும்
உகாரகற்பம் உன்னுக்கு ளிருக்கும்போது
விற்பனமாய் வேறுகற்பந் தேடவேண்டாம்
மேலான கற்பமது அகாரந்தானே. 928

அகாரமாங் கற்பமது தெரியவென்றால்
அன்போடு சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
நகாரமென்ற வாலையைப்பூ சிக்க வேணும்
நலமாக அறிந்துகொள்ளப் புத்திவேணும்
உகாரகற்பம் சக்தியைப் பூசிக்கவேணும்
உண்மையுள்ள மனோன்மணியைப் பூசைசெய்வாய்
மகாரகற்ப மடைவதற்கு யோகம்வேணும்
வாய்த்தபின்பு சிகாரகற்ப முடியுந்தானே. 929

முடியுவது யெப்படியென் றென்னைக்கேட்டாய்
முக்யமுள்ள கற்பமதின் முறையைச்சொன்னேன்
அடிநடு முடியென்று மூன்றுபாகம்
அதிலேதான் நடுவாகும் கற்பநேர்மை
துடியாக வேதிறந்து சொல்லக்கூடா
சொல்லினால் தலைவெடிக்கு மென்றுசித்தர்
படியாகச் சாபமது கொடுத்ததாலே
பரிவாகச் சித்தர்களுஞ் சொல்லமாட்டார். 930

மாட்டார்கள் சொல்லதனா லறிந்துகொள்வாய்
மாராட்ட மாகவேதான் பெயர்வைத்தார்கள்
காட்டார்கள் நீயறிந்து கொள்வாயப்பா
கருத்தாகப் பார்த்தாக்கால் தோணுந்தோணும்
பாட்டாகப் பாடிவிட்டார் கருச்சொல்லாமல்
பண்பான கருவதுவுஞ் சொல்லக்கேளு
நாட்டார்க ளறியார்கள் கம்பமாகும்
நலமான நந்தியிருப் பிடமாம்பாரே. 931

நந்திகொலுக் கண்டவனே ஞானியாகும்
நடுவனையைப் பார்த்தவனே சித்தனாகும்
அந்திசந்தி கொண்டவனே கற்பதேகி
ஆத்தாளைப் பூசித்தோன் முனிதானாகும்
முந்திவந்த ததைவிடுத்து நடுவேநின்று
முக்காலும் வாயில்மந் திரஞ்செபித்து
சிந்தித்துக் காலையிலும் மாலைநேரம்
சிறப்புடனே கொண்டாக்கால் சித்தியாமே. 932

சித்தியென்ன அகாரகம்ப மின்னதென்று
தெரிந்துகொண்டால் வாலையவள் கிருபை செய்வாள்
முத்திபெற நந்திகொலுக் கண்டுகொண்டால்
முடிவான நடுவனையைக் காணவேணும்
மத்திபமா யிருக்குகின்ற குண்டலியின்
வலிமைகண்டு பிரமரந் திரமறிந்து
புத்தியுடன் நாதவிந்து வாங்கிக்கொண்டு
புகழாகக் கற்பமது கொள்வாய்நீயே. 933

கற்பமது காலையிலும் மாலைநேரம்
கருதியே சாப்பிட்டுக் கொண்டுவந்து
விற்பனமாய் மாதம்பன்னி ரண்டுஞ்செல்ல
விரும்பியே கற்பம்நீ கொண்டுவந்து
அற்புதமாய்க் கற்பமது கொண்டதாலே
அதில்வருங் குற்றங்கள் நீக்கிக்கொண்டு
கற்பனையில் லாவருடம் பன்னிரண்டு
தான்கொள்ளச் சித்தனா யாவான்பாரே. 934

சித்தமுடன் மாதமொன்று கொண்டாயானால்
சிறப்புடனே மேல்கால்கள் வலியெடுக்கும்
பத்தமுடன் மாதம்ரெண்டில் சூடுண்டாகும்
பதமாக மலங்கழியும் பேதியுண்டாம்
மத்தபடி மாதமூன் றாகிற்றானும்
வாய்வேகும் அபானம்வரை சூடுண்டாகும்
அத்தனரு ளாலேதான் மாதம்நான்கில்
அசதிவருங் கால்கைகள் நோகுந்தானே. 935

தானென்ற ஐந்துதிங்க ளாகுமாகில்
தன்வயிறு புண்ணாகும் ஆசனமும்வேகும்
கானென்ற பெண்மாய்கை யதிகமாகும்
கவலைவிடும் சிறுநீரு கடுத்துவீழும்
வேனென்ற விந்துவிழும் நினைவுமாறும்
மிக்கமுள்ள இடங்களெல்லாம் வெந்துபோகும்
கோனென்ற ஐந்துதிங்கள் வெகுபாடாகும்
குவலயத்திற் வெயிற்படா திருந்துபாரே. 936

பாரேதா னாறுதிங்கள் முடிந்துதானால்
பண்பாக வயிறுதான் பசியுண்டாகும்
நேரேதான் பசிவந்து அமர்ந்துபோகும்
நேர்த்தியாய்ப் புளியேப்ப மிகவுண்டாகும்
சீரேதான் உடல்நோகும் நடைகளோயும்
சிறப்பாக வேயிதற்குக் காரசாரம்
காரேதான் சேர்த்துவர வேணுங்கண்டாய்
கருவான புளிகளையுங் கருதிக்கொள்ளே. 937

கருதியதோர் புளிதனையும் கொண்டாயானால்
கனல்யோகம் ஏழுதிங்கள் கொண்டாயானால்
பெருகிய திமிரேரும் அசதிகொள்ளும்
பேரானஉடம் பெல்லாம் வெளுத்துக்காணும்
அருதியாய்ப் புளியேப்ப மிகவுண்டாகும்
அன்பாகப் பெண்கள்மே லாசைகொள்ளும்
சிறுவாச லடிவயறு மிகவும்நோகும்
சிற்பரையைப் பூசிக்கத் தீருந்தானே. 938

தீருமது யெட்டான திங்களானால்
சிறப்பான தேகமதி லொளிவுண்டாகும்
பாருநீ எலும்பிலுள்ள மூளைபோகும்
பசுமையுள்ள எலும்பின்வழி சுவாசம்போகும்
சீருடனே புளிதனையே கொள்ளவேணும்
தேறுதற்கு மேலெல்லாந் துவாலையோடு
நேருடைய வாசமதை யெண்ணவேண்டாம்
நேர்மையுடன் குணமாகு மின்னுங்கேளே. 939

இன்னும்நான் சொல்லுகிறேன் பரையின்பூசை
இயல்பாக இருவேளை நடத்தவேணும்
மன்னவனும் நீயாவாய் குய்யம்வேகும்
மயங்காதே துடைகளெல்லாம் விருவிருக்கும்
நன்னயமாய்ச் சோதிவொளி காணும்பின்பு
நலமான தூரவெளிக் கம்பந்தோணும்
என்னவென்று சொல்லுவேனான் சித்துக்காணும்
இனிமையுடன் ஒன்பதாந் திங்கள்கேளே. 940

திங்களா மொன்பதினில் வயிறுநோகும்
திறமையுள்ள குண்டலியின் முறப்பதாகும்
மங்களமாய்த் தேகமது மினுமினுக்கும்
மயக்கமுடன் தியக்கம் அசதிகாணும்
தங்கம்போல் தேகமது யிருக்கும்பாரு
சரியாகப் பசும்பாலைச் சேர்த்துக்கொள்ளு
கங்கைதனை மறவாமல் பூசைசெய்து
காயத்திரி செபஞ்செய்து இருந்துபாரே. 941

இருந்துபார் பத்தான திங்கள்வந்தால்
எப்பொழுதும் ஆகாரம் வேண்டாதாகும்
அருந்துவது பாலாகும் பேதியாகும்
அன்பான பொருமலுண்டும் அசதிகாணும்
வருந்தாமல் நீயிருந்து வருவாயானால்
மனம்புத்தி அகங்கார மொடுங்கிப்போகும்
திருந்தவே அதிகமதாய்ச் சூடுண்டாகும்
தேகமதில் நெய்போல வருகுந்தானே. 942

வருகுமே பன்னொன்றாந் திங்கள்தன்னில்
பதபாக மாகமண்டை யிடிக்கும்பாரு
குருவாக புளிதனையும் கொண்டாயானால்
கூத்தனுமே உன்னிடத்தி லணுகமாட்டான்
திருவாகத் தனஞ்செயனு மெழுந்திருப்பான்
சிறப்பாகப் பரைபூசை விடாமற்செய்வாய்
அருவான வேதமந்திர மிதுதானாகும்
ஆச்சரியம் பன்னிரண்டு மாதங்கேளே. 943

மாதமப்பா பன்னிரண்டு வந்ததானால்
மகத்தான சந்துவலி வருகும்பின்பு
சேதம்வரா தொருநாளும் சீதம்வீழும்
செழுமையுள்ள கைகா லசதிகாணும்
வேதமெனும் பூரணத்தைக் கைக்கொண்டாக்கால்
வெகுசுழிவாய்ப் பறக்கும்பார் வியாதிதானும்
ஆதவன்போல் தேகமது யிருக்கும்பின்பு
ஆச்சரிய மெத்தவுண்டு வருடமாச்சே. 944

வருடமது முடிந்தவுடன் புளிதானுண்ண
வாய்க்குமது வேறொன்றில் மனதுநாடா
குருவருளால் காயகற்ப முண்டுவந்தால்
கொடிதான எமனுமே ஓடிப்போவான்
திருவருளா லெல்லாமுஞ் சித்தியாகும்
செய்பாகங் கைபாகந் தெரிந்துகொள்வாய்
அருணன்போ லென்னாளு மிருக்கலாகும்
அம்புவியில் சித்தரென்று சொல்லுவாரே. 945

சொல்லுவார் இருவருட முடிந்ததானால்
சூட்சாதி சூட்சமெல்லாந் தெரிந்துகொள்வான்
வெல்லுவான் எமனையுந்தான் ஞானியாவான்
மெஞ்ஞானி யிவனென்ற பேர்பெற்றுய்வான்
கல்லுப்போற் றேகமது இருகிப்போகும்
கனத்ததொரு எலும்புகளில் வாசியேறும்
புல்லுப்போல் நரம்பெல்லாம் வலுத்துப்போகும்
புதுமையுள்ள வாலையவள் பேசுவாளே. 946

பேசிடுவார் மூன்றுவரு டங்களானால்
பிரபல்ய மாயிருப்பான் சவம்போல்வாழ்வான்
தூசில்லா தேயிருப்பான் ஒருவரோடும்
தூஷணமா யொருநாளும் பேசமாட்டான்
ஆசில்லாக் காரியத்தை நினைக்கமாட்டான்
அருமையொடு வாய்திறந்து சொல்லமாட்டான்
நாசிநுனி வட்டமதில் நோக்கங்கொள்வான்
நாலுவரு டங்களதின் முறையைக்கேளே. 947

செய்கையென்ன நாலுவருடங்களாகில்
தினந்தினமும் யோகத்தின் மேலிருப்பான்
அய்யமது நீங்கிவிடும் உடம்புநோகும்
அத்தாளைப் பூசிக்க அதுவும்போகும்
வெய்யலிலே ஒருநாளுந் திரியமாட்டான்
வேதாந்தத் தாய்பதத்தைப் பூசித்துய்வான்
உய்யும்வகை யாவருக்குங் காட்டமாட்டான்
உற்றஐந்தாம் வருடமதி லுண்மைபாரே. 948

உண்மையுடன் யாவருக்கும் நடந்துகொள்வான்
உயர்வான காரியத்தைச் செய்துபார்ப்பான்
தன்மையுடன் வகாரமுத லெல்லாஞ்செய்வான்
தனித்திருப்பான் நரைதிரையு மற்றுப்போகும்
நன்மையுடன் மலைவாச மிருப்பங்கொள்வான்
நானிலத்தோர் கண்ணுக்குத் தோணமாட்டான்
பன்மையுடன் வெறியன்போல் திரிவான்பின்பு
பற்றுதலாய் ஆறுவரு டங்கள்கேளே. 949

கேளப்பா ஆறுவரு டங்களாகில்
கெடியாக மலசலங்க ளும்பேதிக்கும்
வாளப்பா கெவுனத்துக் குறுதியாகும்
வருகுமே அமுதமது பெருகிக்காணும்
நாளப்பா அமுதமது கொள்ளவேணும்
நன்மையுடன் பூரணத்தைப் பணியவேணும்
ஆளப்பா தேசமெல்லா முன்னதாகும்
அவனிதனில் பேர்பெற்ற சித்தன்றானே. 950

சித்தனென்ற ஏழுவரு டங்களானால்
சிறுபிள்ளை தானாகும் மதளையாகும்
அத்தனுட பாதமதைப் பூசைசெய்யும்
அம்பிகையாம் வாலைதனைப் போற்றிவாழும்
பித்தனென் றுஞ் சொல்வார்கள் பித்தனல்ல
பெரும்பேற்றை யடைந்ததொரு சித்தனாகும்
மூத்தனென்று பேருபெற வெகுநாள்செல்லும்
முடிவாக யெட்டுவரு டங்கள்தானே. 951

தானேகேள் எட்டுவருடங்களாகில்
தனியான குகைதனிலே யிருக்கச்செய்யும்
மானார்க ளாசையெல்லாம் வெருத்துக்காணும்
மானிலத்துப் பொருள்களெல்லா மசகமாகும்
கோனாக வேயிருந்து பூசித்துய்வான்
குறிப்பாக அமுதமுடன் பாலும்விட்டு
தேனாக வேஅருந்தி திரிவான்பின்பு
சீவனுக்குச் சீவனா யிருந்துய்வானே. 952

உய்வானேன் ஒன்பதுதான் வருடஞ்சென்றால்
ஒருவரையுஞ் சட்டைசெய்யான் ஒடுங்கிப்
போவான்
செய்காரி யங்களையுந் தேடமாட்டான்
தேவிபதம் பூசிக்க மறக்கமாட்டான்
மெய்வாய்மை தவறியே நடக்கமாட்டான்
விரும்பியொரு காரியத்தைச் செய்யமாட்டான்
எய்யாமல் காதவழி நடப்பான்பின்னும்
இயல்பாக வாசிவச மாகுந்தானே. 953

ஆகுமே யீரைந்து வருடமாகில்
அவனமுரி லோகத்திற் பழுக்குமப்பா
ஏகுமே தேகசட்டை யொன்றுவாங்கும்
இனிமையுள்ள தேகமது பொன்போலாகும்
பாகமுடன் தேகவுப்பு மாறிப்போகும்
பதபாக மாகவே யிருக்கலாகும்
யோகமது பூரணந்தா னறியவேணும்
உயர்பதினொன் றாண்டினுட பாகங்கேளே. 954

வரிசையது யேதென்றால் சித்தனாவான்
வாயினாற் சொன்னசொல்லு பலிக்கவேணும்
உரிசையுட னுருவகைகள் வேண்டாதாகும்
உயர்ஞான கேசரங்கள் தெரிவான்பின்னும்
சரிசமமாய் யாவரையும் நினைப்பான்யோக
சாதனமே கைக்கொள்வான் பெற்றோரோடு
உரியதொரு சனங்களுட வாஞ்சைதள்ளி
உம்பர்களோ டிணங்கியே வாழ்வான்பாரே. 955

இணக்கமுடன் பன்னிரண்டு வருடமானால்
எப்பொழுதும் அழியாத தேகமாகும்
சணப்பொழுது வெளியேறித் திரியமாட்டான்
சவ்வாது மணக்குமவன் தேகமெல்லாம்
குணமாக நரைமயிருங் கருத்துப்போகும்
குழந்தைபோல் பதினாறு வயதுமாகும்
மணமுடிக்கு மாப்பிள்ளைபோ லழகுண்டாகும்
மகிழ்வாகக் குகைகளிலே வாழ்வான்பாரே. 956

பாரப்பா பன்னிரண்டு முடிந்துதானால்
பாலகன்போ லொருவயது தானுமாச்சு
நேரப்பா யிருபத்தி நான்குசென்றால்
நேர்மையுள்ள வயதுமீ ரண்டதாகும்
சீரப்பா முப்பத்தி யாறுமானால்
சிறப்பாக மூன்றுவய தாச்சுதப்போ
தாரப்பா பன்னிரண்டுக் கோர்வயதாய்
தான்பெருக்கி வயததுவை எண்ணிக்கொள்ளே. 957

எண்ணியே பார்த்துக்கோ வயதுநூறில்
இயன்றாலுங் கூடுவிட்டுக் கூடுபாய்வான்
உண்ணியே மூன்றுலகம் போய்வருவான்
உற்றதொரு இடங்களிலே இருந்துவாழ்வான்
திண்ணியனாய் அஷ்டகர்மத் தொழில்கள்யாவும்
செய்வானே அறுபத்து நான்குசித்தும்
புண்ணியனு மிவன்றானே யென்போலாவான்
புகழான பேருபெற்று வாழ்வான்பாரே. 958

பாரேதான் கற்பமுண்ணுங் காலந்தன்னில்
பத்தியங்கள் தான்கேளு பசுவின்பாலும்
சீரேதான் பாசிப்பயர் சோறுஞ்சேரு
சிற்றுணவு மாமிசமு மச்சமாகா
நேரேதான் கடுகுநல் லெண்ணெயாகா
நேர்மையுடன் முழுகுதற்குத் தேங்காய்சேரு
வேறேதா னொன்றையுமே சேர்க்கவேண்டாம்
வெகுசுருக்காய்ப் பத்தியத்தைக் கார்ப்பாய்நீயே. 959

பத்தியமா யிருப்பதற்குச் சொல்லிவிட்டேன்
பரிவாக ஆணுவங்கள் மிகவுண்டாகும்
நித்தியமு மாதர்களை நினைக்கவேண்டாம்
நேராக வருடமொன்று மட்டும்பாவி
சித்திபெற்று வருடமொன்று முடிந்துதானால்
சீரான தாயாக நினைத்துக்கொள்ளு
முத்திபெற வேண்டுதற்கு அவள் தான்வேண்டும்
முடிவான காரியத்தைப் பின்சொன்னேனே. 960

சொன்னேன்பார் கற்பமுண்ண வயதுகேளு
சுகமாக யிருபதுக்கு மேலேதானும்
நன்னயமாய்க் கற்பமுண்டால் நல்லதாகும்
நலமாக முப்பதுக்குள் மிகவும்நன்று
கன்னலுடன் நாற்பதுக்குள் கற்பங்கொண்டால்
கருத்துமிக வுண்டாகும் பலிதமாகும்
சின்னலது வாராது அன்பதுக்குள்
தேகசித்தி யாகுமது தடையில்லாதே. 961

இல்லாதே அறுபதுக்குள் கற்பங்கொண்டால்
இனிமையுள்ள தேகமது பொன்னதாகும்
அல்லாது யெழுபதுக்குள் கற்பங்கொண்டால்
அவனிதனில் நூறுவய திருப்பானப்பா
எல்லார்க்குங் கிட்டாது கற்பந்தானும்
எழுபதுக்கு மேலானால் பலமிராது
நல்லாகச் சொல்லிவிட்டேன் கற்பநேர்மை
நானிலத்தோர் தங்களுக்குத் தெரியொண்ணாதே. 962

தெரியவே சொல்லினேன் கற்பம்வேறு
சீராக முப்பூவும் வேறேயென்று
அரியவே கற்பமது கொள்ளாவிட்டால்
அவனிதனில் வாதமுப்பு முடியாதப்பா
உரியதொரு கற்பமுப்பு முடிந்துதானால்
உலோகங்க ளெல்லாந்தான் பழுத்துப்போகும்
கரியமா லுந்தியிலே பூத்தோன்றன்னை
சைக்கொண்டால் வாதமுப்பு முடியும்பாரே. 963

வாதமுப்பு முடிந்தவுடன் ஞானகற்பம்
வகையுடனே கண்டறிந்து செய்துவந்தால்
சேதமது வாராது கெவுனம்போவான்
சிறப்பான கூடுவிட்டுக் கூடும்பாய்வான்
வேதமிது வறிந்தோனே ரிஷியுமாவான்
வியப்பான பாஷாண மெல்லாம்நீரும்
சூதமது கட்டிவிடுங் குளிகையாகும்
சுண்ணபற்ப செந்தூர மாகும்பாரே. 964

ஆகுமென்ற ஞானகற்ப முடிந்துதானால்
அவனிதனில் பேர்பெற்ற ரிஷியேயாவான்
ஏகுமென்ற வயித்தியமுப்பு முடிவதற்கு
இயல்பான பூநீரும் அண்டக்கல்லும்
பாகமுடன் சுத்தகங்கை யாலேதீட்சை
பண்ணினால் வயித்தியமுப்பு முடிந்துபோகும்
தாகமுடன் மூன்றுமுப்பும் முடியவேணும்
சாகரத்தி லுப்பெடுத்து தனியாய்ப்பாரே. 965

தனியாக வேயிருந்து அமுரிவாங்கி
தக்கபடி அதைக்குறுக்கி கல்லுப்பாக்கு
கனிவாக உப்பெடுக்கும் வகையேதென்றால்
கரும்பின்ரசம் கற்கண்டு கட்டியாச்சு
இனிதான உப்புமிப் படியேசெய்தால்
இயல்பான கற்கட்டி உப்புமாகும்
பனியாகக் கல்லுப்பு இதுதானாகும்
பார்தனிலே கொம்பானைக் கல்லென்பாரே. 966

கல்லான உப்பெடுத்துப் பொன்னதாக்கி
கருமலைபோ லுண்டாக்கி விட்டாரப்பா
எல்லார்க்கு மாகாது மகரிஷிக்கு
எய்துமல்லால் மற்றோர்க்கு எய்யாதப்பா
நல்லபிள்ளை யாகவே சித்தர்க்கெல்லாம்
நானிருந்த வகைவிபரஞ் சொல்லுவேன்கேள்
வல்லவனாய்க் கூடுவிட்டுக் கூடுபாய்வேன்
மகாகோடி யுகம்வரைக்கு மிருந்திட்டேனே. 967

இருந்திட்ட வகைவிபர மேதென்றாக்கால்
இயல்பான கிரேதாயுகந் திரேதாயுகந்தான்
திருந்தவே துவாபரமும் கலியுகந்தான்
சிறப்பான யுகநாலு மனுடரூபம்
பொருந்தவே நாலுயுக முடிந்துதானால்
புகழாகக் காக்கையுருக் கொண்டெழுந்து
குருந்தநிழல் விருட்சத்தின் மேலிருப்பேன்
கொடிதான பிரளைய முடிந்தபின்பே. 968

பின்பாக சிவனயனு மாலும்வந்தார்
பிரபலமாய் மூவரையும் வாங்களென்று
தென்பாக மூவர்களே தங்களைத்தான்
தெரிசித்தேன் கோடியுக மாகத்தானும்
அன்பாக இவ்விருட்சத் திருந்துகொண்டு
அடைவாக முடிவுயுகந் தோறும் பார்த்தேன்
முன்பாக இப்படியே சொன்னதற்கு
மூவர்களுங் குருஞ்சிரிப்புக் கொண்டார்பாரே. 969

குருஞ்சிரிப்புக் கொண்டதென்ன வென்றுகேட்க
குணமாக மூவருந்தான் சொல்லுவார்கள்
வஞ்சகங்க ளில்லாமற் சொல்லுகின்றோம்
மகத்தான மூவருந்தான் யுகமுடிவில்
பஞ்சுபோல் பிரளையகா லத்திலேதான்
பதுங்கியே மறைந்திருந்து வெளியேவந்தோம்
துஞ்சுத லில்லாமல்நீர் பிரளையத்தில்
துடுக்காயிம் மரத்திருந்த தருமைதானே. 970

அருமையென்று சொல்லிவிட்டு மூவர்போனார்
அவர்களெத் தனைதரமோ மறைந்துவந்தார்
வெருமையுடன் சொல்லவில்லையவர்கள் பேச்சை
விட்டுவிடு கோடியுகம் பார்த்தேனப்பா
பெருமையுடன் சொன்னதல்ல பிரளையத்தின்
பின்புவந்து கண்டவர்க்கே தெரியுமப்பா
உரிமையுடன் வசிஷ்டரே யுனக்குத்தோண
உரைத்தேனே யல்லாது பின்பு சொல்வேன்நானே. 971

## காரசாரக்குரு முப்பு

சொல்லவே காரசா ரத்தின் முப்பு
சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
மெல்லவே அண்டக்கல் வெள்ளைக்கல்லு
வெகுசுருக்காய்க் கொண்டு வந்து உரலிலிட்டு
கல்லவே மாவாக்கி இடித்துக் கொண்டு
கரியில்லாச் சட்டியிலே தானும் போட்டு
நல்லதொரு அமுரிதனை முங்கவிட்டு 972
நலமாக நாளொன்று ஊரவைத்தே.

ஊரவைத்து முத்துப்போற் தெளிவிருத்து
ஊத்திவிட்டு வேரமுரி தானும்விட்டு
தேரவே யிதுபோல பத்துநாளுஞ்
செய்தெடுத்து ரவியில்வைக்க பொருமிநீரும்
ஆரவே தானெடுத்துக் கன்னிச்சாற்றில்
அடைவாக முங்கவிட்டு ரவியிலேதான்
நேரவே காற்றுகளும் படாமல் வைக்க
நேர்த்தியுடன் றான்பார்க்க உப்பேயாகும். 973

உப்பானதை யெடுத்துப் பீங்கானிட்டு
உரிமையுடன் பழச்சாற்றைச் சரியாய்விட்டு
தப்பாம லடுப்பேத்தித் தீபமாகத்
தானெரிகக எண்ணெய்கக்கிச் சுண்ணமாகும்
இப்பாரி லுள்ளோர்க்குத் தெரியாமற்றான்
எடுத்துவைப்பாய் சாடிதனில் குருவுமாச்சு
செப்பாதே யொருவருக்கும் வாதமுப்பு
திரமுடன் புகைச்சரக்கு நீரும்பாரே. 974

புகைச்சரக்காம் பாஷாண மெல்லாத்துக்கும்
புகழான வுப்பெடுத்து வாய்நீர்விட்டு
நகையாமற் சுத்திசெய்த பாஷாணத்தில்
நலமாக வேதடவிக் காயவைத்து
தகையிலா தேயெடுத்து வழக்கம்போல
தக்கயெரு வதனிலிட்டுப் புடமும்போட்டால்
பகையாதே சரக்கெல்லாம் நீரிப்போகும்
பக்குவமாய்த் தானெடுத்து வைத்துக் கொள்ளே.
975

வைத்ததொரு குருவதனைச் சிறுகெடுத்து
வாய்நீரி லேகுழைத்து வைத்துக் கொண்டு
சித்தமுடன் லேகியங்கள் கசாயத்திற்கும்
சிறப்பான சுண்ணசெந் தூரத்திற்கும்
பத்தமுடன் றான்கொடுக்க வியாதியாவும்
பறந்துவிடும் ஒருவருக்கும் வெளிவிடாதே
அத்தனுட அருளாலே இவைகள் செய்வாய்
அண்டக்கல் தெரிவதுதா னருமைபாரே. 976

அருமையுட னுந்தனுக்குத் தெரியச்சொல்வேன்
அன்பாக ஊரண்டி யிருந்துகொண்டால்
பெருமையுடன் பிர்மக்கல் தெரியுமப்பா
பேருலகில் கிடையாத தொன்றுமில்லை
உருமையுடன் பிர்மனுமே ஆதிநாளில்
உகந்தெழுதி வைத்தபடி கற்கள்தோணும்
ஓருமையுடன் ருத்திரனார் பூமிதன்னில்
உள்ளுக்குள் கல்லதுவு மிருக்குந்தானே. 977

இருக்குகின்ற கல்லதுதான் அண்டக்கல்லு
இதைவிட்டு உவற்காட்டு கல்லுவேண்டாம்
பெருக்குகின்ற உவற்காட்டி லிருக்குங்கற்கள்
பெருமையுள்ள கற்குண்டு கல்லதாகும்
உருக்கமுட னதையெடுத்து நீத்திக்கொண்டு [redacted]
உற்றதொரு புநீரைக் கூடவிட்டால்
வருக்கமுடன் பூநீரு உப்பதாகும்
வயித்தியத்துக் காகுமிந்த உப்புத்தானே. 97

## பிரமகற்பம் [redacted]

உப்பதுவும் கண்டுகொண்டால் கற்பம்வேணும்
உரிமையுடன் பிர்மகற்பஞ் சொல்லக்கேளு
இப்பொழுதென் தாயிடத்தில் கொடிபடர்ந்த
இனிமையுள்ள பசளையது தானும்வாங்கி
அப்பல்லோ அதன்கோரை தானும்போக்கி
அன்பாக வேநறுக்கி உரலிலிட்டு
செப்பமுட னிருப்புலக்கை தன்னாற்சாடி
சிறப்பாக வேயிடிக்க உண்டையாமே. 9

உண்டைதனைச் சட்டியிலே தானும்போட்டு
உருப்படவே அரைப்பாகம் கூடன்போட்டு
அண்டையிலே தானிருந்து அழுரிதானும்
அளவாக நாலுபடி தானும்விட்டு
எண்டிசையு மறியாமல் அடுப்பிலேற்றி
இனிமையுடன் சாம்பிராணித் தூபங்காட்டி
வண்டறுக்குத் தெரியாமல் தீயெரித்து
வடுப்படா துடுப்பதனால் கிண்டிக்கொள்ளே. 980

துடுப்பதனால் கிண்டிவந்து பதத்தைக்கேளு
சுழிவாக அடிபிடிக்கா திருக்கவேணும்
எடுப்பதற்குள் கும்பிவிட்டால் பாகம்போச்சு
இயல்பாக இரண்டையுமே பார்க்கவேணும்
அடுப்பதனில் சிறுதீயா யெறிக்கவேணும்
அன்பாகக் கொதி கிளம்பி வருகும்போது
சடுக்கென்றே நெய்வேறு புஷ்டிவேறு
தான்பிரியும் நெய்மிதக்கு மதனைப்பாரே. 981

பாரப்பா நெய்வேறு கடுகுவேறு
பக்குவமாய்த் தானெடுத்து வடித்துக் கொண்டு
நேரப்பா கடுகதுவும் முருகிடாமல்
நினைவாகப் பார்த்தெடுத்து வேறேவைத்து
சீரப்பா பராபரைக்குப் பூசைபோடு
சிறப்பாக ரேசகபூ ரகந்தான் செய்து
காரப்பா கடுகுடனே தயிலந்தன்னை
கருத்தாக உண்பதற்கு வகைசொல்வேனே. 982

சொல்லுவேன் கற்பமது உண்பதற்கு
சுகமாகத் தயிலத்தை கரண்டிவீதம்
அல்லப்பா காலையிலே உண்டுவாநீ
அன்பாக மாலையிலே கடுகுதன்னை
வெல்லப்பா யெலுமிச்சங் காயளவு
விதமாக வுண்டுவர தேகசித்தி
நல்லதொரு மலசலங்கள் பேதிக்கும்பார்
நாட்டிலே யிதைவெளியிற் பேசிடாதே. 983

பேசிடா திருந்தாக்கா லாபமுண்டு
பேராகத் தொட்டதெல்லாம் வாதமாகும்
கூசிடா தேகெவுன முயரத்தூக்கும்
கேசரிமார்க் கங்கள்போய் வரவுமாகும்
ஆசையுடன் சித்தர்களும் வந்துபோவார்
ஆச்சரிய மிகவுண்டாம் கீர்த்தியுண்டாம்
பாசைபதி னெட்டுமே தெரிந்துகொள்வான்
பத்தியமா யிருந்திடவும் வேணும்பாரே. 984

## மூலிகைக் கற்பம்

இருந்திடமூ லிகைகற்பஞ் சொல்லக்கேளு
இயல்பான சிவன்வேம்பு வேங்கைப்பட்டை
அருந்திடவே ஆவரையின் பட்டைமூன்றும்
அன்பாக நாதவிந்தும் நிரையொன்றாக்கி
திருந்திடவே பாண்டத்தி லிட்டுமூடி
சிறப்பான குளித்தயில மிறக்கிக்கொண்டு
பொருந்திடவே சண்முகர்க்குப் பூசைசெய்து
புகழாகக் கொள்வதற்கு வகையைக்கேளே. 985

வகையென்ன துட்டிடைதான் காலைமாலை
வழியோடே சாப்பிட்டு வந்தாயானால்
திகையிலாத் தேகமது வலுத்துப்போகும்
திறமான நரைதிரையு மற்றுப்போகும்
பகையிலா நரம்பெல்லாம் வலுத்துப்போனால்
பாழான வியாதியெல்லா மோடிப்போகும்
நகைபோலத் தேகமது பொன்போலாகும்
நானிலத்திற் சித்தனென்று பேருய்வானே. 986

## வாதமுப்பு

பேருபெற வாதமுப்பு சொல்லக்கேளு
பெரிதான சவ்வீரக் கட்டிவாங்கி
நேருடனே பிர்மகற்பத் தயிலந்தன்னில்
நேர்த்தியுடன் றான்றோய்த்து ரவியிற்காய்ந்து
பாருநீ பிர்மகற்பக் கடுகுதன்னை
பண்பாக வீரந்தனக்குக் கவசஞ்செய்து
சேருநீ அதற்குமேல் சேலைசெய்து
சிறப்புடனே ரவிதனிலே வைப்பாய்பாரே. 987

பாரப்பா காய்ந்தபின்பு விளக்கில்வாட்ட
பதிவான மெழுகாகும் வைத்துக்கொண்டு
நேரப்பா குந்தனதங் கத்தைவாங்கி
நிலையான படியாகத் தூள்கள்செய்து
சீரப்பா முன்கடுகு தன்னிலேதான்
சிறப்பாகத் தானெடுத்துப் பத்துக்கொன்று
தேரப்பா தங்கத்தூள் அதிலேசேர்த்து
திறமாக மெழுகுக்குக் கவசஞ்செய்யே. 988

செய்யப்பா மெழுகெடுத்து ரவியில்வைக்க
சிறப்பான தங்கத்தை வீரந்தின்னும்
உய்யப்பா யிம்மெழுகை நவலோகத்தில்
உரிமையுடன் கொஞ்சமது தானெடுத்து
மெய்யப்பா தான்கொடுக்கப் பழுத்துப்போகும்
மேலான வயதுபதி னாறுமாகும்
ஐயப்பா யிந்தவகை கண்டோன்சித்தன்
அவனிதனில் பேர்பெற்ற ரிஷியாவானே. 989

பேருபெற்ற ரிஷியாவான் யோகியாவான்
பிரபலமா யொருவருக்குங் காட்டமாட்டான்
நேருடனே யாரோடும் பேசமாட்டான்
நேர்மையுட னோரிடத்தி லிருக்கமாட்டான்
ஊருராய்ப் போய்வருவான் குளிகைசெய்வான்
உண்மைதனை யொருவருக்குங் காட்டமாட்டான்
மாருதலாய் வார்த்தைகளைச் சொல்வான்ஞான
வழிதெரிந்து மலைக்குகையி லிருப்பான்பாரே.
990

இருப்பதற்கு ஆறுவரைக் கப்பாற்சென்று
இயல்பான சமுத்திரத்தைத் தெரியவேணும்
பொருப்பான துயஸ்தம்பந் தெரியவேணும்
புகழான வாலையைப்பூ சிக்கவேணும்
திருப்பான குலைக்கனியைக் காணவேணும்
தீவினைகள் வாராம லருந்தவேணும்
மருப்பான கூற்றுவனை விரட்டவேணும்
மாறாத யோகத்தை யறிவாய்ச்செய்யே. 991

செய்யப்பா யோகஅப்பி யாசந்தன்னை
சீராகச் செய்துவந்தா லெல்லாஞ்சித்தி
மெய்யப்பா வாலையுங்கை வசமேயாவாள்
மேலான அமுதரசம் பொங்கிவீழும்
அய்யப்பா யிதைவிட்டா லெல்லாம்போச்சு
அவனிதனில் நாதவிந்தை யறியாவிட்டால்
உய்யப்பா வழியொன்று மில்லையில்லை
உந்தனக்குச் சொல்லிவிட்டே னுண்மைபாரே. 992

உண்மையென்று செய்வோர்க்கு எல்லாமாகும்
ஒன்றுமில்லை யென்போர்க்கு எதுதானாகும்
நுண்மையுடன் சாஸ்திரத்தை யறியவேணும்
நுணுக்கமுடன் பரிபாஷை தெரியவேணும்
தண்மையுடன் விட்டாக்கா லெல்லாம்போச்சு
தவறியே நடந்தபின்பு ஒன்றுமாகா
எண்மையென்று நினைப்போர்க்கு எதுவுமாகா
எப்பொருளும் பாடுபட்டால் கிடைக்கும்பாரே. 993

கிடைப்பதுவோ இந்தநூ லாயிரத்தில்
கிருபையுடன் யோகமுதல் கற்பஞ்சொன்னேன்
மடைதிறந்த வெள்ளம்போல் வயித்தியந்தான்
வகையோடே ஆயிரமுஞ் சொல்லிவைத்தேன்
சடையாமல் சூத்திரமெண் பதுவுஞ்சொன்னேன்
சங்கையற ஞானமுப் பதுவுஞ்சொன்னேன்
விடையமுடன் உபனிடதம் சுருக்கிச்சொன்னேன்
வேணுமென்று முப்பூசூஸ் திரஞ்சொன்னேனே. 994

சூத்திரத்தைப் பார்த்தவர்க்கு எல்லாந்தோணும்
தொல்லையென்று விட்டவற்கு ஒன்றுந்தோணா
சாத்திரத்தைப் பிரியமுடன் கையில்வாங்கி
தனித்திருந்து பார்த்தாக்கா லெல்லாந்தோணும்
ஆத்திரத்தோ டேபார்த்து எரிந்திட்டோர்க்கு
அணுவளவுந் தெரிந்துகொள்ளப் போவதில்லை
நேத்திரப்போற் சாஸ்திரத்தைப் பார்த்திட்டோர்க்கு
நெறிமுறையும் வகைவிபரந் தெறிவான்பாரே. 995

தெரியுதற்குச் சாஸ்திரங்கள் கோடாகோடி
செய்துவைத்தார் கருக்குருவுஞ் சொல்லாமற்றான்
அரியுதற்கு மனம்புத்தி சித்தம்வேணும்
அறிந்துகொள்ள முடியாட்டால் குருவும்வேணும்
பெரிதான குருவிடத்திற் றொண்டுசெய்து
பேரின்ப நிஷ்களைத் தெரியவேணும்
உரிமையுடன் தெரிந்துகொண்டோன் சித்தனாவான்
உலகோர்க்கா யிந்நூலை உரைத்திட்டேனே. 996

உரைத்திட்டேன் கருக்குருவை வெளியாய்ச்
சொன்னேன்
முக்கோணப் பீடமதை முழுதாய்ச் சொன்னேன்
கரை கண்டு தெளிவு பெற வகையுஞ் சொன்னேன்
சித்திமுத்தி யோக ஞான முறையுஞ் சொன்னேன்
வரை தாண்ட பல வழியைத் தெளிவாய்ச் சொன்னேன்
வல்லவ னாவதற்கு வாலை விவரஞ் சொன்னேன்
நிறைவாக வாசலதின் பெருமை சொன்னேன்
நெற்றிக்கண் திறப்பதற்கு நெறியைச் சொன்னேன்
குறை நீக்கி நரை மாற்ற முறையுஞ் சொன்னேன்
பழிநீங்க தானமுடன் தர்மஞ் செய்யே. 997

தானமுடன் தர்மமதை வகையாய்ச் செய்து
ஆணவமும் கோபமும் அறவே தள்ளி
மானமுடன் அபிமானம் மறையச் செய்து
மற்றுமுள்ள சீவனெல்லாம் தானாயெண்ணி
மோன நிலை கூடிடவே வாலை பூசை
முறையாகச் செய்தாக்கால் எல்லாமாச்சு
வானவரும் போற்றுகின்ற நிலையுமாச்சு
வல்லவனா யாவதற்கு வழியுமாச்சு
ஞானநிலை அடைவதற்கு வழியுமாகும்
ஞாலமெல்லாம் உந்தனது கைக்குள்ளாகும் 998

உந்தனது கைக்குள்ளே உலகமானால்
உண்மை நிலை உனக்குள்ளே தெரியும்பாரே
எந்தனது நூல் விளக்கம் யாருக் கென்றால்
உன்போன்ற உத்தம மகனுக் கென்பேன்
சந்தனாதி முதலான வாசனை யாகும்
சதுர் மகனும் போற்றுகின்ற மேனி யாகும்
கந்தன் முதல் மூல நாயகரெல்லாம்
முறையாக நூலுனக்கு தருவார் பாரே. 999

நூலணக்கு தருவதை மறைவாய் வைப்பாய்
முறையான சீடருக்கு முற்றும் சொல்வாய்
பாலுந் நீரும் பிரிப்பதற்கு வகையைச் சொல்வாய்
பக்குவமாய் ஆயிரத்தை எடுத்துச் சொல்வாய்
நாலுமெட்டும் சேர்ப்பதற்கு வழியைச்சொல்வாய்
நல்லவர்க்கு நமபயத்தை தள்ளி வைப்பாய்
ஆளுகின்ற முறையதனை அன்பாய்ச் சொல்வாய்
அனுதினமும் இளமையுடனிருக்குச் செய்வாய்
வாழ்கின்ற வாழ்வதனை வகுத்துச் சொல்வாய்
வாழி வாலை பாதம் வாழி வாலைபாதம்
வாழியவே. 1000

காகபுசண்டர் பெருநூல்
காவியம் 1000 முற்றிற்று.

•

உ

அன்பும் அருளும் எங்கும் நிலைக்கட்டும்

திருவருள் துணை

சற்குருநாதர் சித்தர் பெருமான்

கருணைக்கடல் காக்கும் தெய்வம்

# ஸ்ரீ காகபுசுண்டரின்

# "பெருநூல் காவியம் 1000"

நூலுக்கான

## ஞான விளக்க உரை-முதல் பகுதி

காப்பு

ஆதியென்ற மூலமந்திர மைந்தெழுத்தை
அன்புடனே மனதில்வைத்து ஓங்காரத்தை
நீதியுடன் றான்பணிந்து பெருநூல்தன்னை
நிகழ்த்துதற்கு ஐங்கரன்றன் பாதங்காப்பு
சோதியென்ற சுழிமுனையைத் தியானஞ்செய்து
சுந்தரமாய்ப் பிராணாயாமம் விரித்துரைக்கப்
பாதிமதியணியீச னுமையாள் காப்பு
பக்தியுள்ள வாலையின்றன் பாதங் காப்பே. 1

பாடல் : 1 விளக்கவுரை :— ஆதி அனாதியாய் ஆண்டவனைப் போல் என்றும் உள்ளது ஆன்மா. இந்த ஆன்மா பரிபக்குவம் உற்று மரணமிலாப் பெருவாழ்வை யடைய மனித தேகம் திருவருளால் வழங்கப்பட்டுள்ளது. திருவருள் கருணையினால் உடல், உள்ளம், உயிர் இந்த மூன்றையும்

இணைத்து நிலை நிறுத்திவிட்டால் மரணமில்லை. இவ்வாறு இம்மூன்றையும் இணைக்கும் மாபெரும் மருந்துதான் பஞ்சாட்சரம் அல்லது ஐந்தெழுத்து என்பது. ஐந்துவிதமான தேகங்களைக் கொண்ட இவ்வான்மாவின் மகா காரண உடம்பைச் சுற்றி பஞ்சபூதங்களின் மகா காரண வடிவ ஒளியானது சுற்றி பிரகாசிக்கும். இதற்கு இயல்பான ஒரு ஒலி (ஓசை)யுண்டு. இந்த ஐந்தெழுத்தையே குருநாதர் இங்கு குறிப்பிடுகின்றார். இந்த ஒளிச்சக்தியை மனதின் ஒலியோடு இணைத்து செயல்படச் செய்யும் போது செயல்கள் செம்மையுறும். இவ்வாறு மன ஒலியோடு மகாகாரண ஒலி சேரும்போது இது ஓங்காரமாகிறது. இதுவே வாசி எனப்படுவது.

(அ (.) உ (.) -ம் (.) ).. பரிபாஷையாகவும் மறைப்பு நூலாக உள்ளவைகளையும் வெளிப்படையாகச் சொல்ல மூலக்கனலாம் மூலக்கணபதியை பணிந்து வேண்டித் தொடங்குகின்றார். சுழுமுனையனுபவம் யோகத்தில் ஏற்படும் பொழுது அதனது போதை போன்ற மயக்கத்தில் சொக்கி அங்கேயே நின்ற யோகிகள் அநேகம் கோடி, (பாயும் ஈராறு கலை தாண்டாமலும். சுழுமுனை தாண்டவும் குணங்குடியார்). இதனைத் தாண்டி யோக அனுபவத்தில் செல்கின்ற போதுதான் அறிவொலி நிலையை அடைய முடியும். அதாவது புலனறிவுக்கு அப்பாற்பட்ட விஷயங்களை அறியவும், அறிந்த வண்ணம் உரைக்கவும் முடியும். ஆகையால் இந்த ஜோதி நிலை அனுபவத்திலிருந்து உண்மையான பிராணாயாமத்தை விரித்துரைக்க, அறிவு மயமான ஈஸ்வரனையும், அன்பு மயமாகிய உமையவளையும் முன்னிலையில் வைத்து எமை வளர்க்கின்ற வாலையம்பிகையைப் போற்றி பெருநூல் காவியத்தை விளக்க முற்படுகின்றேன் என கூறுகின்றார்.

ஐந்து விதமான உடல்கள் : ஸ்தூல உடல், சூட்சும உடல், காரிய உடல், காரண உடல், மகா காரண உடல்.

பாதமதைச் சிரசில்வைத்து யுகங்கள்தோறும்
பண்பாகத் தானிருந்து கோடி காலம்
சாதகமாய்ப் பிரளயங்கள் முடியும் போது
தனியாகக் கல்லாலின் மேலிருந்து
சேதமொன்று மில்லாமல் மவுனமுற்று
சிறப்பாக எத்தனையோ யுகங்கள்கண்டு
வேதமென்ற பிர்மத்தி லடங்கிக் கொண்டு
வெகுகோடி யுகங்கள்வரை யிருந்திட்டேனே. 2

பாடல்: 2 விளக்கவுரை :— சூரிய சந்திர கலைகள் பரிபக்குவமாகி இரண்டும் சுழுமுநாக் கமலத்தில் ஒடுங்கி அங்கு ஏற்படும் அமுத நிலையை உள்ள உருக்கத்தாலும், உபதேச நிலையாலும் அகஒளியாக மாற்றி பிராணமயமான ஜோதி மயமான அறிவொளியாக மாற்றி எங்கும் பிரகாச ரூபகமாகி கபால நிலைக்கு மேலாக மத்திய இடமாக கொண்டு ஆயிரங்கோடி சூரியப் பிரகாசமாய் நின்று நிலைத்து நிற்கும். இந்நிலையடைந்தவர்களின் உடல் மாறி ஞானதேகமாகி ஒளியுடம்பாகி இறைநிலை உடைய தாக இருக்கும். இத்தகையோர்க்கு மரணமில்லை. (இணையார் திருவடி என் தலைமேல் வைத்தருளி— திரு மாணிக்கவாசக சுவாமிகள்) ஐவண்ணமாகிய பாதம். யார்க்கும் அரிதரிதாம்பாதம்— வள்ளல் பெருமான்). இந் நிலையையே பாதமதை சிரசில் வைத்து என குறிப்பிடு கின்றார். இவ்வாறு ஞான தேகம் அடைந்தால் கோடி காலங்களாகவும், எத்தனையோ பிரளயங்கள் ஏற்பட்ட போதும் அறிவு சொரூபமாக தானிருப்பதால் வெகு கோடி காலங்களாக இவ்வுடலோடு அன்புருவாக இருந்து வருகின் றேன் என குறிப்பிடுகின்றார்.

ஆலமரம் என்பதற்கு அறிவு சொரூபம் என்ற பொருளும் உண்டு. (கல் - ஆலமரம் - அசையாத மெய் அறிவு ரூபமாக இருந்து அனைத்தையும் அறிந்து இவ்வனு பவத்தால் நிறைவான மௌனமாக கோடி காலங்கள்

இருந்தேன் எனவும் குறிக்கின்றார்கள்) (தனியாக கல்லாவின் மேலிருந்து)

இருந்திட்டேன் காகத்தின் சொருபமாக
இன்பமுடன் வசிஷ்டருந்தான் யென்னிடத்தில்
வருந்தியே வந்துயென்றன் முன்னேநின்று
வாய்திறந்து கோடியுகம் கல்லால்தன்னில்
பொருந்தியே யிருந்துதான் வந்தீரையா
புகழாக யிருந்துவந்த விதங்கடன்னை
திருந்தியே சொலவேணு மென்றுகேட்கச்
செப்பினே னுண்மைதனைத் திறந்துதானே. 3

பாடல் : 3 விளக்கவுரை :— உலக உயிர்களில் தன் இனத்தைக் கரைந்து அழைத்து அவைகளையும் உணவு உண்ணச் செய்து தானும் உண்ணும் பறவை காகம். அதுபோல் உலக உயிர்களெல்லாம் என் உயிர், உலக மக்கள் எல்லாம் என் இனம். ஆகையால் அனைவரும் அருள் பெறவும், மரணமில்லாப் பெருவாழ்வு வாழவும், உங்களை அன்போடு உரிமையோடு அழைப்பதற்காகத் தான் ககண மார்க்கத்தில் செல்லும் போதும், உருவெடுத்து வரும்போதும் காக ரூபத்தில் வருகின்றேன் என்ற பொருள்பட இங்கே கூறுகின்றார். மேலும் குருநாதர் முதல் முதலாக தேகம் எடுத்தது காக ரூபத்தில் தான். இதன் விபரங்கள் "ஞான வாசிட்டம்" என்னும் நூலில் உள்ளது. இவ்வாறு காக ரூபத்தில் நான் இருக்கும் ஒரு சமயம் சித்தர்களும், ரிஷிகளும், முனிவர்களும் வசிஷ்டரின் தலைமையிலே வந்து எமை பணிந்து வணங்கி அசையாத நிலையான மெய்யறிவினைக் கொண்டு அன்பு வடிவாக கோடி கோடி யுகங்களாக இருந்துவரும் புசுண்டர் பெருமானே, தாங்கள் இந்த மாபெரும் நிலையை அடைந்த வண்ணம் தெளிவாக எங்களுக்குச் சொல்ல வேண்டும். உங்களால் தான் இந்நிலையை தெளிவாகக் கூற முடியும். இத்தகைய வேற்றுமையில்லா அன்புருவமானவரே, பகர

வேண்டும் என கேட்க, நானும் மகிழ்வோடு காகத்தின் தன்மை போல எல்லோரும் அறிய உரைக்கின்றேன் என கூறுகின்றார்.

## கனவு விபரம்

நோக்கியே சொல்லுகிறேன் கனவின் செய்கை
நுண்ணறிவாற் கண்டகனா சொல்வேன் கேளு
தாக்கியே பிராணனது யிடவிலாவில்
தானிறங்கி மலசலத்தைத் தொடும்போதெல்லாம்
ஆக்கியதோர் பித்தநீர் கீழிறங்கும்
அதுவாயில் வந்தவுடன் நினைவுதப்பும்
ஏக்கியே நடுநினைவை மாற்றிக்கண்ணை
யிருக்கிவிடுமேயறிவு மாறுஞ் சொல்லே—

பாடல்: 30

செல்லுமே வலதுபுற விலாவின் கீழே
சொன்னஅறி வதுலிறங்கில் மலமேகூடும்
வெல்லுமே தன்னறிவை விழுங்கிக்கொள்ளும்
மேலெழுந்த நினைவெல்லாங் கனவுமாகும்
புல்லுமே நினைவிலுள்ள மற்றதெல்லாம்
புகலுமே சடமறந்து காதுங்கேளா
மல்லுமே போர்புரிந்த விதமேகாண
வாதபித்த சிலேத்துமத்தைப் போக்குவீரே.

பாடல்: 31

பாடல்: 30 மற்றும் 31. நமக்கு ஏற்படும் கனவு நிலையை இரண்டாகப் பிரிக்கின்றார். நாம் காணுகின்ற கனவு சில சமயங்களில் நாம் ஏற்கனவே நினைத்த, பார்த்து அல்லது நமக்கு சம்பந்தப்பட்டவைகளைப் பற்றிய கனவாக இருக்கும். இப்படிப்பட்ட கனவுகள் உறங்குகின்ற போது

உச்சியிலுள்ள பிராணனானது வேகமாக இடதுபுற விலா பக்கம் உள்ள உணர்வு நரம்புகளின் வழியாக மலசலங்கள் வயிற்றில் உள்ள பகுதியில் அடையும்; தொடும். இந் நிலையில் உச்சியில் தங்கியுள்ள பித்த நீரானது இறங்கி வாயில் வந்தடையும் போது, மனதின் நினைவு தப்பும். இந்த நிலையிலே மேற்குறிப்பிட்ட கனவுகள் ஏற்படு—கின்றன. (தியானத்தில், தவத்தில் சரியான முறையில் செய்யாதபோது சுழுத்தி நிலையில் இது போன்ற கனவு களும் ஏற்படும்.)

உறங்குகின்றபோது அறிவொளியின் சிதறலானது வலதுபுற உணர்வு நரம்புகளின் வலது விலாவின் வழியாக அடிவயிற்றில் மலத்தை தொடும் பொழுது இந்த ஒலிச் சிதறலானது கரியமில வாயுவாகி கலந்து விடும் ஆனால் கனலுக்கு அனல் இயல்பு போல இவ்வொளியில் அனல் உந்திக் கமலத்தையடையும். இது சமயம் நாம் பார்த்திராத கேட்டிராத, சம்பந்தமில்லாத அல்லது வருங்காலங்களில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளைப் பற்றிய கனவாகவும் அமையும. சில சமயங்களில் பஞ்சபூத அறிவுக்கு அப்பாற் பட்ட கனவுகளும், தெய்வீக கனவுகளும் கூட தோன்றும். இது அறிவொளிச் சிதறலால் ஏற்படும் கனவுகளாகும். (சில ஆண்டுகளுக்கு முன் நான் வைரவத்தியானம் செய்யும் போது கனவிலே ஒரு தவறை செய்ய எத்தனிக்கின்றேன். அதைச் செய்ய நினைக்கையிலே வைரவர் கனவில் வந்து அவ்வாறு செய்வது தவறு என கண்டித்து தலையில் கொட்டுகின்றார். விழித்து எழுந்து பார்த்தால் தலையில் பெரியதாக வீங்கியுள்ளது).

அது சமயங்களில் மேலெழுந்த நினைவுகள் கனவாக உருவெடுக்கும். இது சமயம் நினைவு தப்புகின்ற நேரங் களில் கனவுகள் கண்டது போல் இருக்கும். ஆனால் தெளிவாகத் தெரியாது. இதற்குக் காரணம் சிலேத்துமம் உடலில் மிகுந்திருப்பது தான்.

ஆக வாத, பித்த, சிலேத்துமம் முறையாக உடலில் இருந்தால் தான் தவத்தில் படியேற முடியும். இதில் கவன மாக இருங்கள் என குறிப்பிடுகின்றார்கள்.

## சேத்துமத்தைப் போக்கி தமர் திறக்க யோகம்

போக்குவீ ரென்றுசொல்லிப் போக்கத்தானே
பொருளதனைச் சொல்லிவைத்தே னிடங்கள் தோறும்
நாக்குமே லண்ணாக்கு உண்ணாக்குள்ளே
நடுத்தமரைத் தான்திறந்தா லுச்சிவாசல்
மூக்குமேற் தண்டினிலே முனைமூக்குக்குள்
முளைத்தெழுந்த வாசிவரப் பார்த்தம்பர்கள்
தாக்குவார் புருவநடு மேலே பார்ப்பார்
தமர்வாச லடைத்திருக்கும் பூட்டுத்தானே.

பாடல்: 32

பாடல்: 32 விளக்கவுரை;— யோக மார்க்கத்திலே படிகளைக் கடந்து ஞான நிலையை எட்டுவதற்கு சிலேத்துமம் பெரும் தடையாக உள்ளது என்பதால் எம்முடைய நூலில் பல இடங்களில் சிலேத்துமத்தைப் பற்றியும் அதைப் போக்கும் முறைகளைப் பற்றியும் விரிவாக கூறியுள்ளேன்.

அதாவது நாக்குக்கு மேல் உள்ளது அண்ணாக்கு. (இதைத் தான் உண்ணாமுலை என குறிப்பிடுவார்கள்) உண்ணாக்கிலிருந்து புருவமத்திக்கு ஒரு பாதையுண்டு. (இதைத் தான் மயிர்பாலம் என்றும், ஊசிமுனைப் பாதை என்றும், அறிஞர் செல்லும் வழியென்றும், மேருவுக்கு செல்லும் வழி என்றும் கைலாயம் செல்லும் பாதை என்றும் குறிப்பிடுவர்) இந்த உண்ணாக்கு மேலே உள்ள மெல்லிய ஜவ்வால் அடைக்கப்பட்டுள்ளது. இது கோழை யால் அடைப்பட்டிருக்கும். குருநாதர் காட்டிய முறைப்படி

அபான, பிராணனைச் சேர்த்து நினைவால் அண்ணாக்கின் மேலே ஊத ஊத இவ்வடைபட்ட வாசலானது மெல்ல மெல்லத் திறக்கும், இவ்வாறு நினைவால் தமரிட (DRILLING) உச்சி வாசலின் வழி திறக்கும் (சாரப்பா மனத்தினையும் அண்ணாக்கின் நேரே சார்ந்து மிகப் பார்க்கையிலே வாசி தான் மேலடங்கும்— புசண்டர் ஞானம் 100) இப்படி வாசல் திறக்கின்ற போது நினைவால் உண்ணாக்குள் ஊத மூக்கு மேற்தண்டில் முனை மூக்குக்குள் (புருவ மத்தியில், லலாடத்தில்) சுழன்று உற்பத்தியாகின்ற வாசியின் நிலை அனுபவத்தில் உணர்ந்து தெரியும், பின்பு இவ்வழியாக வாசியை நினைவோடு மேல் நோக்கி ஊத சூழுமுனையில் சொக்காமல் அறிவு ஒளியை ஞான ஜோதியை தரிசனம் செய்யலாம். இதைப் பார்த்தவரே சொர்க்க வாசல் திறந்தவராவர். இவரே பூட்டை (ரகசிய வழி அடைப்பை) உடைத்து வென்றவராவர்.

## அமுர்தம்

பூட்டுடைத்துக் கண்டவர்கள் மெத்தவுண்டு
புத்தியுள்ளோ ரவர்களே சித்தர்சித்தர்
ஆட்டமிதிற் காண்பார்கள் அனேகங்காட்சி
அம்மம்மா வென்றார்கள் சுத்தவீரர்
காட்டம்விற கெய்தாமற் தீயிடாமல்
கதிர்மதிக்கு மத்தியது புருவமத்தி
நாட்டமிடக் கோபுரத்தின் வாசற்பூட்டு
நாசிமுனை புருவமத்தி திறந்துகொள்ளே.

பாடல்: 33

பாடல்: 33 விளக்கவுரை:— புருவமத்தியிலே ஒளி அனுபவம் (ஜீவ ஒளி) கிடைத்த போதும் தினசரி முறைப் படி பயிற்சி செய்து வரவேண்டும். பாபச் செயல்களைப் புரிகின்றபோது சுவாச ஓட்டம் தாறுமாறாக ஓடி பிராணனை வீணாக நசிக்கச் செய்யும். பிராண நட்டம்

ஏற்படும் போது மனது பாதிக்கப்படுவதோடு மட்டுமல்லாமல் உடல் நிலையையும் கெடுத்து ஒளி நிலையை மங்கச் செய்யும். உதாரணமாக கோபம் உறுகின்ற போதும், காமம் ஏற்படும் போதும், திருட்டுத்தனங்களைச் செய்யும் போதும், தவறு செய்யும் போதும் இதயம் வேக வேகமாக படபடக்கும். அப்போதும் சுவாச நஷ்டம் மூக்கின் வழியாக அதிகமாக இருக்கும். (இதையே தீயவழி நடவாதே மூக்கின் மார்க்கம் என குறிப்பிடுகின்றார்கள்.)

வேகமாக ஓடும்போதும், முறையற்ற உறக்கத்தினாலும் கடின வேலையாலும் சுவாச நஷ்டம் அதிகம் உண்டாகும். இதைப் பற்றி தெளிவாக பின்னால் விளக்கப்படும்.

நல்ல செயல்களை செய்யும்போதும், பிறரிடம், பிற உயிர்களிடம் இயல்பாக அன்பு காட்டும் போதும், தியானம் செய்யும் போதும், பிறருக்கு உதவும் போதும், மனமுருக இறைவன் புகழைப் பாடி பரவும் போதும், மெய் அடியார்களோடு சத்விசாரம் செய்யும் போதும், சாதுக்கள், சித்தர்களை தரிசனம் செய்யும் போதும், அன்னதானப்பணி செய்யும் போதும் சுவாச ஓட்டம் ஒழுங்காக அமைகிறது. சில நேரங்களில் சுவாச அங்குலம் குறைந்து இறை அனுபவங்களும், அதிசயங்களும் நடப்பது உண்டு. ஆகஇத்தகைய நல்ல செயல்களை செய்ய வேண்டும். இதன் விபரமும் பின்னால் கூறப்படும், இவ்வாறு புண்ணிய காரியங்களைச் செய்து பாவகாரியங்களை நீக்கி தவத்தை ஒழுங்காக செய்தால் சுவாசம் உதித்த இடத்திலேயே ஒடுங்கும். மன அமைதியும், அடக்கமும், கூட வாய்க்கும் போது உச்சி குளிர்ந்து அமிர்தமானது கீழிறங்கும் நல்ல செயல்களைப் புரிந்து ஒழுக்கமாக வாழ்கின்ற போது உச்சியில் உள்ள கோழையானது (மன ஒருமையால், மன உருக்கத்தால்) ஞான அனலால், இரசாயன கிரியையால் அமுதமாக்கப்பட்டு உள் நாக்கின் வழியே கீழிறங்கும். (நவ பாஷாணம் நவகல்பம் ஆக்கப்படுவது போல்) இதையே

அமுரி என்றும், குடல்நீர் என்றும், சுத்த சலம் என்றும் குமரியின் அமுரி என்றும் பரிபாஷையாக குறிப்பிடுகின்றார்கள். இது நல்ஒழுக்கத்தார்க்கே சாதகமாகும்.

இவ்வாறு பூட்டாகிய ரகசிய வழியை உடைத்துக் கண்டவர்கள் அநேகம் கோடி. இருந்த போதிலும் இவ் யோகத்தை தவறாமல் தினசரி செய்கின்ற போதுதான் சுழுமுனையில் சொக்காமல் கரையேற முடியும். அப்படிக் கரையேறியவர்கள் தான் சித்தர் கூட்டத்தில் ஒருவராவர். அவ்வாறு ஒரு மெய் ஞான நிலையை, அறிவுக்கு அப்பாற்பட்ட வஸ்துவை அடைந்து உணர்ந்து தானே அதுவாகாமல் சுழுமுனையனுபவத்தில் ஏற்படும் சிறு ஒளி அனுபவத்திலே திருப்தியடைந்து, அதையே சிறந்த நிலையாகக் கருதி தூங்காத தூக்க நிலையாகக் கருதி (மனமடங்கிய நிலை), இங்கே ஏற்படும் சில காட்சி அனுபவங்களால் ஏமாந்தவர் எத்தனையோ கோடி. இவ்வாறு இதில் மயங்காமல் மேற்படிகளில் அனுபவம் அடைபவர்கள் தான் சுத்த வீரர். மேல்நிலை அனுபவத்தில் தானே அந்நிலை (ஆயிரங் கோடி சூரிய பிரகாச) யை அடைந்த போதுதான் மரணத்தை வெல்ல முடியும். அப்போதுதான் ஆன்ம ஒளி என்றும் பிரகாசித்து நிலை குறையாமல் வளர்ந்து ஓங்கி அருட்பெருஞ்ஜோதியாகும். இந்நிலையிலேதான் மேற்கொண்டு -பயிற்சியோ, சாதனையோ, முயற்சியோ இல்லாமல் ஞான தேகமானது கிடைத்து நிலைத்து சூரிய சந்திர கலைக்கு நடுவே சுழுமுனைக்கு மேலே கபாலத்தின் நடுவே இப்பிரகாசம் ஒளி வீசி அனைத்தும் தானாகி நிற்கும் (இதையே காட்டம் விறகெய்தாமல் - எனக் குறிப்பிடுகின்றார்கள்.)

ஆக புருவ மத்தியிலே தெரியும் ஞான ஒளியில் நாட்டமாயிருந்து பயின்று வர இவ்வனுபவம் சித்திக்கும்.

(கண்களிக்க புகை சிறிதும் காட்டாதே - புருவக் கலை நடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே - வள்ளல் பெருமான்.)

## தினமோர் காலம் சாதனை

திறந்துகொண்டு மேலேற நெற்றிமார்க்கம்
தீயவழி நடவாதே மூக்கின்மார்க்கம்
மறந்துவிட லாகாது தினமோர்காலம்
வாய்பிதற்ற லாகாது அடக்கமாகில்
கறந்துவிழும் பாலமுர்தம் மனதிற்றானே
தூங்கினவர் போலிருக்கு மேங்கிடாதே
கறந்துகொள்ளச் சொன்னாரே மற்றோர்வீட்டிற்
கால்வைக்க சொல்லவில்லை யுள்ளேதானே.
பாடல் : 34

பாடல் 34 விளக்கவுரை:— அவ்வாறு முறையாக தவத்தை இயற்றாமல், அல்லது ஒழுக்க நெறி முறைகளைக் கடைப்பிடிக்காமல் தவம் இயற்றும் போது உண்ணாக்கின் வழியாக, இரசாயன மாற்றமடையாத கோழைதான் இறங்கும் இக்கோழையை விழுங்கி வயிற்றுக்குள் செல்லும் போது பல நோய்களுக்கு இதுவே காரணமாய் அமைந்து விடும். ஆக ஒழுங்குகளை கடைபிடிக்காத போது பித்த நீராக கோழை இறங்கி உறக்கத்தையுண்டுபண்ணி தவநிலையில் தடையை நிரந்தரமாக ஏற்படுத்தி விடும்.

ஆக முறையாக தவத்தை இயற்றி ஒழுக்க நெறிகளை வழுவாது கடைப்பிடித்து அமிர்தத்தை கறந்து உண்டு உடல் நோயைப் போக்கி, காயத்தினை சித்தியாக்கி அறிவை விசாலமாக பெற்றுக்கொள். (முறை தவறிடாதே, ஒழுங்குகளை ஒழுக்கங்களை கைவிட்டிடாதே என்பதைத்தான் மற்றோர் வீட்டில் கால் வைக்கச் சொல்லவில்லை.

உள்ளேதானே – என குறிப்பிடுகின்றார்கள்) இவ்வமுதத்திற்கு கள் என்றும் பெயர், வெளியே கிடைக்கும் கள், மது போதையை யுண்டுபண்ணி மயக்கத்தை, மருளைக் கொடுக்கும். இந்த அமுத மதுவோ உள் மயக்கத்தை நீக்கிடும். அறியாமையை நீக்கிடும், இறவா நிலையைத் தரும். (கள்ளுண்டார்......... என்றுமிறவா நிலையிலிருந்துங்கள், உள்ளுண்ட போது மயக்குற்றிடும் கள்ளலவே உள் மயக்கனைத்தினையும் ஒழித்திடும் கள், அனுபவ மாலை வள்ளல் பெருமான்) இவ்வாறு முறையான தவமியற்றுகின்றபோது தவத்திலே அமர்வதற்கு முன்பாக இறைவனின் பெருமைகளையும் நமது குறைகளையும் நினைத்து, உணர்ந்து பாடிப் பரவி பின்பு அதே மன உருக்கத்தோடு தவத்தில் அமர்ந்தால் காணாததைக் கண்டு கொள்ளலாம்.

இதையே வள்ளல் பெருமானார் 'அகவலில் உளவனிலறிந்தாலொழிய மற்றளக்கின் அளவினிலளவா வருட் பெருஞ்ஜோதி' என குறிப்பிடுகின்றார்கள். இவ்வாறல்லாது அடயோகம் பயின்றால் எல்லோருக்கும் சித்தியை, வெற்றியைத் தராது.

''பாரப்பா நாக்கையுந்தான் அண்ணாக்கேற்றி
பார்த்தனிலே பார்த்தவர்க்கு பலிதமில்லை
ஆரப்பா கண் வெடிக்கும் தேகம்போகும்
அடயோகம் என்பார்கள் ஆகாதப்பா''

— காகபுசண்டர் ஞானம் 100.

உள்ளேதான் பாலமுர்தம் வடியுமென்பார்
உண்டஅன்னம் பசியடக்கும் வாரதாகும்
தெள்ளினே னிதுவிபரந் தெரிந்துகொள்ளு
தெளியாட்டால் யான்சொன்ன சூட்சம்பாரு
கள்ளேதான் வடியுமென்பார் உச்சிவாசல்
கட்டறுத்தா லேகோழை வடியுமல்லோ
பிள்ளைகா ளிதுவறியார் மட்டியாகும்
பேசினார் யானறுத்து மேற்சென்றேனே.

பாடல் : 35

பாடல் 35 விளக்கவுரை : இந்த பாலமிர்தம் வடியும் போது நோயை நீக்குவது மட்டுமல்லாமல் பசியையும் அடக்கும். மன அடக்கம், சாந்தம், நிறைவு, தன்னம் பிக்கை, மெய்யறிவு இவற்றினையும் ஏற்படுத்தும். இதன் விபரங்களைத் தெரிந்துகொள். அதாவது சன்மார்க்கம் என்பது இறைவனின் (சத்) மார்க்கம். உண்மையான மார்க்கம் சுத்த என்பது சமயங்களில் முடிந்த நிலையில் இறைவனின் இயல்பை அனுபவத்தால் உணர்ந்து வேற்றுமைகளை நீக்கி அன்பு அனுபவம் ஏற்படுவது, சமரச என்பது சூரிய, சந்திர கலைகள் பரிபக்குவமாகி உதித்த இடத்திலே யொடுங்கி சுழுமுனை அனுபவத்தில் கலைகளைக் கடந்த அறிவு நிலையை அடைவதைக் குறிப்பது. சத்தியசங்கம், மெய்யறிவை, அறிவுநிலையை அடைந்த வுடன் சிந்தனையும், செயலும் அறிவுப்பூர்வமாக இயற்கை அன்பு நிறைந்ததாய், இறையின் நிலையில் இயற்றுவதாய் இருக்கும். இப்படிப்பட்ட உயர்ந்த மெய்யறிவு நிலையத் தையே சத்தியசங்கம் எனக் குறிப்பிடப்படுகின்றது. இத் தகையாளர்களுக்கு அமுதம் எக்காலத்தும் ஏதுவானதாக இருக்கும். இதுவே தருமச்சாலை. இந்நிலையடைந்தோர்ப அன்போடு ஞானக்கருத்துக்களை உண்மை அனுபவங்களை உலகுக்கு தருமச்சாலையைப் போல் அறிவு உணவை ஊட்டியவண்ணம் இருப்பர். இதற்கு பிரமாணம் (பொய் பிடித்தார் எல்லாரும்) ஐயமுற்றார் எல்லாம்........காலை யிலே.............. வள்ளல் பெருமானார் பாடல்

சுத்தசன்மார்க்க சுகநிலை தனிலெனைச்
சத்தியனாக்கிய தனிச்சிவ பதியே. அகவல் - 1902

இவ்வாறு மெய் நிலையிலே நின்று தவம் செய்தால் எமன் என்று சொல்லும்படியான கோழையானது முற்றிலும் நீங்கும். இவ்வாறு அறிந்து நீக்கியவர்களே எனது பிள்ளைகள். இதைத் தெரிந்தும் அனுபவத்தில் உணராதவர்கள் மட்டிகள் என குறிப்பிடுகின்றார்.

# குண்டலி விபரம்

வில்லங்க மதுகடக்க முடியாதப்பா
விதிவிலக்கு அன்னசுவை கொடியபட்டினி
சொல்பங்க மாகாது தூக்கமாகா
துரும்புபோ லேயிருக்குஞ் சதையேமாறும்
நெல்லங்கம் போல்வெளுக்கும் கண்ணோகூசும்
நிமிஷத்திற் பித்தநீர் படியிறங்கும்
மல்லங்க மானதுபோல் விதவைகற்பம்
மரணத்துக் கொப்பான துன்பந்தானே.

பாடல் : 45

பாடல் 45 விளக்கவுரை : குருநாதரால் தொட்டுக் காட்டப்பட்டு முறையாக இத்தவத்தினை, ஒழுக்கங்களை கடைபிடித்து புருவமத்தி ஒளியனுபவம் ஏற்பட்டு வர வர நாளடைவில் உடலில் பல மாற்றங்கள் ஏற்படும். இது உடலை சுத்தம் செய்யவும், மேல் நிலைக்கேற்றவும் நடக்கும் இரசாயன கிரியை போன்ற செயலாகும். (பொன்னைச் சுட்டு மாற்று பெறுவது போல)

இந்த மாற்றங்கள் ஏற்படும்போது திட நம்பிக்கையும் குரு நம்பிக்கையும் தெய்வ பக்தியும், நிறைந்திருக்க வேண்டும். இச்சமயத்தில் பலவிதமான கிலேசங்கள் ஏற்படும். சர்வ சாக்கிரதையாக இருக்க வேண்டும். இதையே 'வில்லங்கமது கடக்க முடியாதப்பா' எனக் குறிப் பிடுகின்றார்கள். இதைக் கடக்க இக்குற்றத்தை மாற்ற வாய்மையைக் கடைபிடித்து அதிகமாக உண்ணாமல் ருசி பார்க்காமல், குறிப்பிட்ட உணவுகளை (இதன் விபரம் உணவு முறைகள் என்ற தலைப்பினில் பின் வெளிவரும்) அளவோடு உண்டு, பட்டினி நீக்கி சோம்பல், அதிக உறக்கத்தை நீக்கி ஒரு நாளைக்கு அதிக பட்சம் இரண்டு

மணி நேரமே தூங்கவும் பழகி வரவேண்டும். கால், கைகள், உடல்வலி எடுக்கும். சதையும் மாறும், அங்கமானது வெளுக்கும். உடல் இளைக்கும். அதிக உஷ்ணத்தினால் கண்கூசும். பித்த நீரானது நிறைய இறங்கும். இதைக் காரித் துப்பிட வேண்டும் சிறுநீரிலும் கலந்து வெளியேறும். கர்ப்பமுற்றவர்களுக்கு ஏற்படும் பிரசவ வேதனையை விட கொடிய துன்பம், வலி ஏற்படும்.

துன்பந்தான் குண்டலிதான் நாலுங்காலம்
துயரென்ன வயற்வலிக்கும் பிரண்டுருண்டு
இன்பந்தான் தொப்புள்நீ ரிறங்கிற்றானால்
இதுபெரிதோ மார்பில்வருங் குண்டலித்தாய்
அன்பந்தான் நமதழுக்கே நெஞ்சிலேறி
அதுநஞ்சு தாண்டிவிடுந் தொண்டையேறி
துன்பந்தான் போய்த்தொலையும் வாருபோல
தும்பிக்கை நீட்டிவிடும் உச்சிமேலே.

பாடல் : 46

பாடல் 46 உந்திக் கமலத்தில் ஏற்படும் சுத்தாக்கினியால் வெப்ப மிகுதியின் காரணயாக வயிற்றுவலி அதிகமாக ஏற்படும். வயிற்றைப் பிரட்டும், வாசியுணர்வானது வயிற்றையும் நெஞ்சையும் சுற்றிச் சுற்றிப் பிரண்டுருண்டு ஓடுவது போல் இருக்கும்

நெஞ்சின் நடு பள்ளத்திலே துடிப்பு மிகுந்து காணும். தாயின் வயிற்றினில் இருந்து வெளிவரும்போது உயிரானது கர்ப்பக் தொப்புள் கொடியின் வழியாக வந்தடைகிறது குடநீரில் இருந்த கசடும் தொப்புளின் உட்சவ்வில் படிந்திருக்கும். இவ்வாறு நெஞ்சின் நடு பள்ளத்தின் துடிப்பு மிகுந்து காணப்படும் போது உந்திக் கமலத்தில் ஏற்படும் சுத்தாக்கினியால் தொப்புளின் உட்பகுதியில் படிந்திருக்கும் கசடானது நீர்த்து சிறு நீரகத்தால் பிரிக்கப்பட்டு விந்து போன்ற நிறத்திலே சிறுநீருடன் கலந்து வெளியேறும்.

இவ்வாறு ஏற்படும்போது துடிப்பு மேல் நோக்கி தொண்டைக்கு ஏறும். உள்ளே அழுக்காக உள்ள அபான வாயு மாற்றம் அடைந்து (ஏற்கனவே மேலேற்றிய பயிற்சியால்) உச்சியில் சென்று அடங்கும். இவ்வாறு இது மேலேயடங்கும், பிறப்பு இறப்பு முடிச்சை அவிழ்க்கும். உடலில் ஏற்பட்ட துன்பங்கள் மாறி ஆனந்தமும், நோயற்ற ஆரோக்கியமான உடலும் அமையும்.

இல்வனுபவத்தையே கலப்புத் திரையனுபவம், என வள்ளல் பெருமான் குறிப்பிடுகின்றார்கள். அதாவது உச்சியில் சென்று ஒடுங்கும் போது தவ அனுபவத்தில் ஐவண்ணமாகிய ஜோதி தெரியும். இதையே மாணிக்க வாசகப் பெருமான் சிவபுராணத்தில் "நிறங்கள் ஓர் ஐந்துடையாய் விண்ணோர்களேத்த" என்று குறிக்கின் றார்கள். இராமலிங்க வள்வல் பெருமானும் ஐவண்ணமுங் கொண்ட அற்புத பாதம்.

'அபயரெல்லார்க்கும் அமுதான பாதம்' என குறிக்கின்றார்கள்.

உச்சிமேல் கைகாட்டும் பொங்கிச்சாயும்
உறுமுகிடாய் திருகுகொம்பு போலத்தானே
எச்சியே தான்விசிறும் உச்சிமூக்கால்
யிடதுகையைப் பத்தியவள் எதிர்நிற்பாள்காண்
குச்சியே குண்டலித்தா யதனில்நிற்பான்
கொடுங்குமரி வர்ணமதை யென்னசொல்வேன்
பச்சியே கேட்டதெல்லா மிந்தாவென்பாள்
பார்க்கவே கன்னிசிறு ரூபமாமே.

பாடல் : 47.

பாடல் 47 விளக்கவுரை: இவ்வனுபவம் ஏற்படும் போது உச்சியில் ஐவண்ணமாகிய ஜோதி தெரியும். அமுதமானது சுழுமுனா கமலத்தின் பகுதியிலும், மூலையைச் சுற்றியும் ஆறு ஓடுவது போல உணர்வு ஏற்பட்டு, ஸ்தூல உடல், சூட்சும உடல், காரிய உடல் நிலைகளைப் புரிய

வைக்கும் ஜீவ ஒளி அனுபவத்தில் இங்ஙனம் ஏற்படும். இந்நிலையில் சந்திரகலையில் அனுபவத்தில் கொண்டு வந்து நிறுத்திப் பழக, காரண உடம்பு பத்து வயதுப் பெண்ணாக உருவெடுத்து எதிரே நிற்கும். இவ்வன்னையே குண்டலித் தாய் என்றும், வாலைத்தாய் என்றும் வாலை-யம்பிகை என்றும், பத்து வயதுடையாள் என்றும், சிறு கன்னியென்றும், சித்தர்களின் தாய் என்றும், போற்றப் படுகின்றாள். அவளுடைய அழகுக்கு ஈடான ஓர் அழகை உலகிலே உவமையாய் கூற இயலாது. நாம் எது கேட்ட போதும் இமைப் பொழுதில் கொடுப்பாள். ஞானத்தை ஊட்டி வளர்ப்பாள். பார்க்க சிறு பெண்ணாக இருந்தாலும் இவள் பெருமையை யாராலும் கூற இயலாது. எந்நேரமும் உறக்கத்திலும், கனவிலும் கூட துணையாக அமர்ந்திருப்பாள்.

## வாலை

ரூபமே நாமமே ரூபாரூபம்
நுவலுகிறேன் வாலையென்றும் வெளியேயென்றும்
நாமமே கன்னியென்றும் மந்திரமென்றும்
நவிலுஞ்சொல் மொழியென்றும் கற்பமென்றும்
காமமே யிச்சையென்று மனதேயென்றும்
கண்டவர்கள் சத்திசிவ மாய்கையென்றும்
நாமமே வாசிபர தேசிபிர்மம்
நாடியுதித் தொடுங்குமிட மறிந்துபாரே.

பாடல் 48.

பாடல் 48 விளக்கவுரை : காரண உடம்பிலிருந்து மகா காரண உடம்பொளியால் உருவெடுத்த ஒளிப்பிழம்பே இவ்வன்னை வாலையம்பிகை பலவித தெய்வங்களாக சித்தர்கள், ரிஷிகள், முனிகள், நாதாக்கள் வடிவமைத்து வழிபட்டது இவ்வாலாம்பிகையைத்தான். பல ரூபங்களில் வழிபட்டாலும் இந்நிலையடைந்தவர்களுக்கு நினைத்த

உருவில் வந்து இவ்வன்னை அருள் செய்வாள். ஏகவெளி (முப்பாழ் கடந்த நிலை அதாவது இருள் பாழ்—முதல் திரையனுபவம், ஒளிபாழ் ஐந்தாம் திரையனுபவம்) அனுபவம் இவளையே இவ்வாறு குறிப்பிடப்படுகின்றது. பலவித பெயர்கள் சூட்டி தெய்வமாக பலரும் கொண்டாடி அருள் பெறுவதும் இவளால் தான். மந்திரம் ஜெபிக்கும் போது, பிராணன் அம்மந்திரத்தில் நிலைத்து சித்தியாவதும், இந்த அன்னையால் தான். ஆக மந்திர (மூன்றெழுத்து மந்திரம், முக்கோண பீடம்) சித்தி முடிவில் அருள்வதும், மந்திர அந்தமும் இவளே, காமமாக உருவகமாவதும், காமத்தை அடக்கி முடிவிலே கருணை வடிவாக அருள் பவளும் இந்த அன்னை தான். சக்தியின் வடிவமாக இருப் பவளும் இவள் தான். மாயையை உண்டு பண்ணி மாயா சக்தியாக இருப்பவளும் இவள் தான். வாசியானது லயமாகி, நாடியானது உதிக்கின்ற இடத்தையும் அறிந்து (அந்த) அது ஒடுக்குகின்றவர்களுக்கும் தான் இவ்வுண்மை புரியும், அனுபவத்தில் புரியும், மற்றவர்கள் இதை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள், புரிந்து கொள்ள முடியாது.

அன்னை வாலையம்பிகையின் அருளை முழுதாய் பெற்றவர்கள் தான் நாதாக்களும், சித்தர்களும், ஞானியும் ஆவர்.

இடமறிந்தோ ரித்தனையுங் காணவேணும்
இல்லறத்தி லிருந்தாலும் பூணவேணும்
சடமென்ன குடிசையென்ன மடந்தானென்ன
தாதுநிலை கண்டாலாச் சிரமமென்ன
குடமென்ன நீர்நிறைந்தாப் போலேவாசி
குண்டலியைக் காணார்க்கு மாயமாகும்
தடமென்ன யிதையறிந்தால் வழியதாகும்
சத்திசிவ மால்காமி யறியலாமே.

பாடல் 49.

பாடல் 49 விளக்கவுரை : இவ்வாறு நாடியானது உதிக்கும், யொடுங்கும் இடத்தை அறிந்தவர்கள் தவ அனுபவத்தில் குருவருளால் அன்னை வாலையம்பிகையின் தரிசனத்தைப் பெற வேண்டும் இந்நிலையை அடைவதற்கு காடு, மலைகளில் சென்று தவம் செய்ய வேண்டியதில்லை. ஒதுங்கி வாழ வேண்டியதில்லை, துறவறம் பூண வேண்டியதில்லை, காம இச்சையை பேராசையை அடக்கி,முறை தவறாமல் தவம் இயற்றி ஒழுக்கங்களை கடைபிடித்து வந்தால் இல்லறத்தில் இருப்பவரும் இந்நிலையை அடையலாம், தாதுநிலை என்று சொல்லும்படியான. ஆசையுண்டாகுமிடம், மனம் உதிக்கும் இடம் இவற்றை அறிந்து கொண்டால் உறக்கம் எங்கிருந்து வருகின்றது, என்பதை அறிந்து கொண்டால் தவத்தினை முறையாக இயற்றினால் இல்லறத்தாருக்கும் இந்நிலை சாதகமாகும்.

பிராணனானது நிறைந்து நிலையடைந்து குண்டலியைக் கண்டு கைவல்யமாகாதவர்க்கு இந்நிலை கனவு போலத்தான் இருக்கும். இது ஒரு மாயம் போல் தோன்றும்.

வழியை அறிந்தவர்களுக்கு சக்தியாகவும், மாயாசக்தியாகவும் உருவெடுப்பதும் இவள் தான் என்பது தெரியும். மற்றவர்க்கு அறிய முடியாது.

கலக்கமு மச்சமுங் கடிந்தென துளத்தே
அலக்கணுந் தவிர்த்தருளன்புடைத் தாயே
'சித்திக ளெல்லாம் தெளிந்திட வெனக்கே
சக்தியை யளித்த தயவுடைத் தாயே'
தன்னிகரில்லாத் தலைவனைக் காட்டியே
என்னை மேலேற்றிய இனிய நற்றாயே'
'எண்ணகத் தொடு புறத்தென்னை யெஞ்ஞான்றுங்

கண்ணெனக் காக்குங் கருணை நற்றாயே'
'தூக்கமுஞ் சோம்புமென்றுன் பழு மச்சமும்
ஏச்கமு நீக்கிய வென்றனித் தாயே'

— அருட்பெருஞ்ஜோதி அகவல்
— வள்ளல் பெருமான்

## அமுர்த விபரம்

அறியலாம் லட்சுமியாள் புத்திரனோடு
அவர்மனைவி யச்சரமுங் கூறலாகும்
புரியலா மண்ணாக்கி லமுர்தவாசல்
புண்திறந்து வாசல்கண்டு ஒளியலாகும்
தரியெலா மச்சரத்தி னாதியந்தம்
தேறலாம் அண்டமதில் அஷ்டலாபம்
புரியலா மஷ்டாவ தானங்கோஷ்டி
பூரிக்கு முள்ளமுர்தம் பொங்கும்நெஞ்சில்

பாடல்: 50

பாடல்: 50 விளக்கவுரை :— குண்டலியைக் கண்டு முறையாக அனுபவித்து உணரும்போது பிரம்மா என்று சொல்லும்படியான மனதானது கைவசப்படும். அப்படி மனம் கைவசமாகி, அம்மனதினை சரஸ்வதியின் இருப்பிடம் என்று சொல்லப்படுகின்ற அண்ணாக்கில் நிலைநாட்டி நிறுத்தும்போது குண்டலினியின் ஒளி அசைவு ஒலியோடு கூடி கூறாத அட்சர ஓசையினை காது தெளிவுபட உணர உரைக்கும். செம்மையான மனமானது சகலமானவற்றையும் சிறப்பாக செய்யவல்லது என்பதை உணர்த்தவே லட்சுமி யாள் புத்திரன்' என குறிப்பிட்டார். இப்படி இங்கே உணர்ந்த அட்சரத்தை முறையாக ஜெபிக்க சுத்தாக்கினி யின் விளைவால் அண்ணாக்கின் மேல் உள்ள அமுர்தவாசல்

அடைப்பானது நீங்கி, மயிர்ப்பால வாசல் விரிவாகத் தெரிந்து ஒளியனுபவம் கிடைக்கும். இந்த ஆன்ம ஒளியனுப வத்தின் சிறப்பு, ரகசியம் என்னவென்றால் இங்கு கிடைக்கும் ஒளியனுபவ சக்தியை, ஒளியை ஓரிடத்தில் நிலை நிறுத்தி அல்லது பஞ்ச புலன்களோடு இணைத்து மனித செயலுக்கும் மனித இயல்புக்கும் அப்பாற்பட்ட செயல்களையும், சுலபமாக செம்மையாகச் செய்யலாம். இவ்வொளியை ஓர் இடத்தில் நிறுத்தி கண்களின் உள்ளொளிக்குள் நிலைநிறுத்தி, பார்வை சக்தியின் மூலமாக வெளிக்கொணர்ந்து மருத்துவத்தால் தீர்க்க இயலாத நோய் களையும் இவ்வொளியின் வெளிப்பாட்டால் குணப்படுத்த லாம். ஆகையால் இந்நிலையால் ஒளியின் மூலத்தையும் அதனது ஆதி அந்தம் அதாவது தோற்றம் மற்றும் முடிவை யும் உணரலாம். அமிர்தமானது பொங்கி சொல்லரிய ஆனந்தத்தையும் தரும்.

செம்மையான மனமானது அண்ணாக்கின் உச்சியினை நாட வேண்டியதுதான் இயல்பு. ஆகவே இங்கு செம்மை யுற்ற மனதினை பிரம்மா என்றும், அண்ணாக்கு உச்சியை அவர் மனைவி என்றும் குறிப்பிட்டார்.

நெஞ்சிலெழு தோற்றமதை யென்னசொல்வேன்
நிகழ்காலம் வருங்காலம் செல்காலத்தே
துஞ்சிலேன் நானிருந்து பார்த்துமஞ்சேன்
துயருற்றோர் பாலிருக்குந் துயரேசேர்வான்
மிஞ்சிலேன் பரமின்றிப் பிரியேன்சேரேன்
மெய்மெலிந்த என்துயரே சகமேமிச்சம்
அஞ்சிலே யானிருந்து பார்த்தபார்வை
அப்படியே ஆரிட்ட சாபந்தானோ.

பாடல் 51

பாடல் 51 விளக்கவுரை:— அமிர்தமானது பொங்கி ஆனந்த மேலீட்டால் நெஞ்சின் நடுப்பள்ளத்தில் (மார்புக்கு

கீழே விலா எலும்புகள் சேரும் மத்திய பகுதிக்கு உள்ளே) இதயத் துடிப்பினை போன்று துடிப்பு விட்டு விட்டு ஏற்படும். இத்துடிப்பிலே (ஒலியில்) மனதினை நிலை நாட்ட கடந்த காலத்தில் நடந்தவைகளையும், தற்போது நடப்பவைகளையும், எதிர்காலத்தில் நடக்க இருப்பதையும் தெளிவாக உணரும்படியாகச் சொல்லும். அப்படி அறிகின்ற போது எதிர்காலத்தில் நமக்குஏற்படும் இடர்ப்பாடுகளையும் தெரிவிக்கின்றபோது அதைப் பற்றிய அச்சமோ, கவலையோ ஏற்படுவதில்லை. ஏனென்றால் எல்லாவற்றை யும் வென்று சாகா நிலையை அடைய முடியும் என்ற அனுபவ பூர்வமான நம்பிக்கை இந்த இடத்தில் ஏற்படும் (இவ்விடத்தில் அனுபவத்தை உணரும் போது மரணத்தின் நிலை அறிந்து அதை வெல்லும் அனுபவமும் ஏற்படும். இதன் விரிவு பின்பு கூறப்படும்,)

இவ்வனுபவம் அடைந்ததற்குப் பிறகு எப்போதும் இறைவன் உடன் இருக்கும் அனுபவம் கிடைக்கும்.

இவ்வனுபவம் முழுவதுமாக சித்தியாகும்போது இறையுணர்வு நாட்டம் மாத்திரமே இருக்கும். மனமானது வேறொன்றையும் நாடாது. மனமானது புலன்களோடு சேர்ந்தவுடனே நினைத்ததை நொடியில் செய்யும். ஆகவே இப்நிலையையடையும்போது சர்வ ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும்.

ஆனோர்கள் சொல்லெல்லாம் வீண்போகாது
அண்டயிடி தடுப்பதற்கும் அவர்தானாகும்
மானார்க ளில்இவரே யெமனைவென்றோர்
வாய்ப்பிதற்றார் வாய்ப்பிதற்றில் குற்றமாகும்
வானோர்கள் நோக்கிடிலோ யெதிரேசெல்வார்
வானோர்க்குத் தானவரும் யிதன்மேலாகார்
மீனோர்கள் கூட்டமதில் பெரிதாம்ஞாயிற்
வெண்மதியும் பொன்மதியு மெட்டாதுபாரே.

பாடல் 52

பாடல் 52 விளக்கவுரை:— இதைப்பற்றி நான்சொல்லி யிருக்கும் படியான விளக்கங்கள் வீண்போகாது. அதாவது பொய்க்காது. நெஞ்சு நடுபள்ளத்திலே ஏற்படும் அனுபவ முடிவில் குண்டலி சக்தியானது அதிவேகமாகச் சென்று உச்சியில் உள்ள அக ஒளியில் சேரும். அப்போது இடி இடிப்பதைப் போன்று உணர்வு ஏற்படும். அப்போது ஒளியும் ஒலியும் கலந்து தோன்றும். கூடவே வாதனையும் ஏற்படும். குருநாதர் உபதேசித்தபடி முக்கோண அட்சரத்தில் நாட்டம் வைக்க இவ்வாதனையில் இருந்து தப்பலாம். இத்தகையோரே எமனை வென்றவர், என்றும் இருப்பவர்.

இந்நிலை அனுபவத்தில் இருக்கும்போது தனித்திருந்து வாயும், மனமும் மௌனத்தில் இருந்தால் உன்னத நிலைகளை அடையலாம். சூட்சமமாக உள்ள தேவர்களை இருந்த இடத்திலிருந்தே பார்க்கலாம். அண்ட சராசரங்களை இருந்த இடத்தில் இருந்தவாறே நோக்கலாம், இயக்கலாம், இந்நிலையானது வானுலகத்தில் வாழ்பவருக்கும் இயலாத, கிட்டாத நிலையாகும், நட்சத்திரங்கள், சூரிய சந்திர ஒளிக்கிரணங்கள் தொடாத, எட்டாத இடங்களையும் இமைப்பொழுதில் நாம் சென்று இந்நிலையில் இருந்தவாறே பார்க்கலாம். ஆக இந்நிலையில் குருவருளால் எல்லாவற்றையும் விபரமாகத் தெரிந்துகொள். (நம்முடைய ஞான சித்தர் மார்க்கத்தில் ஏழாவது உபதேசத்தில் இந்நிலை காட்டப்படுகின்றது.)

## உட்கருவு

தானேதா னுடலுயிரும் ரெண்டிருக்க
தாங்குமுடல் நின்றிவிடு முயிர்தான்சீவன்
வீணேதா னுடலெடுக்கப் பிறவியாச்சு
மெய்யெடுக்கக் காரணமே யிதுதானாகும்

ஆணேநீ யானாற்குண் டலியைப்பாரு
அம்மியுடல் தேய்ந்ததுபார் குழவியாலே
காணேநீ யவ்விரண்டுந் தேய்ந்ததல்லால்
கல்மனமுந் தன்னினைவாற் தேய்ந்துபோமே.
பாடல் 55.

பாடல் 55 விளக்கவுரை:— உடலும் உயிரும் வேறு வேறு நிலையிலிருக்கின்றன. இவ்வுயிரானது அனுபவம் பெறும் பொருட்டு இத்தேகம் வழங்கப்பட்டுள்ளது. இவ்விரண்டையும் உள்ளம் பாலமாக இருந்து இணைக்கின்றது. உயிரை விட்டு உடலோ, உடலை விட்டு உயிரோ பிரியும் பொழுதோ மீண்டும் ஓர் உருவெடுத்து பிறவியாகின்றது. ஆக இவை பிரியாமல் இருந்தால் இறப்பில்லை, பிறப்பில்லை. அதாவது ஒரு வீட்டில் நாம் குடியிருக்கும்போது வீடு பழுதடைந்து விட்டால் வேறு வீட்டிற்கு குடி செல்கின்றோம். இருக்கக்கூடிய வீடு சொந்த வீடாக, உறுதியான வீடாக நல்ல வீடாக இருந்தால் என்றும் அவ்வீட்டிலேயே இருப்போம். அதுபோல் நல்லவீடான இம்மானிட தேகத்தை காயகல்பத்தால் குரு அருளால் சித்தியாக்கி ஞான தேகமாக்கி விட்டால் இத்தேகம் நமது சொந்த வீடாகும். பின்பு இறப்பில்லை, பிறப்பில்லை என்றும் இருக்கலாம், எங்கும் இருக்கலாம்.

வீட்டில் அம்மியில் குழவியினை தொடர்ந்து பயன்படுத்த அது தேய்ந்து பயனற்றதாகி விடுகிறது. ஆகையால் குண்டலி சக்தியை உலக காரியங்களுக்கு அளவோடு தான் பயன்படுத்த வேண்டும். இல்லையென்றால குண்டலியென்னும் குழவியானது மனமென்னும் அம்மியுடன் சேர்த்து உலக காரியங்கள் செய்ய குண்டலினி சக்தி இழப்பு ஏற்பட்டு சாகாக்கலைக்கு தடையை ஏற்படுத்திவிடும். ஆகையால் உலகநாட்டத்தில் நினைவு அளவுக்கு அதிகமாகச் செலுத்தக்கூடாது. (அளவு எது என்பதை அனுபவம் உணர்த்தும்.)

போகுமது யெப்படி யென்றெண்ணிடாதீர்
பொரிபுலனுஞ் சண்டையிடல் குழவிஅம்மி
ஆகுமது நாமரைக்கத் தேய்ந்தாற்போல
ஆசனங் களிட்டுவர அரைக்கும்வாசி
வேகுமது உள்க்கருவி காய்ந்ததாலே
வெள்ளாமை நீர்பாய்ந்து விளைவுபோலே
சாகுமது நீரில்லாக் காய்ந்தாற்சாவி
சந்ததிகள் உள்க்கருவி கொல்லுவாயே.

பாடல் : 56.

பாடல் 56 விளக்கவுரை:- நினைவானது தேவையில்லாத உலக காரியங்களில்ஈடுபடும்பொழுது குண்டலினிசக்தியினால்ஏற்படும் சுத்தாக்கினி பொறி புலன்களில் அடையும்போது அசுத்தாக்கினியாக மாறிவிடுவதால் புறக்கருவிகளையும் புற உணர்வுகளையும் பாதிக்க செய்து விடும். அதாவது நோய், முதுமை, நரைதிரை ஆகியவை ஏற்பட ஏதுவாகி விடும். இந்நிலையால் உட்கருவிகளான உடல் உறுப்புகளும் பழுதடைந்து விடும். இவ்வாறல்லாது நல்ல காரியங்களுக்கு பிறஉயிர் பேணும் பொருட்டு குண்டலினி சக்தியை புலன்களோடு சேர்க்கும்போது சுத்தாக்கினி விரிவால் நன்மையையே தரும். அதாவது புறஉடல், புறஉணர்வு இவற்றிலும் இந்த குண்டலினி சக்தி விரிந்து காய சித்தியை விரைவில் ஈட்டித் தரும்.

விவசாயம் செய்கின்றபோது முறையாக நீர்பாய்ந்தால் நல்ல விளைச்சலைத் தரும். நீர் பாய்ச்சாவிட்டால் வெள்ளாமை நெல் காய்ந்து சாவியாகிவிடும். ஆக, நல்ல வெளிச் செயல்கள் என்ற வெள்ளாமைக்கு குண்டலினி சக்தி என்ற சுத்தாக்கினி பாய்ச்ச நல்ல விளைச்சல் என்ற காய சித்தியைத் தரும். அவ்வாறு சுத்தாக்கினி என்ற நீர் உள்ளே இருந்தாலும் நல்ல செயல்கள் என்ற வெள்ளாமையின் மூலமாக வெளிக் கருவிகளான உடலின் மீது பாய்ச்சாவிட்டால் காயசித்தி என்ற விளைச்சல் கிடைக்காது. இவ்வுடல் காய சித்தி அடையாமல் அழிந்து விடும்.

வாவென்றால் வருவாரோ கொடுக்கார்பக்கம்
வருபவர்போல் வருவார்கள் கண்ணிற்றோணார்
தாவென்றாற் தருபவர்க ளஞ்சினோர்கள்
தருவார்கள் காலமறிந் துணர்ந்தபேர்கள்
தோவென்றா லோடிவரும் நாயைப்போலத்
தொல்புலித்தோல் நல்லாடை சாற்றிக்கொள்வார்
காவென்றாற் கூடுகிற கூட்டம்போலக்
கல்லெறிந்தா லோடுவரே காகம்போலே.

பாடல் : 57.

பாடல் 57 விளக்கவுரை :— இவ்வாறு குருவின் உபதேசத்தின்படி குண்டலினி சக்திஒளி ஒலியை இணைத்து உடல் முழுவதும் ஆதிக்கத்தினை செலுத்தி உயிர், உள்ளம், உடல் இம்மூன்றையும் ஒன்றாக்க வேண்டும்.

இந்நிலையை அடையாது, இந்தப் பயிற்சியினை முறை யாகச் செய்யாது எவ்வளவுதான் சுத்தாக்கினியை, குண்டலியை உற்பத்தி செய்தாலும் முடிவான இலட்சிய மாகிய மரணமிலாப் பெருவாழ்வினை அடைய முடியாது.

இவ்வாறு அல்லாது இருக்கும் குண்டலினி சக்தி அனுபவத்தால் பல சித்திகளை அடைந்தாலும் முடிவான இலட்சியமாகிய ஞான தேகத்தை அடைய இயலாது. குண்டலினி சக்தியால் இறைவனை அருகில் இருப்பது போல் உணர்வு இருக்கும். வருவது போல் தெரியும், கேட்ட தெல்லாம் தருவனபோல் இருக்கும். குண்டலினி சக்தியினை இழந்துவிட்டால் இந்நிலையெல்லாம் கனவு போலாகி விடும். ஆக இந்நிலையை நீ இழந்துவிட்டால் தெய்வமும் உன்னிடமிருக்காது. உன் சக்தியினை நீ இழந்துவிட்டால் கல்லெரிய காகம் ஓடி வருவதுபோல் யாரும் கூட இருக்க மாட்டார். ஏமாந்துவிடுவாய். ஆகையால் சர்வ ஜாக்கிரதை யாக இருந்து பிழைத்துக் கொள். (பசித்திரு, விழித்திரு, தனித்திரு என்பது பற்றி இதையே வள்ளல் பெருமானும் குறிக்கின்றார்கள்.)

○